# தமிழக மாநில நிதி

(STATE FINANCES OF TAMIL NADU)

சி. சிதம்பரம்



தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்

த. பா. நி. (க.வெ.) வரிசை எண் — 438

# தமிழக மாநில நிதி

ஆசிரியர்
சி. சிதம்பரம், எம்.ஏ., எம்.லிட்.,
திட்ட அலுவலர்,
மாநில திட்டக்குழு,
சென்னை.



தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்

# அணிந்துரை

திரு. இரா. நெடுஞ்செழியன்
(தமிழகக் கல்வி-உள்ளாட்சித்துறை அமைச்சர்)

தமிழைக் கல்லூரிக் கல்வி மொழியாக ஆக்கிப் பன்னிரண்டாண்டுகள் ஆகிவிட்டன. குறிப்பிட்ட சில கல்லூரிகளில் பி.ஏ. வகுப்பு மாணவர்கள் தங்கள் பாடங்கள் அனைத்தையும் தமிழிலேயே கற்றுவந்தனர். 1968ஆம் ஆண்டின் தொடக்கத்தில் புகுமுக வகுப்பிலும் (P.U.C.), 1969ஆம் ஆண்டிலிருந்து பட்டப் படிப்பு வகுப்புகளிலும் அறிவியல் பாடங்களையும் தமிழிலேயே கற்பிக்க ஏற்பாடு செய்துள்ளோம். தமிழிலேயே கற்பிப்போம் என முன்வந்துள்ள கல்லூரி ஆசிரியர்களின் ஊக்கம், பிற பல துறைகளிலும் தொண்டு செய்வோர் இதற்கெனத் தந்த உழைப்பு, தங்கள் சிறப்புத் துறைகளில் நூல்கள் எழுதித்தர முன் வந்த நூலாசிரியர்கள் தொண்டுணர்ச்சி இவற்றின் காரணமாக இத் திட்டம் நம்மிடையே மகிழ்ச்சியும் மனநிறைவும் தரத்தக்க வகையில் நடைபெற்று வருகிறது. இவ்வகையில், கல்லூரிப் பேராசிரியர்கள் கலை, அறிவியல் பாடங்களை மாணவர்க்குத் தமிழிலேயே பயிற்றுவிப்பதற்குத் தேவையான பயிற்சியைப் பெறுவதற்கு மதுரைப் பல்கலைக்கழகம் ஆண்டுதோறும் எடுத்துவரும் பெரு முயற்சியைக் குறிப்பிட்டுச் சொல்லவேண்டும்.

பல துறைகளில் பணிபுரியும் பேராசிரியர்கள் எத்தனையோ நெருக்கடிகளுக்கிடையே குறுகிய காலத்தில் அரிய முறையில் நூல்கள் எழுதித் தந்துள்ளனர்.

வரலாறு, அரசியல், உளவியல், பொருளாதாரம், தத்துவம், புவியியல், புவியமைப்பியல், மனையியல், கணிதம், இயற்பியல் வேதியியல், உயிரியல், வானியல், புள்ளியியல், விலங்கியல், தாவரவியல், பொறியியல் ஆகிய எல்லாத் துறைகளிலும் தனி நூல்கள், மொழிபெயர்ப்பு நூல்கள் என்ற இருவகையிலும் தமிழ் நாட்டுப் பாடநூல் நிறுவனம் வெளியிட்டு வருகிறது.

இவற்றுள் ஒன்றான 'தமிழக மாநில நிதி' என்ற இந் நூல் தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனத்தின் **438**ஆவது வெளியீடாகும். கல்லூரித் தமிழ்க் குழுவின் சார்பில் வெளியான **35** நூல்களையும் சேர்த்து இதுவரை **473** நூல்கள் வெளி வந்துள்ளன. இந் நூல் மைய அரசு கல்வி, சமூக நல அமைச்சகத்தின் மாநில மொழியில் பல்கலைக்கழக நூல்கள் வெளியிடும் திட்டத்தின்கீழ் வெளியிடப்படுகிறது.

உழைப்பின் வாரா உறுதிகள் இல்லை; ஆதலின், உழைத்து வெற்றி காண்போம். தமிழைப் பயிலும் மாணவர்கள் உலக மாணவர்களிடையே சிறந்த இடம் பெறவேண்டும். அதுவே தமிழன்னையின் குறிக்கோளுமாகும். தமிழ்நாட்டுப் பல்கலைக்கழகங்களின் பல்வகை உதவிகளுக்கும் ஒத்துழைப்புக்கும் நம் மனம் கலந்த நன்றி உரியதாகுக.

இரா. நெடுஞ்செழியன்

# பொருளடக்கம்

# 1. தோற்றுவாய்

## கூட்டாட்சி அடிப்படையில் மாநில நிதியாதாரம்

பொருளாதார வளர்ச்சியுறாத கூட்டரசு நாடாகிய இந்தியா, மற்றைய கூட்டரசு நாடுகளைப்போல் பொருளாதார, அரசியல், நிதிப் பிரச்சினைகளைக் கொண்டுள்ளது. இப் பிரச்சினையை விரிவாக அறியும்முன் கூட்டரசு அரசியல் அமைப்பினைச் செவ்வனே அறிவது நலம். 'கூட்டரசு' என்ற சொல்லின் பொருள் பல விதங்களில், பல காலங்களில், பல அரசியல் வல்லுநர்களால் விவரிக்கப் பட்டுள்ளது. பேராசிரியர் வியர் (Professor Wheare) கூட்டரசு நாடுகளைப்பற்றித் தந்த விளக்கம் தொன்மையானதாகவும், கூட்டரசின் இலக்கணமாகவும் திகழ்கிறது. அவர் அளித்த விளக்கம் பின்வருமாறு :

'முதன்மையாக, கூட்டரசின்கீழ் மைய அரசாங்கத்திற்கும் சம அந்தஸ்து உள்ள மாநில அரசாங்கங்கட்குமிடையே அதிகாரங்கள் பகிர்ந்து அளிக்கப்படவேண்டும். இரண்டாவதாக, ஒவ்வோர் அரசாங்கமும் தன்னுடைய ஆட்சியின்கீழ் வரக்கூடிய மக்களுடன் நேரடித் தொடர்பு ஏற்படுத்திக் கொள்ளவேண்டும். மூன்றாவதாக, ஒவ்வோர் அரசாங்கமும் தனது எல்லைக்கு உட்பட்ட நடவடிக்கைகளைப் பொறுத்தவரையில் பிற அரசாங்கங்களைச் சாராமல் இருக்க வேண்டும்.'[1]

மத்திய மாநில அரசாங்கங்களிடையே அதிகாரங்களைப் பகிர்ந்து தருதல் கூட்டரசு நாடுகளில் உள்ள முக்கிய அரசியல் அம்சமாகும். இந் நாடுகளில் கூட்டரசு அமைப்பதன் நோக்கமே ஒற்றுமை சிறந்தோங்கவும், அதிகாரங்களை மத்திய-மாநில அரசிடையே பகிரவும், நிர்வாகத்தில் பரவலான நிர்வாகம் அமைப்பதுமே ஆகும். அண்மையில் சுதந்திரமடைந்த சில

[1] Wheare — 'Federal Governments', III Edition, London, 1953, p. 7.

வளர்ச்சியுருத நாடுகள் தொன்மைக் கூட்டரசு இலக்கண முறையில் அரசியலமைப்பினை ஏற்படுத்த முனைந்து தோல்வியே அடைந்தன. இந்த நாடுகளில் கூட்டரசு ஏற்படுத்தும் ஆர்வத்தில் அமைக்கப் பட்ட அரசியலமைப்புகளில் இன்று இணைந்த கூட்டரசோ மறைமுக ஒருமுக ஆட்சியோதான் நிலவுகிறது. கூட்டரசு நாடுகளின் அம்சங்கள் காலத்திற்கேற்ப மாறும் தன்மையினை உடையன; வளர்ச்சியடைந்த நாடுகளில் அரசியல், பொருளாதார, சமூகச் சூழ்நிலைகள் சாதகமாக இருப்பதால் கூட்டரசு முறையும் செவ்வனே பாதுகாக்கப்பட்டு வருகிறது. ஆனல், வளர்ச்சியுருத நாடுகளில் நிதிப் பிரச்சினைகளும், அரசியல் பிரச்சினைகளும் கூட்டரசு முறை இயங்குவதற்குத் தடையாகவும் பாதகமாகவும் காணப்படுகின்றன.

இந்திய அரசியலமைப்பு, கூட்டரசு முறையில் அமைக்கப் பட்டுள்ளதா என்பதைப்பற்றிப் பல அரசியல் வல்லுநர்கள் சந்தேகப்படுகின்றனர். கடந்த இருபது ஆண்டுகளில் இந்திய அரசியல் மாற்றங்கள் கூட்டரசு நாடுகளுக்குப் புறம்பானவை யாகக் காணப்படுகின்றன. இந்தியாவில் பல கூட்டரசு கோட்பாடுகள் அறவே அழிக்கப்பட்டுள்ளன என்று சிலர் எண்ணு கின்றனர். அரசியல் சட்டம் அமலுக்கு வந்தபோதே C.D. தேஷ்முக்[1], P.T. சாக்கோ[2] போன்ற பலர் இந்தியாவில் கூட்டரசு என்ற பெயரில் ஒருமுக ஆட்சியே அமைக்கப்படுகிறது என்று குறைகூறினர். திரு. K. C. வியர் இந்தியா ஓர் 'அரைக் கூட்டாட்சி' (Quasi-Federation)[3] என்று விளம்பியுள்ளார். திரு. கிருஷ்ண முகர்ஜி இந்தியா கூட்டாட்சியில்லாத ஒருமுக ஆட்சியே[4] என்று கூறுகிருர். இந்திய அரசியல் சட்டத்திலே கூட்டாட்சி என்ற சொல்லைக் காணுதல் அரிது; இந்தியா மாநிலங் களின் இணைப்பு (Union of States) என்றே[5] பெயரிடப் பட்டுள்ளது.

மேலும், சிலர் நமது அரசாங்கக் கூட்டரசு அம்சங்கள் ஒருமுக ஆட்சியை மறைக்கவே தவிர மறுக்கவில்லை என்று கூறுகின்றனர்.

[1] Deshmukh, C. D. — 'Constituent Assembly, Debate,' XI. 8, p. 778.

[2] Chacko, P. T. — 'Constituent Assembly Debates', XI. 9, p. 884.

[3] Wheare, K. C. — 'Federal Governments'.

[4] Krishna, P. Mukerjee — 'Is India A Federation?', Indian Journal of Political Science, July--Sept, 1959, p. 177.

[5] 1949-ல் வெளியிட்ட அரசியல் சட்டத்தில் காணப்பட்ட கூட்டாட்சி நீதித்துறை என்ற சொல்லும் 'Union Judiciary' என்று பிறகு மாற்றப் பட்டது.

டாக்டர் அம்பேத்கார்[1] (அரசியற் புனைசபைத் தலைவர்), இந்தியா ஒரு கூட்டரசு நாடு என்பது திண்ணம் என்ற கருத்தினையுடையவர். இந்தியாவில் தனியே அதிகாரங்களைக் கொண்ட மத்திய–மாநில அரசாங்கங்கள் இருப்பதே இதற்குச் சான்று. திரு. டி. டி. கிருஷ்ணமாச்சாரி[2], க. சந்தானம்[3] போன்ற அரசியற் புனைசபை உறுப்பினர்களும் இக் கருத்தினையே தெரிவித்துள்ளனர். இந்திய அரசியல் சட்டம் சந்தேகமின்றி ஒரு கூட்டரசு நாட்டினை ஏற்படுத்தியுள்ளது என்று கிருஷ்ணமாச்சாரியார் அரசியற் புனைசபையில் கூறினார்.

திரு. அலெக்சாண்ட்ராவிக்ஸ்[4], பால் எச். ஆப்பிள்பி[5] போன்ற சில அயல்நாட்டு அரசியல் வல்லுநர்களும் இந்திய அரசியலமைப்பு, கூட்டரசு அடிப்படையிலேயே அமைக்கப்பட்டுள்ளது என்றே கூறியுள்ளனர்.

அரசாங்க அதிகாரங்கள் மத்திய மாநில அரசாங்கங்களிடையே பங்கிடப்படுவது கூட்டாட்சி அரசின் இன்றியமையாத அம்சமாகும். சில கூட்டரசு நாடுகளில் அரசியல் சட்டத்தில் மத்திய அரசின் அதிகாரங்களைக் குறிப்பிட்டு, எஞ்சியவை மாநிலங்களுக்கு வழங்கப்பட்டுள்ளன. சில கூட்டரசுகளில் மாநிலங்களின் அதிகாரங்களைக் குறிப்பிட்டு, எஞ்சியவை மத்திய அரசிற்கு விட்டுவிடப்பட்டிருக்கின்றன. இந்தியக் கூட்டாட்சியில் சில அதிகாரங்கள் மத்திய அரசிற்கும், சில அதிகாரங்கள் மாநில அரசாங்கத்திற்கும், மற்ற அதிகாரங்கள் ஒருங்கிணைந்த பொது அதிகாரங்களாகவும் பிரிக்கப்பட்டுள்ளன.

இந்தியாவில் அரசியல் சட்டத்தில் பகிர்ந்து தரப்பட்டுள்ள அதிகாரங்கள் மத்திய அரசிடம் அதிகமாகவும், மாநில அரசாங்கங்களிடையே குறைவாகவும், ஒருங்கிணைந்த அதிகாரங்களை மத்திய அரசு மேற்கொள்ள உரிமையும் கொடுக்கப்பட்டுள்ளன. இந்திய அரசியல் சட்டத்தில் 3, 4, 352, 356, 360 பிரிவுகள்படி மத்திய அரசாங்கத்திற்கு மாநில அரசாங்கம் கீழ்ப்படியும்படி செய்ய அதிகாரங்கள் வழங்கப்பட்டுள்ளன. மேலும், நமது நாட்டில் திட்டமிட்ட முன்னேற்றம் தொடங்கியது முதல் திட்டக்

[1] Ambedkar — 'Constituent Assembly Debates', VII, I. p. 31.

[2] Krishnamachari, T. T. — 'Constituent Assembly Debates,' VII, p. 1132.

[3] Santhanam, K. — 'Constituent Assembly Debates', XI. 6, p. 718.

[4] Alexandravicz — 'Constitutional Development in India' Madras, 1957, p. 169.

[5] Paul H. Appleby — 'Public Administration in India. Report of Survey' 1953, p. 51.

குழு மைய அரசின் நிதி அதிகாரங்களை அதிகரித்தது. சென்ற நூற்றுண்டில் கூட்டரசு நாடுகளில் மத்திய மாநில நிதிநிலை உறவுகள் சாதகமாகவே இருந்தன. மாநிலங்களுக்குள்ள பணிகளுக்கு ஏற்ப வருவாயும் இருந்தது. மத்திய அரசை நம்பி நிதி நிலைத் திட்டம் அமைக்கவேண்டிய அவசியம் ஏற்படவில்லை. ஆனால், இன்று இந்தியாவில் இதற்கு எதிர்மாறான நிலையே தோற்றமளிக்கிறது. மாநிலங்கள் தமது திட்டத்தை வகுக்கவும், வரவு-செலவுத் திட்டத்தை மேம்படுத்தவும் மத்திய அரசின் உதவியினை எதிர்பார்க்கின்றன. பேராசிரியர் வியர் கூறிய கூட்டரசு இலக்கணத்திற்கேற்ப இந்திய அரசியல் சட்டம் அமையாது இருக்கிறது என்று எண்ணப்படுகிறது. இக் காரணங்களால் தான் இந்திய அரசியலமைப்பினைக் 'கூட்டரசு முறையில் அமைந்த ஒருமுக ஆட்சி' என்றும் 'கூட்டரசு முறையினைக் கவசமாகக் கொண்ட ஒருமுக ஆட்சி' என்றும் குறைகாண்கின்றனர். இவ்வாறு இந்தியக் கூட்டரசு அரைக் கூட்டரசு என்று குறைகூறக் காரணம், தொன்மைக் கூட்டரசு இலக்கணக் கண்ணோடு ஆய்ந்தமையே ஆகும். கூட்டாட்சி முறை இடத்திற்கும், காலத்திற்குமேற்ப மாறுபடும் தன்மையினையுடையது. எந்த நாடும் கூடியவரை கூட்டரசு அரசாங்கம் ஏற்படுவதைத் தவிர்க்கவே முயலும்.[1] இந்தியாவில் கூட்டாட்சி ஏற்பட ஏதுவாக இருந்தவை இந்திய வரலாறும் அரசியல், சமூகச் சூழ்நிலையும், ஒற்றுமையின்மையுமாகும். கூட்டரசு அரசாங்கங்கள் அரசியல் இலக்கணத்தைக் கொண்டு ஏற்படுத்தப்பட்டவை அல்ல; அந்த நாட்டின் பொருளாதார, சமூகக் கூறுகளால் நிர்ணயிக்கப்படுபவை.[2] இந்தியக் கூட்டரசு இணைக்க இயலாதது போல் தோன்றிய தேசிய இறைமையையும் மாநில இறைமையையும் இணைக்கவே ஏற்படுத்தப்பட்டது. இந்தியாவில் மக்களிடையே தோன்றிய ஏற்றத்தாழ்வுகளையும் மாநிலங்களிடையே பொருளாதார முன்னேற்றத்தில் காணப்பட்ட ஏற்றத்தாழ்வுகளையும் போக்கக் கூட்டரசு முறை அவசியம் என்று எண்ணினர்.

இந்தியக் கூட்டரசில் அதிகாரங்கள் மத்திய-மாநில அரசாங்கங்களிடையே பிரிக்கப்பட்டிருந்தும், சுதந்திரம் அடைந்த பின் முதல் பத்து ஆண்டுகளில் அரசியல் அதிகாரங்கள் மாநில அரசாங்கத்திடம் இருந்து மத்திய அரசுவசம் மாற்றப்பட்டன; அடுத்த பத்து ஆண்டுகளில் மத்திய அரசிடம் நிதித்துறை அதிகாரக் குவிப்பு

[1] Ivor Jennings — 'Some Characteristics of Indian Constitution,' Madras, 1953, p. 55.

[2] J. A. Corry — Quoted in 'Constitutional Trend and Federalism', in A. R. M. Lower's 'Evolving Canadian Federalism' Durham, 1958, p. 96.

ஏற்பட்டது. அரசியல் சட்டத்தில் காணுத செலவு வரி, அன்பளிப்பு வரி, நிறுவன வரி, நிலச் சொத்து வரி, மூலதன இலாப வரி போன்ற புதிய வரிகளை விதித்து மத்திய அரசு தனது நிதி நிலையைப் பலப்படுத்தியது. இதைத் தவிரப் பொருளாதார வளர்ச்சிக்கு வருவாயினைப் பெருமளவில் ஈட்டித்தரும் சுங்க வரி, வருமான வரி, ஆயத்தீர்வை போன்ற வரி வாயில்கள் மத்திய அரசின் அதிகாரத்தில உள்ளன. மாநில வரிகளுள் விற்பனை வரி தவிர மற்ற வரிகள் வருமான வளர்ச்சிக்கேற்ப நெகிழ்ச்சியுடையன அல்ல. மாநிலங்களின் வருமான வளர்ச்சி அவற்றின் செலவைவிடக் குறைந்து காணப்படுகிறது. 'இவ்வாறு உரிமை ஒருபுறமும், கடமைப் பொறுப்பு மற்றொரு புறமும் இருக்கும் படியான விந்தை நிலைதான் நம்முடைய சிக்கல்கள் அனைத்திற்கும் அடிப்படைக் காரணம்.'[1]

நமது நாடு கூட்டரசாக உருவாகாமல் ஒருமுக ஆட்சியோடு இருந்தால் வரிக் கொள்கையும், செலவுக் கொள்கையும் ஒரே சீரான முறையில் அமலாக்கலாம். இந்தியா ஒருமுக ஆட்சி அமைக்காமல் கூட்டாட்சி அமைத்ததற்குக் காரணம் 1948-ல் இந்தியாவில் ஐந்நூற்றுக்கு மேற்பட்ட குறுநில மன்னர்கள் மிக அவல நிதிநிலை கொண்ட சிறிய மாநிலங்களை ஆண்டு வந்தனர். கூட்டாட்சி முறையும், கூட்டு நிதிக் கொள்கையும், அரசியல் ரீதியிலும், பொருளாதார ரீதியிலும் ஒற்றுமை உண்டாக்க அவசியமாகத் தோன்றின. இந்தியாவில் கனிச் செல்வம் எல்லா மாநிலங்களிடையேயும் சமமாக இயற்கையாகப் பகிரப் பட்டிருந்தால் முன்னேற்றத்தில் ஏற்றத்தாழ்வுகள் ஏற்பட வழியில்லை. ஆனால், இந்தியாவில் சில மாநிலங்கள் பொருளாதார முன்னேற்றம் அடையச் சாதகமாக அங்கே கனிப் பொருள்கள் செறிவடைந்துள்ளன. சில மாநிலங்களில் அதிகத் தொழில் வளர்ச்சி ஏற்படக் காரணம் ஆங்கிலேயர் காலத்திலேயே இம் மாநிலங்களின் தொழில் வளர்ச்சியில் அதிக ஊக்கம் காட்டப் பட்டது. மேற்கு வங்காளத்திலும், மகாராஷ்டிரத்திலும் இன்று தொழில் முன்னேற்றம் பாராட்டத்தக்க வகையில் இருக்கக் காரணம் தனியார் துறை இம் மாநிலங்களின் தொழில் வளர்ச்சியில் கடந்த நூற்றாண்டு முதல் முக்கியத்துவம் கொடுத்தன. கூட்டரசு அமைப்பு அரசியல் ரீதியில் எல்லா மாநிலங்களையும் இணைக்குமானால், பொருளாதாரக் கூட்டரசு முறை (Economic Federalism) மாநிலங்களிடையே பொருளாதார முன்னேற்றத்தில் காணப்படும் ஏற்றத்தாழ்வுகளை ஒழிக்க வேண்டும்.

[1] மு. கருணாநிதி — 1971-72 ஆம் ஆண்டு நிதிநிலை அறிக்கை, தமிழக அரசு, 1971, p. 6.

கூட்டாட்சி முறைக்குச் சில மாநிலங்கள் இசைந்ததற்குக் காரணம் தாம் தனியே இயங்குவதைவிடக் கூட்டரசில் பல்வேறு நன்மைகள் அடையலாம் என்ற நம்பிக்கையே ஆகும். இந்தியாவில் மூன்று ஐந்தாண்டுத் திட்டங்கள், மூன்று ஓராண்டுத் திட்டங்கள் கடந்தும், எல்லா மாநிலங்களிடையேயும் ஒரேதரமான முன்னேற்றம் ஏற்படவில்லை. கூட்டாட்சியில் பொருளாதார முன்னேற்றமடையாத மாநிலங்கள், தாம் பயனடையவில்லை என்ற கருத்தினைக் கொண்டுள்ளன. இப் பின்தங்கிய மாநிலங்களில் மக்களிடையே தேசிய உணர்ச்சிக்குப் பதில் குறுகிய மாநில மனப்பான்மையே தோன்றியுள்ளது. இதனால் உள்நாட்டுப் போரும் ஏற்படலாம் என்ற உண்மையை நைஜீரிய நாட்டு அண்மை வரலாற்றினின்று நன்கு அறிவோம். ஒருமுக அரசியல் அமைப்பைக் கொண்ட மாநிலங்களில் இந்தப் பிரச்சினைகள் தோன்றுவதில்லை.

பிரிட்டனில் ஸ்காட்லாந்துப் பகுதி கடந்த ஐம்பது ஆண்டுகளில் மற்றப் பிரிவுகளைப்போல் முன்னேற்றமடையவில் லை. ஆனால் அங்குள்ள மக்கள் மற்றப் பகுதிகளில் வாழும் மக்கள் பெறும் சமூக சேவை உதவிகளைப் பெறுகின்றனர்.[1] ஆனால், இந்தியா போன்ற கூட்டாட்சி நாடுகளில் மாநிலங்களில் வாழும் மக்கள் எல்லாம் ஒரே தரமான சமூக நல உதவிகளைப் பெறுதல் அரிது. வளர்ச்சியுறாத மாநிலங்களில் அளிக்கப்படும் சமூக நல சேவைகள் மற்ற வளர்ச்சியடைந்த மாநிலங்களைவிடக் குறைந்தே காணப்படும். இத்தகைய முன்னேற்றம் அடையாத, பின் தங்கிய மாநிலங்கள் ஒருமுக ஆட்சியில் சேரவிரும்பினால், அரசியல் முக்கியத்துவம் இழக்கக்கூடும்; ஆனால், அதிகப் பொருளாதார, சமூக நல உதவிகளை மக்களுக்கு அளிக்கமுடியும். கூட்டரசாட்சியிலே இந்த வளர்ச்சியுறாத மாநிலங்கள் சேர்ந்தால், அரசியல் முக்கியத்துவம் கிடைக்குமே தவிர வேண்டிய அளவு நிதிவலிமை கொண்டிருத்தல் அரிது. இந்தியக் கூட்டரசின் அரசியலமைப்பு, சுதந்திரம் அடைந்தபோது விளங்கிய அரசியல், பொருளாதார, சமூகச் சூழ்நிலைகளின் படைப்பாகும். 1948–க்கு முன்னர் ஐந்நூற்றுக்கும், மேற்பட்ட பல சிறிய குறுநில மன்னர்கள் பெரும்பாலான பகுதியினை ஆண்டு வந்தனர். இக் குறுநில மன்னர்கள் ஆண்ட மாநில அளவு மிகச் சிறியதாக இருந்தது மட்டுமன்றி நிதிநிலை மிகவும் அவல நிலையில் இருந்தது.

[1] Birch, A. H. — 'Federalism, Finance and Social Legislation', Oxford, 1956, p. 134.

இந்தியாவில் அன்று நாட்டில் ஒற்றுமையை வளர்க்கக் குவிமையைப் (Centripetal) போக்கக்கூடிய சக்திகளேயும், விரிமையைப் (Centrifugal) போக்கக்கூடிய ஒற்றுமையில் பிளவு ஏற்படுத்தும் சக்திகளேயும் கட்டுப்படுத்தக் கூட்டரசு முறை அவசியம் ஏற்பட்டது. இந்தியக் கூட்டரசு முறை அமெரிக்க, ஆஸ்திரேலிய நாட்டில் திகழும் கூட்டாட்சி முறை போலக் காணப்படவில்லே. மாநிலங்களும் மத்திய அரசும் பல துறைகளில் ஒரு கூட்டு மனப்பான்மையோடே இயங்குகிறது. மேலும், அரசியல் சட்டத்திலே பகிர்ந்து தரப்பட்டுள்ள அதிகாரங்களும், பொறுப்பும் இந்திய அரசியல் அமைப்பினேக் கூட்டுறவுக் கூட்டாட்சி (Co-operative Federalism) என்று கூறலாம் என்று Dr. A. H. பிர்ச்[1] என்ற அரசியல் நிபுணர் கூறுகிருர்.

கடந்த இருபதாண்டுகளில் இந்திய அரசியல் சட்டத்தில் ஏற்பட்ட பல திருத்தங்கள் மத்திய-மாநில உறவுக்குத் தீங்குகள் பல ஏற்படுத்தியுள்ளன. சுதந்திர இந்தியாவில் முதல் பத்தாண்டுகளில் அரசியல் அதிகாரங்கள் பல மாநில அரசாங்கத்திடமிருந்து மைய அரசாங்கத்திற்கு மாற்றித் திருத்தியமைக்கப்பட்டன; அடுத்த பத்தாண்டுகளில் நிதி அதிகாரங்கள் மாநில அரசிடமிருந்து மத்திய அரசின்வசம் மாற்றப்பட்டன. 1967-க்குப் பிறகு நிதி அடிப்படையிலே உள்ள மத்திய-மாநில உறவுகளேப் பற்றிய பிரச்சினேகள் வாதத்துக்கிடமாகக் காணப்படுகின்றன. இது விந்தையானதன்று. ஏனென்ருல், மாநிலங்கள் கொண்ட பல பிரச்சினேகளுக்கு மூலகாரணம் அரசியல் சட்டத்தில் அதிகாரங்கள் பிரிக்கப்பட்டுள்ள பிரிவில் உள்ள குறைபாடுகளாகும். உதாரணமாக, இன்று சில மாநிலங்களில் அதிகப் பற்றும் (Over Draft) கடன் சுமையும் இருக்கக் காரணமே அரசியல் சட்டத்தில் நேர்மையற்ற முறையில் அதிகாரங்களேப் பகிர்ந்திருப்பதேயாகும். இதைப் போலவே மாநிலத் திட்ட அளவை நிர்ணயிப்பதில் ஏற்படும் பிரச்சினேகளுக்குக் காரணமும், மாநிலங்கள் போதிய அளவு நிதி திரட்ட முடியாமல் இருக்கக் காரணமும் நமது அரசியல் சட்டத்தில் நிதி அதிகாரங்கள் மத்திய அரசிடம் குவிப்பாகியிருப்பதே.

இந்திய அரசியல் சட்டத்தில் பிரிவு 268, 281, மாநில-மத்திய அரசாங்கங்களிடையே வருமானம் பகிர்வதுபற்றி விளக்கியுள்ளன. ஏழாவது சட்ட இணைப்பில் மத்திய அரசு பட்டியலில்

[1] Birch, A. H. — 'Federalism, Finance and Social Legislation,' Oxford, 1953, p. 306,

குறிப்பெண் 82 முதல் 92 (அ) வரையிலும், மாநில அரசு பட்டியலில் குறிப்பெண் 45 முதல் 63 வரை மத்திய-மாநில வரி வாயில்கள் கூறப்பட்டுள்ளன. மத்திய அரசிடம் உள்ள வரி வாயில்களைப் பின்வருமாறு பாகுபடுத்தலாம்:

1. மாநிலங்களுக்குப் பகிர்ந்து தராமல் மத்திய அரசாங்கத்திற்கே சாரும் வரி வருமானம், இவ்வகை வரிகளில் முக்கியமானவை:

(1) சுங்கத் தீர்வை (Customs duties) (ஏற்றுமதி வரி உட்பட)

(2) கூட்டு நிறுவன வரி (Corporation tax)

(3) மூலதனச் சொத்து வரி (Tax on capital assets)

2. மத்திய அரசால் வரி விதிக்கப்பட்ட வருமானத்தைக் கட்டாயம் மாநிலங்களோடு பகிரப்படும் வரிகள். வருமான வரி (வேளாண்மை வருமானம் தவிர)

3. மத்திய அரசால் விதிக்கப்பட்டு மாநில அரசால் திரட்டப்பட்டு, மாநிலங்களோடு விரும்பினால் பகிரப்படும் வரித் தீர்வைகள் :

புகையிலை ஆயத் தீர்வை, வெறிநீர், மரமரப்பூட்டும் மருந்து தவிர மற்ற எல்லாப் பொருள்களின் உற்பத்திமீது விதிக்கும் ஆயத்தீர்வை இந்த வகையைச் சேர்ந்தது.

4. மத்திய அரசு திரட்டி மாநிலங்களுக்குச் சேரும் வரிகள் :

(1) வேளாண்மை நிலச் சொத்தைத் தவிர மற்றவைமீது இறப்பு வரியும், மரபுரிமை வரியும் (Succession duty).

(2) பிரயாணிகள், பொருள்கள் மீது விதிக்கப்படும் ஊர் எல்லை வரி.

(3) ரெயில்வேப் பிரயாணிகள் வரி.

(4) பத்திரம் தவிரப் பங்குச் சந்தையில் விதிக்கும் வரி,

(5) செய்தித்தாள் விற்பனை வரி, விளம்பர வரி.

(6) மாநிலங்களிடையே ஏற்படும் வாணிக வரி.

5. மத்திய அரசால் விதிக்கப்பட்டு மாநிலங்களால் திரட்டித் தமதாக்கிக் கொள்ளும் வரிகள்:

(1) முத்திரைத் தாள்கள்,

(2) மருத்துவ, ஒப்பனைப் பொருள்கள்மீது ஆயத்தீர்வை (Excise on medicinal and toilet products).

இந்த வரிப்பாகுபாட்டின்படி மாநிலங்களின் முக்கிய வரிகள் :

(1) நிலவரி,
(2) வெறிநீர், மரமரப்பூட்டும் பொருள்கள்மீது விதிக்கும் ஆயத்தீர்வை,
(3) முத்திரைகள்,
(4) பத்திரங்கள்,
(5) வண்டி வரி,
(6) கேளிக்கை வரி,
(7) மின்சாரத் தீர்வைகள்,
(8) வேளாண்மை வருமான வரி,
(9) சொத்துரிமைவரி.

இந்தியாவில் மற்றச் சில கூட்டரசு நாடுகளைப்போல் மத்திய அரசாங்கம் மாநிலங்களைவிட வரி அதிகாரத்திலும் வரி வருவாயிலும் வலிமை வாய்ந்ததாகக் காணப்படுகிறது.[1]

மத்திய அரசாங்கம் அரசியல் சட்டத்தில் இடம் பெறாத செலவு வரி, நிலச் சொத்து வரி, அன்பளிப்பு வரி, மூலதன இலாப வரி, நிறுவன வரி முதலிய புதிய வரிகளை விதித்துத் தனது நிதி அதிகாரங்களைப் பெருக்கிக் கொண்டது. நமது அரசியல் சட்டத்தை இயற்றிய அறிஞர்கள் நிதி அதிகாரங்களைப் பகிரவும், மத்திய–மாநில அரசாங்கங்களிடையே ஏற்றத்தாழ்வுகள் மறையாது என்றெண்ணி மாநிலங்களுக்கு உதவவுமே 275ஆம் பிரிவைச் சேர்த்தனர். இதன்படி மக்கள்சபை மாநிலங்களுக்கு உதவி மானியங்கள் வழங்கச் சட்டம் இயற்றலாம். இந்த 275 (1) பிரிவுப்படி பின்தங்கிய வகுப்பினர் (Scheduled caste) முன்னேற்றத்திற்காக உதவியும் மற்ற உதவிமானியம் வழங்கவும் வழி வகுத்துள்ளது. இதைத்தவிர 282ஆம் பிரிவுப்படி மத்திய அரசு மாநிலங்களின் திட்டத்திற்கு உதவி மானியமும் அளிக்கிறது.

மாநிலங்களுக்கென்றே வரி அதிகாரங்களைக் கொடுத்து, உதவி மானியங்கள் வழங்கியும் மாநிலங்களின் நிதிநிலைமை சாதகமாக இல்லை. மாநில வரிகள் எண்ணிக்கையில் அதிகமானாலும் வருமானத்திற்கேற்ப வளரும் நெகிழ்ச்சியை உடையன அல்ல. பல நேர்முக வரிகள் மத்திய அரசிடம் பகிர்ந்து தரப்பட்டிருப்பதால் மத்திய அரசின் வருவாய் நிலையானதாகவும் வளரும்

[1] D. R. Gadgil — 'Planning and Economic Policy in India', Asia Publishing House, 1965, p. 25.

தன்மையினை உடையதாகவும் திகழ்கின்றது. ஆனால், இந்தியப் பொருளாதார முன்னேற்றத்தில் மாநில அரசின் பங்கு மிகவும் முக்கியம். கல்வி, பாதுகாப்பு, வேளாண்மை, பொதுச் சுகாதாரம் போன்ற சில முக்கியத் துறைகள் மாநில அரசின் வசம் உள்ளன. அரசியல் சட்டத்தில் மாநில அரசாங்கத்திற்குக் கொடுக்கப்பட்டுள்ள பணிகளும், பொறுப்புகளும் அதிகச் செலவினைக் கொண்டவை. அப் பணிகள் பெருஞ்செலவாகக் கூடியவை மட்டுமல்ல; அவை வளரும் தன்மையுமுடையவை. ஆனால், மாநில அரசாங்கங்களுக்கு அளிக்கப்பட்டுள்ள வரி வாயில்கள் வருமானத்திற்கேற்ப வளரும் நெகிழ்ச்சியுடையன அல்ல. நமது நாட்டில் பொருளாதார வளர்ச்சிக்குத் தேவையான சூழ்நிலையினை உண்டாக்குவதே மாநிலங்கள்தாம். தொழில் வளர்ச்சிக்கும், வேளாண்மை வளர்ச்சிக்கும் தேவையான மின்சக்தி, நீர்ப்பாசன வசதிகளைப் பெருக்குவது மாநில அரசாங்கமாகும். கடந்த மூன்று ஐந்தாண்டுத் திட்டங்களில் மாநிலங்களின் பங்கைப் பின்வரும் அட்டவணை விவரிக்கிறது.

| * திட்டம் | மொத்தச் செலவு | மாநிலங்களின் செலவு | மொத்தச் செலவில் மாநில அரசின் பங்கு |
|---|---|---|---|
| | (ரூ. இலட்சத்தில்) | | |
| 1951–56 | 1,960 | 1,427 | 73% |
| 1956–61 | 4,600 | 1,981 | 43% |
| 1961–66 | 8,631 | 4,155 | 48% |
| 4ஆவது திட்டத்தின் மூலம் : | 16,000 | 7,073 | 44% |

* மூன்றாவது திட்டம், p. 88, 89, நான்காவது திட்டம் (Draft), p. 74.

முதல் திட்டத்தில் மொத்தச் செலவில் மாநிலங்கள் 73 சதவிகிதம் மேற்கொண்டுள்ளன. இரண்டாவது திட்டத்தில் 43 சதவிகிதமாகவும், மூன்றாவது திட்டத்தில் 48 சதவிகிதமாகவும், நான்காவது திட்டத்தில் 44 சதவிகிதமாகவும் காணப்படுகிறது. மொத்தச் செலவில் மாநிலச் செலவு சதவிகித முறையில் குறைந்து தோன்றினும், மொத்த அளவிலே உயர்ந்துகொண்டே செல்கிறது. திட்டங்கள் அமைப்பதில் மத்திய அரசின் பணி நீண்ட காலத் திட்டத்தின் அளவினையும், செலவு அளவினையும், உற்பத்தி

அளவினையும் நிர்ணயிப்பதேயாகும். ஆனால், மாநிலங்களின் பணி, திட்டங்களை எல்லாத் துறைகளிலும் வெற்றியடைய உதவி செய்து மக்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்துவதேயாகும்.

இக் கூட்டரசு நாடுகளில் தோன்றும் மற்றொரு தலையாய பிரச்சினை சமூகத் தொண்டுக்கான செலவை எந்த அரசு மேற்கொள்வது என்பது. வளர்ச்சியுறாத மாநிலங்களில் சமூகப் பணிகளின் தரம் குறைந்தே காணப்படுகிறது. இதற்கும் நிதி நிலையே காரணமாகும். பின்தங்கிய மாநிலங்களில் சமூகப் பணிகளைச் செவ்வனே செயலாக்க அதிக உதவிமானியங்கள் அளிக்க வேண்டும். ஆனால், உதவிமானியத் தொகையைப் பெருக்குவது எளிதானதன்று. இதனால் பலவிதப் பிரச்சினைகள் தோன்றியுள்ளன. மத்திய–மாநில நிதிப் பிரச்சினைகள் பெரும்பாலும் எல்லா மாநிலங்களிலும் காணப்படுகின்றன. கனடாவில் டெரம்பிலிக் குழு அறிக்கை (Report of Trembly Commission) கனடாவில் மத்திய–மாநில அரசாங்கங்களிடையே உள்ள நிதிப் பிரச்சினைகளை வெளியிட்டுள்ளது. வேலையில்லாத் திண்டாட்டம், சமூகப் பாதுகாப்பு, குடும்ப உதவித்தொகை போன்ற பிரச்சினைகளை மாநில அரசே தீர்வு காணவேண்டும் என்று இக் குழு விரும்பியது. மாநிலங்களின் வருமானம் செலவுக்கேற்ப வளராமையால் 1956 முதல் மத்திய-மாநில வரி பகிர்ப்புச் சட்டப்படி மாநிலங்கள் அதிக வருமானம் பெறச் சில புதிய முயற்சிகள் மேற்கொண்டன. ஆஸ்திரேலியக் கூட்டரசில் மத்திய அரசு வருமான வரி விதிக்கும் உரிமையை மாநில அரசாங்கங்களிடையே இருந்து பெற்று, அதற்குப் பதில் இழப்பு நிதியாக உதவிமானியங்களை வழங்கி வருகிறது. மக்கள்தொகை வளர்ச்சிக்கும், ஊதிய வளர்ச்சிக்கும் ஏற்ப இந்த உதவித்தொகை உயர்த்தப்படுகிறது. 1946-ல் இந்த ஒப்பந்தப்படி மாநிலங்களுக்கு வழங்கப்பட்ட இழப்புத் தொகை £ 40 மில்லியன்; 1957–ல் இத் தொகை 174 மில்லியன் ஆஸ்திரேலிய ஸ்டர்லிங்காக உயர்ந்தது. இவ்வாறு மற்றக் கூட்டரசு நாடுகளிலும் மாநில அரசின் நிதி அதிகாரங்கள் வலுப்படுத்தப்பட்டுள்ளன. அல்லது அதிக உதவி பெற வாய்ப்பினை அரசியல் சட்டத்திலே ஏற்படுத்தியுள்ளனர்.

மற்றைய கூட்டரசு நாடுகளில் தோன்றிய சில நிதிப் பிரச்சினைகளைக் கண்டோம். கூட்டரசு நாடுகளிலே திட்டமிட்ட முன்னேற்றப் பாதையில் உள்ள நாடு இந்தியாவாகும். மத்திய அரசோடு ஒருங்கிணைந்து ஒற்றுமையாகப் பொருளாதார முன்னேற்றத்தில் ஈடுபட்டிருக்கும். மாநிலங்களின் நிதிநிலை என்ன? மாநில அரசாங்கங்கள் எந்த அளவு தம்

வருமானத்தைக் கொண்டு திட்டம் வகுத்திருக்கின்றன? இதனால் மாநில அரசாங்கங்களின் நிதிநிலை எப்படிப் பாதிக்கப்பட்டிருக்கிறது? மத்திய அரசின் உதவிமானியம் மாநில அரசின் நிதி நிலைமையைச் சீரமைக்க எவ்வளவு உதவியாக இருந்தது? மாநிலங்களின் நிதிக் கொள்கை மாநிலங்களின் வருமானத்தைப் பெருக்கியதா? மாநில அரசாங்கங்களின் தோரணை என்ன? மாநிலக் கடன் வளர்ச்சியும் அதனால் ஏற்படும் சிக்கல்களும் என்ன? என்ற பல வினாக்கள் தோன்றுகின்றன. அவற்றிற்கு விடை காணுதல் அவசியம். தமிழ் மாநில நிதிநிலையினை அடிப்படையாகக் கொண்டு இங்கே ஆராய்வோம்.

தீந்தமிழின் பிறப்பிடத்தையும், தொன்மை வரலாற்றினையும் கொண்ட தமிழகம் 1,29,966 சதுர கிலோ மீட்டர் பரப்பளவும், 33·69 மில்லியன் மக்கள்தொகையினையுங் கொண்டு இந்தியக் கூட்டரசின் தென்கோடியிலே திகழ்கிறது. மொத்தப் பரப்பளவில் மற்ற மாநிலங்களோடு ஒப்பிட்டுப் பார்க்கும்போது பன்னிரண்டாவது இடத்தினையும், மக்கள்தொகை வாரியாக ஆறாவது இடத்தையும் பெற்றுள்ளது. மொத்த மக்கள் தொகையில் 60·5% வேளாண்மைத் துறையில் ஈடுபட்டுள்ளனர். தமிழகப் பொருளாதார முன்னேற்றம் வேளாண்மை உற்பத்தியைப் பொறுத்துள்ளது. மக்கள் வாழ்க்கைத்தரம் உயரவும், பொருளாதார வளர்ச்சிபெறவும் வேளாண்மை உற்பத்திபெருக்கியாக (multiplier) இயங்குகிறது. தமிழக மாநில வருமானம் (State Income) 1960-61-ல் ரூ. 1,129·56 கோடியாகும். 1966–67-ல், அதாவது ஆறு ஆண்டுகளில் ரூ. 1,877·37 கோடியாக (66·20 சதவிகிதம்) உயர்ந்துள்ளது. தலா வருமானம் இந்த ஆறு ஆண்டுகளில் ரூ. 335-லிருந்து, ரூ. 503 ஆக 50·15 சதவீத வளர்ச்சி கண்டுள்ளது. ஆண்டுதோறும் சராசரியாக மாநில வருமானம் 8·8%, தலா வருமானம் 7·0% ஆகவும் ஆறு ஆண்டுகளில் உயர்ந்துள்ளது. தமிழக மாநில வருமானத்தில் வேளாண்மைத்துறையின் வருவாய் 1960–61-ல் 49·13%-லிருந்து 1966–67-ல் 41·9% ஆகக் குறைந்துள்ளது.

முதல் ஐந்தாண்டுத் திட்டகாலத்தில் தமிழக மாநிலத்தின் சராசரி ஆண்டு உணவு உற்பத்தி 40·88 இலட்சம் டன்களாக இருந்தது. இரண்டாவது திட்டகாலத்தில் ஆண்டுச் சராசரி உணவு உற்பத்தி 50·51 இலட்சம் டன்களாகும். மூன்றாவது திட்ட காலத்தில் உணவு உற்பத்தி வளர்ச்சி வீதம் 9·9% ஆகவும், ஆண்டு உற்பத்தியில் மற்றத் திட்டங்களைவிட 5·01 இலட்சம் டன்கள் கூடுதலாகவும் காணப்பட்டது. 1969–70-ல் தமிழக மாநில உணவு உற்பத்தி 63 இலட்சம் டன்களாகும். இவ்வாறு உணவு உற்பத்தி

வளர்ச்சிக்குப் பல காரணங்கள் உண்டு. விளைச்சல் பெருக்கக்கூடிய விதைகளை உபயோகப்படுத்தியதாலும், கிணற்று நீர்ப்பாசனத்திற்கும், சிறு நீர்ப்பாசனத்திற்கும் மிக முக்கியத்துவம் ஓராண்டுத் திட்டகாலத்தில் கொடுத்தமையுமாகும்.

வேளாண்மைத் துறையில் முன்னேற்றம் அடைந்துள்ள தமிழக மாநிலம் தொழில் துறையிலே பின்தங்கியிருக்கவில்லை. இந்தியாவில் மோட்டார் தொழிற்சாலைகள் பெரும்பாலும் தமிழகத்திலே செறிவடைந்துள்ளன. அமெரிக்காவில் மிச்சிகன் மாநிலம் மோட்டார் உற்பத்திக்குத் தனிச்சிறப்புக் கொண்டிருப்பதுபோலத் தமிழக மாநிலம் இந்தியாவில் மோட்டார் உற்பத்தித் துறையில் சிறந்து விளங்குகிறது. தொழில் துறையிலே பருத்தித் துணித் தொழிற்சாலைகள அதிகமாக உள்ளன. மூலதன அளவிலும், வேலைவாய்ப்பினைப் பெருக்குவதிலும், மாநில வருமானத்தில் அதிகப் பங்கினை இத் தொழிற்சாலைகள் பெற்றுள்ளன. இரயில் பெட்டித் தொழிற்சாலை, நெய்வேலி பழுப்பு நிலக்கரித் திட்டம், திருச்சிராப்பள்ளி பாய்லர் தொழிற்சாலை, குந்தா மின்திட்டம் போன்ற பல திட்டங்கள் தமிழகத்தைத் தொழில்மயமாக்க உதவுகின்றன. இவைதவிர, தனியார் துறையில் இரசாயனப் பொருள்கள் தொழிற்சாலைகள், சர்க்கரைத் தொழிற்சாலைகள், சிமெண்ட் தொழிற்சாலைகள், சைக்கிள் தொழிற்சாலைகள், மோட்டார் கார் தொழிற்சாலைகள், தோல் பதனிடுந் தொழிற்சாலைகள், ரப்பர் தொழிற்சாலைகள் பல தோன்றியுள்ளன. பருத்தி ஆடைத் தொழிற்சாலைகள் 1961-ல் 12·84 கோடி கிலோகிராம் பருத்தி நூல் உற்பத்தி செய்தது. 1969-ல் 23 தொழிற்சாலைகள் மூடிய பின்னரும் 17 கோடி கிலோகிராம் பருத்தி நூல் உற்பத்தி செய்யப்பட்டுள்ளது. மோட்டார் சைக்கிள் உற்பத்தி 1961-ல் 4,682ஆக இருந்து 1969-ல் 9,772ஆக இருமடங்கு பெருகியுள்ளது. மோட்டார் கார் உற்பத்தி 1961-ல் 5,780ஆக இருந்து, 1968-ல் 7,172 ஆக உயர்ந்துள்ளது.

தமிழகத் தொழில் வளர்ச்சியினை இரண்டு முறைகளில் அறியலாம்:

(1) தொழிற்சாலைகளின் எண்ணிக்கை.

(2) தொழிற்சாலைகளில் வேலை செய்வோர் எண்ணிக்கை.

தமிழகத்தில் மொத்தத் தொழிற்சாலைகளின் எண்ணிக்கை 1961ஆம் ஆண்டு 5,600ஆக இருந்தது. 1969-ல் 7,551ஆக உயர்ந்துள்ளது. இத் தொழிற்சாலைகளில் வேலை செய்வோர் எண்ணிக்கை 1961 முதல் 1969 வரை மூன்று இலட்சத்திலிருந்து 4·2 இலட்சமாக உயர்ந்துள்ளது. மொத்த உழைப்பாளிகளில் 38·5% பேர் இத் தொழிற்சாலைகளில் பணிபுரிகின்றனர். தொழில்

உற்பத்திக் குறி எண் (1960ஆம் ஆண்டு அடிப்படையில்) 1969-ல் 176·7ஆக உயர்ந்துள்ளது. தென்னிந்திய மாநிலங்களிலே தொழில்வளம் மிக்க மாநிலம் தமிழகமாகும்.

தொழில் முன்னேற்றத்திற்கு அத்தியாவசியமானது மின்சக்தி. 1950–51-ல் தமிழகத்தில் உற்பத்தி செய்த மின்சக்தியின் அளவு 156 மெகாவாட் ஆக இருந்தது. திட்டகாலத்தில் அமைக்கப் பட்ட மின்சக்தித் திட்டங்களினால் 1969-ல் 1,570 மெகாவாட் மின்சக்தி உற்பத்தி செய்யப்பட்டுள்ளது. தமிழகத்திலுள்ள கனிப்பொருள்களின் உற்பத்தி மதிப்பு 1961 முதல் 1969 வரை இருமடங்காயிற்று.

தொழில் துறையிலும், வேளாண்மைத் துறையிலும் தொடர்ந்து முன்னேற்றம் அடைய வேண்டுமானால், போக்கு வரத்துத் துறையிலும் முன்னேற்றம் அடைய வேண்டியது அவசியம். கிராமப்புறங்களில் நல்ல சாலைகள் அமைந்தால்தான் கிராம-நகர உறவுகளைப் பயன்தரக்கூடிய முறையில் உருவாக்க முடியும். தமிழகத்தில் பேருந்து வண்டிப் போக்குவரத்து சென்னையில் முதலில் நாட்டுடைமையாக்கப்பட்டது. 1967 முதல் பல புதிய மார்க்கங்களிலும் தமிழ்நாட்டுப் போக்குவரத்துத் துறைப் பேருந்து சேவை புரிந்து வருகிறது. நாள்தோறும் சராசரி 9·70 இலட்சம் மக்கள் தமிழகப் போக்குவரத்துத் துறைப் பேருந்துகளில் பயணம் செய்கின்றனர். தமிழக மாநிலத்திற்குப் போக்குவரத்து ஒரு பொதுப்பயன் தொழில் (Public Utility Service). அதன் வாயிலாகக் கிடைத்த வருமானம் 1961-ல் ரூ. 286·39 இலட்சமாகும். 1969-ல் கிடைத்த வருமானம் ரூ. 1,649·63 இலட்சம்.

பல துறைகளில் சிறப்பான முறையில் முன்னேற்றம் அடைந்துள்ள தமிழகத்தின் நிதிநிலையினை அறிவதே இந்த மூல நூலின் நோக்கமாகும். கடந்த சில ஆண்டுகளில் மாநில நிதி ஆய்வு நூல்கள் பல வெளிவந்துள்ளன. திரு. S. P. கெர் எழுதிய மைசூர் மாநில நிதி (State Finances of Mysore), திரு. D. ஜா எழுதிய பீஹார் நிதிநிலை (Bihar Finances). மைசூர் மாநில நிதிநிலையைப் பற்றியும், பீஹார் மாநில நிதிநிலையைப்பற்றியும் கூறுகின்றன. தமிழக மாநில நிதிநிலையைப்பற்றி இதுவரை எந்த நூலும் எழுதப்படவில்லை. வளர்ச்சியடையாத நாடுகளில் வரி வருவாய் குறைவாக இருக்க ஒரு முக்கிய காரணமாக வரி விதிப்பை எதிர்க்கும் வாக்காளரைக் (Tax repellent electorate) கூறலாம். இந்தியாவில் மாநில அரசாங்கங்கள் வரி விதிக்கத் தயங்குகின்றனவா, புதிய வரிகள் விதிப்பதன் காரணம் என்ன என்பதை அறிதல் அவசியம். இந்த நூல் தமிழக மாநிலத்தின் இன்றைய நிதிநிலையினையும், நிதிப்பிரச்சினைகளையும் மாணவர்களும், மக்களும் அறிய எழுதப்பட்டுள்ளது.

# 2. தமிழக மாநில நிதி வரலாறு

1833-க்கு முன்னர், பொதுநிதி அதிகாரங்கள் மத்திய அரசாங்கத்திடம் மையமாக்கப்பட்டிருந்தது. 1861-ல் ஏற்பட்ட அரசியல் சட்டச் சீர்திருத்தத்தினுல் நிதிநிலையைப் பொறுத்த மட்டில் மாநிலங்கள் எந்த நன்மையும் அடையவில்லை. அரசாங்க வருவாய் மத்திய அரசாங்கத்தின் தொகுதியாகக் கருதப்பட்டது. எல்லா வரி வருவாய்களையும் மத்திய அரசாங்கம் கொண்டிருந்ததால் செலவினையும் மத்திய அரசாங்கமே மேற்கொண்டது.

மாநில அரசாங்கங்கள் செலவு மேற்கொள்ள வேண்டிய அவசியம் ஏற்பட்டால் மத்திய அரசாங்கத்தின் உத்தரவு பெற்ற பின்னரே செலவிட வேண்டும். மாநில அரசாங்கங்கள் நிதி தேவைப்படக் கூடிய முன்னேற்றத் திட்டங்களைப் பெரிய அளவிலோ, சிறிய அளவிலோ மேற்கொள்ளக்கூடாது. அப்படி மேற்கொள்ள வேண்டிய அவசியம் ஏற்பட்டால், இந்திய அரசாங்கத்தின் உத்தரவு பெற்ற பிறகே செலவு மேற்கொள்ள வேண்டும். மாநில அரசாங்கங்களின் உண்மையான தேவைகளையும், அங்கே நிலவும் சூழ்நிலையையும் அறியாமல் இருந்தமையால் மாநில அரசாங்கங்களுக்குக் கொடுத்த நிதி உதவி எந்தவித நோக்கமுமின்றிக் காணப்பட்டது. ஒரு மாநில அரசாங்கம் எவ்வளவு செலவிடக்கூடும் என்பது 'அது மத்திய அரசாங்கத்திடம் இருந்து எவ்வளவு நிதி உதவி பெறுமோ, அதைப் பொறுத்திருக்கிறது' என்று திரு. ஜான் ஸ்ட்ராச்சி கூறியது இங்கு சாலப் பொருந்தும். பொதுநிதி மாநிலங்களுக்குப் பகிர்ந்து தரப்பட்ட முறை மிகவும் சீரற்று இருந்தது. எந்த மாநிலம் வன்முறையில் அதிகமான உதவி பெற முயற்சிசெய்ததோ, அதற்கே எந்தவிதக் கொள்கையுமின்றி நிதி கொடுக்கப்பட்டது.[1]

[1] Stratchy John — 'India Its Administration and Progress', p. 121.

மாநிலங்களின் செலவு எவ்வளவு உயர்ந்துள்ளதோ, அதனைப் பொறுத்துப் பொது நிதி பகிர்வதில் மாற்றங்கள் ஏற்படுத்தப் பட்டன. பிறகு வட்டார அரசாங்கங்களுக்கு ஆண்டுதோறும் மானியங்கள் வழங்கும் பொறுப்பு மாநிலங்களுக்கே அளிக்கப் பட்டது. இதைத் தவிர மத்திய அரசாங்கம் மாநில அரசாங்கங் களுக்கு வழங்கிய மானியத்தைக் கொண்டே காவல்துறை, கல்வித் துறை, மருத்துவத் துறை, சிறைச்சாலை முதலிய வற்றிற்கான செலவுகளை ஏற்கவேண்டும். மாநிலங்கள் சில புதிய வேலை வாய்ப்புகள் உண்டாக்கலாம். ஆனால், அதனால் வேலை கிடைப்போரது ஊதியம் ரூ. 250–க்கு மேல் இருக்கக் கூடாது.

1877-ல் மாயோ பிரபு இந்தியாவின் வைசிராயாக இருந்த போது மாநிலங்களுக்கு அதிகநிதி அதிகாரங்களைத் தர இசைந்தார். ஆனால், புதிய செலவினங்களின் பொறுப்பினை மாநிலங்களுக்கு மாற்றினார். இதனால் பல புதிய செலவின பெருந்தலைப்புகளுக்கு (Major-Heads) மாநிலங்கள் பொறுப்பேற்க வேண்டியதாயிற்று. அவை

(1) பொது நிர்வாகம்,

(2) நிதி நிர்வாகம்,

(3) நிலவரி,

(4) செய்பொருள் வரி,

(5) முத்திரைத் தாள்கள்.

இந்தப் புதிய வருவாய் மாநிலங்களின் செலவினைவிட உபரி யாக உயரவில்லை.

1881 செப்டம்பர் 30ஆம் தேதி முதல் சில வரித் தலைப்புகள் மத்திய அரசாங்கத்திற்கே என ஒதுக்கப்பட்டன. அவை உப்புவரி, சுங்கவரி, அபினிவரி, தபால் தந்தி இலாகா வருமானம் முதலியன. நிதி நிர்வாக வருவாய், பொதுப்பணித்துறை, கல்வித் துறை வருவாய் இவை மாநில அரசாங்கங்கட்கே என ஒதுக்கப்பட்டன. வனத்துறை வருவாய், முத்திரைகள், பதிவுக் கட்டண வருவாய்—இவை மத்திய மாநில அரசாங்கங்களுக் கிடையே பகிரப்பட்டன. மாநிலங்களின் நிதித்தேவை அதிகமானால் நிலவரியில் ஓரளவு பங்கும், உதவி மானியங்களும் வழங்கப்பட்டன. இந்த ஒப்பந்தங்கள் எல்லாம் ஐந்தாண்டு களுக்கு ஒரு முறை புதுப்பிக்கப்படவேண்டும். இந்த ஒப்பந்தப்படி பல மாநிலங்களுக்குக் கிடைத்த வருவாய் மிகக் குறைவாகக்

காணப்பட்டது. ஆனால், 1887–88-ல் சென்னை மாநில நிதிநிலை சாதகமாகவே ரூ. 53.26 இலட்சம் உபரியோடு வரவு-செலவு திட்டம் அமைக்கப்பட்டது. 1897–ல் ஏற்படுத்தப்பட்ட ஒப்பந்தப்படி பல திட்டங்களுக்கான செலவு மாநிலங்களின் பொறுப்பில் மாற்றப்பட்டது. மாநிலங்களின் செலவு கூடியது; ஆனால், வருவாய் உயரவில்லை. இந்தக் கடினமான நிதி நிலையைப் போக்கச் சிறப்புதவி மானியங்கள் வழங்கப்பட்டன. 1897 முதல் 1904-ல் சென்னை மாநிலம் சிறப்பு உதவிப் பணமாகப் பெற்ற தொகை ரூ. 95·59 இலட்சமாகும். ஆனால், அத்தகைய சிறப்பு உதவிமானியம் பெற்றும் சென்னை மாநிலச் செலவு வரவுக்குமேல் அதிகமாக இருந்தது. இதற்கிடையில் ஒரு 'செலவுக் குழு' (Expenditure Commission) நியமிக்கப்பட்டது. இந்திய மாநிலங்களின் நிதிச் சுமையைக் குறைக்க, கோகலே அச் செலவுக் குழுவுக்குக் கோரிக்கை விடுத்தார். 'செலவுச் சுமை எல்லா மாநிலங்களிடையே நேர்மையாகப் பகிரப்பட வேண்டும். சென்னை போன்ற சில மாநிலங்களின் மீது அதிக சுமை காணப் படுகிறது' என்றார் அவர்.[1]

1920-ல் சென்னை ஆளுநர் ஆர்தர் எல்லாக் (Arthur Havelok), சென்னை நிதி நிலையைப் பற்றிப் பின்வருமாறு கூறினார். 'சென்னை நிதி நிலை நல்ல முறையில் மாற வேண்டுமானால் நிரந்தரமான, ஒரே கொள்கையுடைய, பராபட்சமில்லாத ஒப்பந்தங்கள் மத்திய மாநில அரசாங்கங்களிடையே ஏற்பட்டு, மாநிலங்களுக்கு நிதிச் சுதந்திரமும் அளிக்கப்பட வேண்டும்.[2]'

1904 முதல் ஏற்படுத்தப்பட்ட ஒப்பந்தப்படி மத்திய அரசு மொத்தச் செலவில் $\frac{3}{4}$ பங்கு மேற்கொள்வதென்றும், ஆகையால் மொத்த வருமானத்தில் $\frac{3}{4}$ பங்கு கொடுக்கப்பட வேண்டுமென்றும் தீர்மானிக்கப்பட்டது. மீதித் தொகை மாநிலங்களுக்கிடையே அதனதன் பின் தங்கிய நிலைக்கேற்பப் பகிர்ந்து கொடுக்கப்பட்டது. சென்னை, வங்காளம், பம்பாய் ஆகிய மாநிலங்கள் தமது மொத்த வருமானத்தில் $\frac{1}{4}$ பங்கு மட்டும் தமது செலவுகளுக்காகக் கொள்ள வேண்டும். இதைத் தவிர மாநிலங்களுக்கு அதிக உதவி மானியங்கள் வழங்கப்பட்டன.

[1] Indian Expenditure Commission Report — Vol III. p. 217.

[2] Quoted in Madras Chamber of Commerce Address to Curzon–1920.

மத்திய அரசு சென்னைக்கு வழங்கிய உதவி மானியம்[1]

| ஆண்டு | தொகை ரூ. இலட்சத்தில் |
|---|---|
| 1904–05 | 7·00 |
| 1905–06 | 44·30 |
| 1906–07 | 99.80 |
| 1907–08 | 94·13 |
| 1908–09 | 7·04 |
| 1909–10 | 6·13 |
| 1910–11 | 36·91 |
| 1911–12 | 56·08 |

மூலம்: T. Meenakshi, — 'Finances of Government of Madras' since 1919. p. 13.

மாநில அரசாங்கத்தின் நிதிநிலையை அதன் வரவு–செலவு திட்ட நிலையிலிருந்து அறியலாம்.

மாநில அரசாங்கத்தின் நிதிநிலையை அதன் வரவு-செலவு திட்ட நிலையிலிருந்து அறியலாம்.

| ஆண்டு | பற்றுக்குறை / உபரி | ஆண்டு | பற்றுக்குறை / உபரி |
|---|---|---|---|
| 1904–05 | — 14·20 | 1908 09 | + 20·25 |
| 1905–06 | + 2·20 | 1909–10 | + 12·65 |
| 1906–07 | + 12·17 | 1910–11 | + 23·16 |
| 1907–08 | — ·44 | 1911–12 | + 29 38 |

1909-ல் ஹாப் ஹவுஸ் பிரபு தலைமையில் நிதி அதிகாரங்கள் பகிர்வதைப் பற்றி ஆராய ஒரு குழுவினை ஏற்படுத்தினர். இக்குழு புதிய மாற்றங்கள் எதுவும் ஏற்படுத்தாவிட்டாலும், மாநிலங்களின் நிதி நிலையை உணர்ந்து அவற்றின் நிதி நிலைக்கேற்ப நிதி உதவியது.

1912 முதல் மத்திய அரசு மாநில நிதி நிர்வாகத்தில் அது வரை கொண்டிருந்த கடுமையான கட்டுப்பாட்டைத் தளர்த்தி, மாநிலங்களின் குறிப்பிட்ட திட்டங்களுக்கு, மேலும் உதவி மானியம் வழங்க முன் வந்தது.

1912 முதல் 1919 வரை சென்னை மாநிலம் மத்திய அரசிடம் பெற்ற உதவி மானியத் தொகை வருமாறு :

| | ரூ. இலட்சத்தில் |
|---|---|
| 1912–13 | 12·27 |
| 1913–14 | 50·56 |
| 1914–15 | 16·98 |
| 1915–16 | 12·21 |
| 1916–17 | 10·99 |
| 1917–18 | 14·84 |
| 1918–19 | 15·77 |

1911–1912 முதல் 1919–20 வரை கல்வித் துறைக்காக மாநிலங்கள் பெற்ற உதவி மானியங்களின் தொகை, மக்கள் தொகைக்கேற்பப் பகிர்ந்தளிக்கப்பட்டது.

| மாநிலம் | மக்கள் தொகை | கல்விக்கான உதவி மானியம். |
|---|---|---|
| | | ரூ. இலட்சத்தில் |
| சென்னை | 41·5 மில்லியன் | 28· 5 |
| வங்காளம் | 45·5 ,, | 41·81 |
| பம்பாய் | 19·5 ,, | 21·45 |

பம்பாய் மாநில மக்கள் தொகையைவிடச் சென்னை மாநில மக்கள்தொகை இரு மடங்குக்கும் மேல் கூடுதலாக இருந்தும், பம்பாய் மாநிலத்திற்கு அளிக்கப்பட்ட உதவி மானியத்தைவிட ரூ. 7 இலட்சமே சென்னைக்கு அதிகமாக அளிக்கப்பட்டது. அதே சமயம், வங்காளத்தின் மக்கள் தொகை, சென்னையின் மக்கள்

தொகையைவிட 4 மில்லியன் மட்டுமே கூடுதலாக இருந்தும், வங்காளத்துக்குக் கொடுக்கப்பட்ட உதவி மானியத் தொகையோ 13·31 இலட்சம் அதிகமாகக் காணப்படுகிறது.

1907–ஆம் ஆண்டிலேயே, மாநிலங்களுக்கு நிர்வாக, நிதி சுதந்திரம் அளிப்பதைப்பற்றி ஆராய ஒரு குழு அமைக்கப்பட்டது. திரு. கோகலே மாநிலங்களின் சார்பில், நிலவரி முழுவதும், செய்பொருள் வரியும், வனத்துறை வருவாயும் மாநிலங்களுக்கு அளிக்கப்படவேண்டும் என்றும்; மாநிலங்களுக்கு ஆண்டுதோறும் கொடுக்கப்படும் மானியம் அதிகரிக்கப்பட வேண்டுமென்றும் இக்குழுவின் முன் கோரினர். இதற்கிடையில் முதல் உலகப் போரின் விளைவால் இந்திய அரசாங்கத்தின் போர்ச் செலவு உயர்ந்தது. வருவாயும் உயர்ந்தது. ஆனால், மத்திய அரசு உதவி மானியம் அளிப்பதில் நேர்மையற்று இருப்பதைப் போலவே மொத்த வருமானத்திலும் அதிக பங்கினை அபகரித்துக் கொண்டது. ஆண்டுதோறும் சென்னை மாநில மொத்த வருவாயில் மத்திய அரசு பகிர்ந்து கொண்ட தொகை பின்வருமாறு :

| ஆண்டு | மொத்த வருமானம் I | மத்திய அரசாங்கப் பங்கு II | I-ல் II வது சதவீதம் III |
|---|---|---|---|
| | | ரூ. கோடியில் | |
| 1912–13 | 1,518·2 | 825·69 | 54·4% |
| 1913–14 | 1,585·13 | 844·70 | 53·3% |
| 1914–15 | 1,648·49 | 87[illegible]·66 | 53·1% |
| 1915–16 | 1,619·03 | 878·29 | 54·2% |
| 1916–17 | 1,665·97 | 913·27 | 54·8% |
| 1917–18 | 1,770·862· | 985 | 55·4% |
| 1918–19 | 1,859·86 | 1035·53 | 55·7% |
| 1919–20 | 1,738·44 | 883·47 | 50·8% |

ஒவ்வோர் ஆண்டும் சென்னை மாநிலம் மொத்த வருமானத்தில் ஏறத்தாழ அரைப்பங்கு மத்திய அரசாங்கத்திற்கே

வழங்கியுள்ளது. மத்திய-மாநில நிதி உறவுகளிலே பயன்தக்ரக் கூடிய அம்சங்கள் அரசியலமைப்பில் ஏற்படுத்தும் பொருட்டு ஒரு புதிய சீர்திருத்தக்குழு அமைக்கத் திட்டமிடப்பட்டது. அக்குழு அரசாங்கச்செயலர் திரு. மாண்டேகு என்பவரையும், இந்திய வைசிராய் செம்ஸ்போர்டு என்பவரையும் கொண்டு அமைக்கப் பட்டது. அக்குழு மாநில நிதி உறவுகளை மாற்ற முற்படுவதற்கு முன்னர் பல மாநிலங்களின் நிதிநிலை மிகவும் அவலமான நிலையிலிருந்தது. 1912–13 முதல், 1918–19 வரை சென்னை மாநில வரவு செலவு திட்ட நிதிநிலையைப் பின்வரும் அட்டவணை விளக்குகிறது.

ரூ. இலட்சத்தில்

| ஆண்டு | பற்றுக்குறை / உபரி | ஆண்டு | பற்றுக்குறை / உபரி |
|---|---|---|---|
| 1912–13 | +43·30 | 1916–17 | +25·71 |
| 1913–14 | —52·98 | 1917–18 | +10·42 |
| 1914–15 | —12·07 | 1918–19 | — 9·72 |
| 1915–16 | + 3·18 | 1919–20 | +690·60 |

சென்னை மாநில நிதி நிலை ஒரு நிலையான தன்மை ஏதுமின்றி சில ஆண்டுகளில் பற்றுக் குறையும், சில ஆண்டுகளில் உபரியும் கொண்டு விளங்கியது. 1912–1919 ஆண்டுகளில் மாநிலங்களுக்கு அதிக வருவாய் ஈட்டித் தந்த வரிகள் பின்வருமாறு ;

| | |
|---|---|
| நிலவரி | 40·2% |
| ஆயத்தீர்வை | 24·2% |
| முத்திரைகள் | 9·7% |
| வனத்துறை | 5·5% |
| பதிவுக்கட்டணம் | 3·2% |
| வருமானவரி | 3·1% |

1904 முதல், முதல் உலகப்போர் முடியும்வரை மாநிலங்களின் செலவு வருமானத்தைவிட அதிகமாக இருந்தது, இந்தப் பற்றுக்குறையைப் போக்க மாநிலங்கள் நிலவரிப் பங்கினையும், மானிய உதவியும், சிறப்புதவிமானியத்தையுமே நம்பி நிதி

நிர்வாகம் செய்து வந்தன. 1919–க்கு முன்னர் மத்திய-மாநில நிதி உறவுகள் பாராட்டத்தக்க விதத்தில் இல்லாமலிருந்ததற்குக் காரணங்கள் மூன்றே.

(1) மாநில அரசாங்கத்தின் செலவினங்களை மத்திய அரசாங்கம் கட்டுப்படுத்த விரும்பியது.

(2) எல்லா வரிகளும் (நேர்முக, மறைமுக வரிகள்) மத்திய அரசாங்கத்தின் கட்டுப்பாட்டிலேயே இருந்தன.

(3) மாநில அரசாங்கம் கடனுதவி பெறச் சுதந்திரம் வழங்கப்படவில்லை. வெளி அங்காடியில் கடன் பெறவும் மத்திய அரசின் உத்தரவினையே நம்பி இருந்தது.

மாண்டேகு செம்ஸ்போர்டு சீர்திருத்தங்கள்: 1919: இந்தியர்களுக்கு நிர்வாகத்தில் முக்கியத்துவம் தரவும், நாட்டில் மாவட்டத் தல நிர்வாகம் வளரவும் இந்தச் சீர்திருத்தம் இந்தியாவில் அமுலாக்கப்பட்டது. அரசாங்கப் பணிகள்:

(1) மத்திய அரசாங்கப்பணிகள்.

(2) மாநில அரசாங்கப் பணிகள்.

(3) மாற்றியமைக்கப்பட்டவை.

என மூன்றாகப் பிரிக்கப்பட்டன. மாநிலங்களிடையே பொறுப்புணர்ச்சி மிக்க அரசாங்கத்தை உருவாக்க வேண்டும் என்ற எண்ணத்தோடு இவ்விதம் அரசாங்கப் பணிகள் மாற்றியமைக்கப்பட்டன. மாநிலங்களுக்கு என்றே ஒதுக்கப்பட்ட பணிகள் நிலவரி, நிர்வாகம், காவல் துறை, மாற்றப்பட்ட பணிகள், தொழிலாளர் நலன் பேணுதல், வேளாண்மை, தொழில் வளர்ச்சி, பொதுப்பணித்துறை முதலியவை. மாநிலங்களுக்கென்று ஒதுக்கப்பட்ட பணிகளை அமைச்சர்கள் நிர்வாகம் செய்வதென்றும், மாற்றப்பட்ட பணிகளை ஆளுநரும், செயற்குழுவும் நிர்வாகம் செய்வதென்றும் திட்டமிடப்பட்டது. இந்த முறையில், ஓர் அரசாங்கத்தில் இருவிதமான நிர்வாகங்கள் இருக்கவே, இரட்டையாட்சி (Dyarchy) ஏற்பட்டது. அரசாங்கத்தின் முக்கிய பெ துப்பணிகளாகிய பாதுகாப்பு, அயல் நாட்டுறவு, சுங்கவரி, இரயில்வே, அஞ்சல் துறை, வருமானவரி, நாணயம், பொதுக் கடன், வாணிபம், கப்பல் போக்குவரத்து முதலியவற்றை மத்திய அரசாங்கம் கொண்டிருந்தது.

அரசாங்க வருவாய் செலவினங்களை மாற்றியமைத்ததன் விளைவாக மத்திய அரசு ஆண்டுதோறும் ரூ. 9·5 கோடி இழக்க நேரிட்டது. மாநில அரசாங்கம் ரூ. 18·5 கோடி கூடுதல் வருமானம் பெற்றது. ஆனால், மாநிலங்களிடையே வருமானத்தில் ஏற்றத்தாழ்வுகள் காணப்பட்டதால் எல்லா மாநிலங்களும் இந்தச் சீர்திருத்தத்தால் பயனடையவில்லை. மேலும், மாநிலங்களிடையே ஒரே நிலையான பொருளாதார முன்னேற்றம் இல்லாமையால் இத்திட்டம் சில பின் தங்கிய மாநிலங்களைப் பாதித்தது. மத்திய அரசாங்கத்தின் நிதிப் பற்றாக்குறையைப் போக்க மாநிலங்கள் பணஉதவி அளிக்க வேண்டும் என்று விரும்பப் பட்டது. மாநிலங்களின் மொத்த வருமானத்தில் செலவு போக எஞ்சிய பணத்தில் ஒரு சதவிகிதம், மத்திய அரசிற்குப் பண உதவியாக அளிக்க வேண்டும் என்றும் கருதப்பட்டது. இதன்படி 1917–18-ல் மாநிலங்களின் உபரி வருமானம் ரூ. 15·64 கோடி, இதில் 87% மத்திய அரசாங்கத்திற்குப் பண உதவியாக அளிக்கப்பட்டது. இதனால் மாநிலங்களுக்குக் கிடைத்த நிகர உபரி வருமானம் ரூ. 2·01 கோடியே.

| மாநிலம் | மொத்த மாநில வருவாய் | மொத்த மாநில செலவு | மொத்த வருமான உபரி | 87 சதவீத மாநில உதவி | நிகர மாநில வருமானம் |
|---|---|---|---|---|---|
| | | ரூ. இலட்சத்தில் | | | |
| சென்னை ... | 1,331 | 840 | 491 | 428 | 63 |
| அஸ்ஸாம் ... | 171 | 150 | 21 | 18 | 3 |
| பம்பாய் ... | 1,001 | 900 | 101 | 88 | 13 |
| வங்காளம் ... | 754 | 675 | 79 | 69 | 10 |
| ஐக்கிய மாநிலங்கள் ... | 1,122 | 747 | 375 | 325 | 48 |
| பஞ்சாப் ... | 864 | 614 | 250 | 278 | 32 |
| பர்மா ... | 769 | 608 | 161 | 140 | 21 |
| பீஹார், ஒரிஸ்ஸா | 404 | 359 | 45 | 39 | 6 |
| மத்திய மாநிலங்கள் ... | 412 | 371 | 41 | 36 | 5 |
| | 6,828 | 5,264 | 1,564 | 1,421 | 201 |

ஒவ்வொரு மாநிலமும் அளிக்கவேண்டிய பண உதவியினை நிர்ணயிக்கும் முறை நேர்மையற்றதாகக் காணப்பட்டது. சில மாநிலங்கள் மத்திய அரசுக்கு மொத்தத் தொகையில் அதிகமான சதவிகிதத்தை அளிக்க வேண்டியிருந்தது அவை வருமாறு :

| | |
|---|---|
| சென்னை | 47% |
| ஐக்கிய மாநிலங்கள் | 41.1% |
| வங்காளம் | 10·1% |
| பம்பாய் | 9·6% |

1935-ல் இந்திய அரசாங்கச் சட்டம் இயற்றப்படுவதற்கு முன்னரே, இந்திய அரசு திரு மெஸ்டன் (Meston) தலைமையில் குழு ஒன்றை அமைத்து, மத்திய-மாநில நிதி உறவுகளைப் பலப் படுத்த விரும்பியது. இந்த மெஸ்டன் குழு வருமான வரியை மாநிலங்களுக்குப் பகிர்ந்து தருவதை விரும்பவில்லை.

எந்த மாநிலத்திலிருந்து அதிக வருமானவரி கிடைக்கிறது என்பதை அறியாமல் இருப்பதால் மாநிலங்கள் வருமானவரி பகிர்வதை மெஸ்டன் குழு வரவேற்கவில்லை. முத்திரைத்தாள் களால் கிடைக்கும் வருமானத்தையும் இரண்டாகப் பிரித்து, பொது முத்திரைத்தாள் வருமானம், மத்திய அரசாங்கத்திற்கும், நிதித்துறை முத்திரைத்தாள் வருமானம் மாநிலங்களுக்கும் எனப் பிரிக்கப்பட்டது. இந்திய அரசியல் சட்டம் : 1935;

1935 சட்டமே இந்தியக் கூட்டரசு உருவாகக் காரணமாக விளங்கியது. இச்சட்டத்தின்படி மாநிலங்களின் பணிகளும் அவற்றின் வரி வருவாய்களும் பிரிக்கப்பட்டன. மாநிலங்களை மத்திய அரசாங்கக் கட்டுப்பாட்டில் இருந்து விடுத்து அதிக உரிமைகள் தரும் எண்ணத்தோடு இச்சட்டம் பிறப்பிக்கப்பட்டது. இதனால் மாநிலங்களுக்கு ஒதுக்கப்பட்ட வரிகள் பின்வருமாறு:

வேளாண்மை, வருமானவரி. நிலவரி, கட்டடவரி, வேளாண்மை மரபுரிமை வரி, உரிமைவரி, தலைவரி, தொழில்வரி, மிருகவரி, படகுவரி, விற்பனைவரி, விளம்பரவரி, மோகப் பொருள்வரி, முத்திரைத்தாள், உள்நாட்டு நீர்வழிப் போக்கு வரத்தில் கொண்டு செல்லப்படும் பொருள் மீதும், பிரயாணிகள் மீதும் விதிக்கப்படும் வரி, வழிச் சுங்கம், கட்டணங்கள், அன்னிய மாநிலங்களிலிருந்து வந்த பொருள்கள் மீது விதிக்கப்படும் வரி முதலியன இப்புதிய வரிகள் அதிக நெகிழ்ச்சியற்றவையாக் இருப்பினும், மாநில அரசு பல புதிய வரிகளை விதிக்க அதிகாரம்

பெற்றது. நெகிழ்ச்சிமிக்க, வருவாய் உயர்த்தக்கூடிய வரிகளை மத்திய அரசே விதித்து வந்தது. 1935-ல் திட்டப்படி மாநிலங்களின் செலவிற்கேற்ப வருவாயை உயர்த்தக்கூடிய வரிகள் இருக்கவில்லை. இரண்டாவது உலகப் போரில் தோல்வி அடையாமல் இருந்திருந்தால் மாநிலங்கள் 1940-க்கு முன்னரே மேலும் நிதி சுதந்திரம் வேண்டி உரிமைப் போராட்டம் ஆரம்பித்திருக்கும்.

1936 ஆம் வருடம் ஜனவரித் திங்கள் சர் ஒட்டோ நிமியர் என்ற பிரிட்டிஷ் அரசாங்க நிதி வல்லுநர் இந்திய அரசியல் சட்டத்தினால் ஏற்பட்ட மத்திய-மாநில நிதி உறவினை ஆராயவும், மாநில நிதித் தேவையினை ஆராய்ந்து மானியத்தைப் பகிர்வதில் சில புதிய கோட்பாடுகளை ஏற்படுத்தவும் நியமிக்கப்பட்டார்.

திரு ஒட்டோ நிமியருடைய[1] முக்கிய நோக்கமே மாநிலங்களின் நிதிநிலையைப் பொறுத்தமட்டில் ஒரே நிலையில் இருத்தவும், மத்திய அரசின் நிதி வருவாயினைக் குறைக்காமல் மாநிலங்களுக்கு உதவியளிப்பதுமேயாகும். இந்த நிதி உதவியினைக் கொண்டு மாநிலங்கள் நிதித் துறையில் ஒரு சமநிலையை அடையவும், பற்றுக்குறையினை அறவே ஒழிக்கவும் முடியும் என்றும் நிமியர் எண்ணினார். வங்காளம், பீஹார், மத்திய மாநிலங்கள், அஸ்ஸாம், வடமேற்கு எல்லை மாநிலம், ஒரிஸ்ஸா, உத்தரப் பிரதேசம், சிந்து போன்ற மாநிலங்களின் நிதிநிலை மிகவும் அவலமான நிலையில் இருந்தது. இம் மாநிலங்களுக்கு ரூ. 4.5 கோடி உதவிப்பணமாகத் தரவும், பழைய கடனைத் தள்ளுசெய்யவும், சணல் விளையும் மாநிலங்களுக்கு மொத்த ஏற்றுமதி வரியில் $12\frac{1}{2}\%$ பகிர்ந்து தரவும், உதவி மானியம் தரவும் ஒட்டோ நிமியர் சிபாரிசு செய்தார். சென்னை மாநிலத்திலிருந்து ஒரிஸ்ஸா தனியாகப் பிரிந்ததால் ஓரளவு நன்மை இருந்தது. அன்றைய சென்னை மாநில நிதிநிலை மற்ற மாநிலங்களைவிடப் பாராட்டத் தக்க விதத்தில் இருந்தது.

மொத்த வருமானவரி வருவாயினை மாநிலங்களிடையே பகிர்வதிலும் ஒட்டோ நிமியர் புதிய சீர்திருத்தங்கள் பல ஏற்படுத்தினார். மொத்த வருமானத்தில் 50%, மாநிலங்களின் மக்கள் தொகையினையும், மாநிலங்களில் வருமானவரி கட்டுவோர் எண்ணிக்கைப்படி பகிர்ந்தளிக்கச் சிபாரிசு செய்தார். மொத்தப் பகிர்வுக்கான திரட்டில் சென்னை 15 சதவீதமும், பம்பாய்

[1] Otto Nemeyer — 'Indian Financial Enquiry Report' p. 3.

20 சதவீதமும், வங்காளம் 20 சதவீதமும் பெற்றது. மொத்தப் பகிர்வுத் திரட்டே சிறிய தொகையாக இருந்தமையால் எல்லா மாநிலங்களும் இந்தப் புதிய ஏற்பாட்டினுல் பயனடையவில்லே. மேலும், நிதித்துறையில் ஏற்பட்ட பல புதிய மாற்றங்களால் சென்னே மாநிலம் ரூ. 750·99 இலட்சம் பெற்றது. ஆனுல், இத் தொகை 1921–க்கு முன்னர் சென்னே, மத்திய அரசிடம் வாங்கிய கடனேத் திருப்பிக் கொடுக்கவே உதவிற்று.

1937-ல் நடைபெற்ற பொதுத் தேர்தலில் சென்னே மாநிலத்தில் காங்கிரஸ் வெற்றி பெற்றது. திரு. இராஜ கோபாலாச்சாரியாரை முதலமைச்சராக் கொண்ட அமைச்சரவை மக்களிடையே சமூகப், பொருளாதார முன்னேற்றம் ஏற்படுத்தவும், மக்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்தவும், உறுதிப்படுத்தவும் ஆட்சி அமைத்தது காங்கிரஸ் கட்சியின் நோக்கங்கள் அவர்களது நிதிக் கொள்கையிலும் பிரதிபலித்தது. ஆட்சி அமைத்தவுடன் மேற்கொண்ட முக்கியமான கொள்கை மதுவிலக்கு (Prohibition) மக்களே, மது அருந்துவதால் ஏற்படும் தீங்கிலிருந்து விடுவிக்க இந்தக் கொள்கையினே அரசாங்கம் கடைப் பிடித்தது. 1937 அக்டோபர் மாதம் சேலம் மாவட்டத்தில் மது விலக்கு அமுலாக்கப்பட்டது.

1937-38-ல் இக் கொள்கையினுல் மது செய் பொருள் வரியின் இழப்பு ரூ. 13 இலட்சம். 1938–39-ல் ரூ. 26 இலட்சமாக இழக்க வேண்டிய நிலே ஏற்பட்டது. இதனுல் அரசாங்க வருவாய் குறைந்தது. புதிய குடிதண்ணீர் வசதி, சாக்கடை வசதிகளே ஏற்படுத்தக் கடன் வாங்கவேண்டிய நிலே ஏற்பட்டது. 1939–40-ல் மதுவிலக்கு சித்தூர் மாவட்டத்திலும், கடப்பா மாவட்டத் திலும் அமுலுக்குக் கொண்டுவரப்பட்டது. இந்த இரண்டு மாவட்டங்களில் ரூ. 16 இலட்சம் செய் பொருள் வரி இழக்கப் பட்டது. இந்த ஆண்டில் வருமானம் குறைந்தது; மேலும், இராயலசீமாவில் ஏற்பட்ட பஞ்சத்தாலும், சென்னேயில் ஏற்பட்ட பெருவெள்ளத்தாலும் அரசாங்கத்தின் எதிர்பாராத செலவு அதிகமாயிற்று, இதைத்தவிர இந்த மாவட்டங்களில் பஞ்சம் நிலவுவதால் நிலவரி தாற்காலிகமாகத் தள்ளு செய்யப்பட்டது. 1938–39-ல் நிலவரி தள்ளு செய்யப்பட்டதாலும், மது செய் பொருள் வரி விலக்கப்பட்டதாலும் ஏற்பட்ட வருவாய் இழப்பு ரூ. 55 இலட்சம்; ரூ. 34 இலட்சம் செய் பொருள் வரி எடுத்தமையாலும், ரூ. 18 இலட்சம் நிலவரி தள்ளு செய்யபட்டதாலும், ரூ. 3 இலட்சம் வனத்துறை வருமானக் குறைவாலும் அரசாங்கம் இழந்தது.

| ஆண்டு | மொத்த வருமானம் | மொத்த செலவு | உபரி / பற்றுக் குறை | ஆயத் தீர்வை இழப்பு | மொத்த வருமானத்தில் ஆயத்தீர்வை இழப்பு சதவீதம் |
|---|---|---|---|---|---|
| | | ரூ இலட்சத்தில் | | | |
| 1937–38 | 1,600·62 | 1,582·96 | + 17·66 | $13\frac{1}{2}$ | 0·84 |
| 1938–39 | 1,613·45 | 1,609·72 | + 3·73 | 34 | 2·12 |
| 1939–40 | 1,665·90 | 1,637·39 | + 28·57 | $53\frac{1}{2}$ | 3·22 |
| 1940–41 | 1,807·51 | 1,754·75 | + 52·76 | 65 | 3·61 |

சென்னை அரசாங்கத்தின் செலவினங்களை நோக்கும்போது குடிநீர் வசதியினைப் பெருக்கவே அதிகச் செலவு செய்யப் பட்டுள்ளது. கிராமக் குடிநீர் வசதி சிறப்பு நிதி ஒன்று 1938–39-ல் ரூ 18 இலட்ச ஒதுக்கீட்டில் ஏற்படுத்தப்பட்டது. 1939–40-ல் சென்னை மாநிலத்தின் வரவு-செலவு நிலை மிகவும் அவலமாகக் காணப்பட்டது. 1939–40-ல் சென்னை மாகாணத்தில் வரலாறு காணாத வகையில் பஞ்சமும், மழையின்மையும், பின்னர் வெள்ளப் பெருக்கும் ஏற்பட்டு நிலவரி வருவாயினைப் பெருமளவுக்குப் பாதித்தது. இதே ஆண்டில் மதுவிலக்கு வட ஆர்க்காடு மாவட்டத்திலும் அமுலாக்கப்பட்டதால் அரசாங்க வருமானம் மேலும் குறைந்தது, இதைப்போன்ற பல காரணங்களால் அந்த ஆண்டு வரவு-செலவு திட்டத்தில் மொத்தப் பற்றுக்குறை ரூ. 42·39 இலட்சமாகியது. இந்தப் பற்றுக்குறையைப் போக்க, புதிய வரிகளை அரசாங்கம் விதித்ததால் நிகரப் பற்றுக்குறை ரூ 17·27–இலட்சமாகக் குறைந்தது.

சென்னை மாநில வரிக் கொள்கை பல்லாண்டுகளாக மாற்றப் படாமல் இருந்து வந்தது. மேலும், சில வரிகள் தேய்வீதவரிகளாக அமைக்கப்பட்டிருந்தன. வரி வருமானத்தைக் கூடுதலாக்க வரிகளைச் சீரமைத்துப் பயன் தரக்கூடிய முறையில் செயலாக்கத் திட்டமிட்டனர். இக் கொள்கைப்படி 1938 ஜனவரித் திங்கள், பதிவுக் கட்டணம் (Registration fee) உயர்த்தப்பட்டது. 1939 முதல் எரிபொருள் மீது வரி உயர்த்தப்பட்டது. குதிரைப் பந்தயத்தில் மொத்தப் பந்தயப் பணத்தில் பந்தய வரி $2\frac{1}{2}$ சதவீதத்திலிருந்து $3\frac{1}{8}$% ஆக உயர்த்தப்பட்டது. உதகை குதிரைப் பந்தயத்திலும் இந்தப் பந்தய வரி விதிக்கப்பட்டது.

மாவட்ட அரசாங்கங்கள் விதித்த கேளிக்கை வரி தள்ளு செய்யப்பட்டு 1939 முதல் சென்னை மாநில அரசாங்கமே அதை விதித்தது. 1939-ல் கொண்டுவரப்பட்ட சென்னை மாநிலத் துணி விற்பனைச் சட்டம் கைத்தறி உற்பத்தியைப் பெருக்கவும், அதே சமயத்தில் மாநில வருமானத்தைப் பெருக்கவும் இயற்றப்பட்டதாகும். 1939-ல் இயற்றப்பட்ட சென்னை மாநிலப் புகையிலைச் சட்டத்தின்படி, எல்லாப் புகையிலை வணிகரும் ஆண்டுதோறும் உரிமம் (LICENCE) பெறக் கட்டணம் செலுத்த வேண்டும். இந்தப் புதிய வரிகளைவிட மிக முக்கியமான வரி சென்னைப் பொது விற்பனைச் சட்டம். இதன்படி 1939 முதல் பல பொருள்கள் மீது விற்பனை வரி விதிக்கப்பட்டது. இதன் மூலம் இன்று சென்னை அரசாங்க வருமானத்தில் 60%க்கு மேல் கிடைக்கிறது. 1940–41-ல் பதிவுக் கட்டண விதிப்பால் ரூ. 5 இலட்சமும், புகையிலைச் சட்டத்தினால் ரூ. 22 இலட்சமும் வருமானம் கிடைத்தது. விற்பனைவரி பொருள்களின் விற்பனையின் மேல் விதிக்கப்படும் வரி. 1939-ல் இதை அமுலுக்குக் கொண்டுவந்த போது முக்கிய நோக்கம், மதுவிலக்கால் ஏற்பட்ட நிதி இழப்பைத் தவிர்ப்பதே.

ஒரு சில்லறை வணிகரின் வாணிப மதிப்பு ரூ. 10,000-க்கு மேல் இருந்தால் மாதம் ரூ. 5 வீதம் அரசாங்கத்துக்கு வரி செலுத்த வேண்டும். ரூ. 20,000க்கு மேல் மாதந்தோறும் வாணிபம் நடந்தால் வாணிப மதிப்பில் 1½% வரியாகச் செலுத்த வேண்டும். 1939-ல் இவ்வரியின் மூலம் அரசாங்கத்துக்குக் கிடைத்த வருமானம் ரூ. 439·60 இலட்சம்.[1] மோட்டார் எரிபொருள் விற்பனைச் சட்டத்தால் ஒரு காலன் பெட்ரோல்மீது 1½% வரியும், மற்றைய எரிபொருள் வகை மீது 1% வரியும் விதிக்கப்பட்டது. 1939–40ஆம் ஆண்டில் மோட்டார் எரிபொருள் விற்பனை வரியில் சென்னை மாநிலத்திற்கு ரூ. 15·76 இலட்சம் வருவாய் கிடைத்தது.

திரு. இராஜகோபாலாச்சாரியார் முதல் அமைச்சராக விளங்கியபோது பல புதிய செலவுக்குறைப்பு முறைகளைக் கையாண்டார். அமைச்சர்களின் ஊதியமும், பார்லிமெண்ட் காரியதரிசிகளின் ஊதியமும், மாநில நாடாளுமன்ற அங்கத்தினருடைய வருமானமும் குறைக்கப்பட்டது.

[1] T. Meenakshi — 'Finances of Madras Government since 1919' M. Litt, Thesis University of Madras.

சென்னை மாநிலப் பொதுக்கடன் மற்ற மாநிலங்கள் பொருமைப்படக்கூடிய அளவிற்குக் குறைந்து காணப்பட்டது.[1] இதன் காரணம் சென்னை மாநில அரசு மிகவும் பழமையான (Conservative) பொதுக்கடன் கொள்கையினைப் பின்பற்றியதே யாகும்.[2] ஆனால், பம்பாய் மாநிலத்தின் கடன் வருமானத்தைவிட $1\frac{1}{2}$ மடங்கு அதிகமாகவும், வட்டி செலவிற்காக மொத்த வருமானத்தில் $7\frac{1}{2}\%$ மேல் செலவிட வேண்டியிருந்தது.[3]

இரண்டாவது உலகப்போர் தொடங்கியதன் விளைவாகச் சென்னையில் காங்கிரஸ் ஆட்சியிலிருந்து விலகியது. ஆளுநர் ஆட்சி, ஓர் ஆலோசனைக் குழுவோடு தொடரப்பட்டது. இந்த ஆலோசகர் குழு கிராமப்புறக குடிதண்ணீர் வசதி பெருக்கவும், புதிய சாலைகள் ஏற்படுத்தவும் தனியே நிதி ஒதுக்கியது. இப் போர்க்காலத்தில் சென்னை மாநிலத்தில் சில வட்டாரங்களில் பஞ்சம் வேறு நிலவியது. இதனால் 19:3-44 நிதியாண்டில் ரூ. 17·84இலட்சம் அளவில் வரவு-செலவு திட்டத்தில் பற்றுக்குறை ஏற்பட்டது. இந்த நிதி நெருக்கடியினைப் போக்க மதுவிலக்கு நீக்கம் செய்யப்பட்டது. பதிவுக் கட்டணம், முத்திரைத்தாள் பந்தயவரி, பொது விற்பனை வரிக்கட்டணங்கள் உயர்த்தப் பட்டன. 1945-46-ல் சென்னை மாநில வரவு-செலவு திட்டப்படி வருவாய் ரூ. 4,798·89 இலட்சம்; செலவு 4,798·74; உபரியாக ரூ. 0·15 இலடசம் இருந்தது. மாநிலத்தின் வரவும், செலவும் உயரக் காரணம் போர்க்கால விலையுயர்வாகும். வருமானவரி வருவாய் 931%, செய்பொருள்வரி 400%, வன வருமானம் 219%, மற்றையவரி வருவாய்கள் 822% ஆக உயர்ந்தது. மாநிலத்தின் வருவாய்மட்டும் 188% ஆக உயர்ந்தது. 1939-40-ல் ரூ. 33·99 இலட்சம் வருமானம் ஈட்டித்தந்த விற்பனைவரி 1945-46-ல் ரூ. 602·71 இலட்சம் ஈந்தது.

போர்க் காலத்தில் சென்னை அரசாங்கத்தின் செலவினை நோக்கும்போது உள்நாட்டுப் பாதுகாப்பிற்காக 1942-43-ல் ரூ. 107·73 இலட்சம் செலவிடப்பட்டது. 1943-44-ல் இச் செலவு 244·13- இலட்சமாக உயர்ந்தது. பொது நிர்வாகத்திற்கான செலவு ரூ. 294·95 இலட்சத்திலிருந்து ரூ. 127·24 இலட்சமாக உயர்ந்தது. சமூக முன்னேற்றச் செலவும் ரூ. 469·65 இலட்சத்

[1] & [2] Thomas, P. J. — Madras 'Legislative Council Debates', vol General Discussions on Budget. 39-40.

[3] Meenakshi — 'Finances of Madras Government Since 1919'.

திலிருந்து ரூ. 810·28 இலட்சமாக 1939-45 ஆண்டுகளில் உயர்ந்தது. போருக்குப் பின்னர் நாட்டில் அமைதி தோன்றிய போது காங்கிரஸ் மீண்டும் ஆட்சிபீடத்தில் அமர்ந்தது. பல புதிய கொள்கை மாற்றங்களிடையே மதுவிலக்கு மீண்டும் கொண்டு வரப்பட்டது. மன்னர் மாநிலங்கள் பெரிய மாநிலங்களுடன் சேர்க்கப்பட்டதால் சென்னை மாநிலம் 1600 சதுர மைல் அளவுடைய புதுக்கோட்டையையும், பேகப்பள்ளியையும் சேர்த்துக் கொண்டது.

மக்களாட்சி தோன்றிய பின் தேர்தலில் வெற்றிபெற்ற காங்கிரஸ் அக்டோபர் 1948க்குள் மாநிலமெங்கும் மதுவிலக்கினை அமுல்படுத்தினர். இதனால் சென்னை அரசாங்கம் இழந்த வருமானம் ரூ. 16 கோடிக்கு மேலாகும் ஜமீந்தாரி முறை ஒழிக்கப் பட்டதாலும், சென்னை நகரப் போக்குவரத்து நாட்டுடைமை யாக்கப்பட்டதாலும், ரூ. 70 இலட்சம் இழப்புப் பணமாகவும், மின்சார உற்பத்தி நிறுவனங்களைத் தேசியமயமாக்கியதால் ரூ. 3 கோடியும் செலவிடப்பட்டது.

## 1951க்குப் பின்னர் மாநில நிதிநிலை.

1953-ல் ஆந்திர மாநிலம் தனியே பிரிந்தமையால், சித்தூர், கடப்பா போன்றவை சென்னை மாநிலத்திலிருந்து பிரிந்தன. 1956-ல் மொழிவாரிக் கொள்கைப்படி மாநிலங்களைப் பிரித்தமை யால் மேலும் பல பகுதிகள் சுற்றுப்புற மாநிலங்களுக்குச் சேர்ந்தன. இதனால் தமிழக நிதிநிலை எப்படி பாதிக்கப்பட்டது என்பதை அறிதல் அவசியம்.

சுதந்திரத்திற்குப் பின் அரசியல் சட்டம் இயற்றப்பட்டு வரும் போது திரு. சர்கார் தலைமையில் மத்திய-மாநில உறவினை ஆராய இந்திய அரசாங்கம் ஒரு குழுவினை நியமித்தது. மாநிலங்களின் வருவாயினைப் பெருக்க வேண்டுமானால் மத்திய அரசின் வரி அதிகாரங்களைக் குறைத்தே ஆக வேண்டும் என்று இக்குழு எண்ணியது. இக்குழுவின் சிபாரிசுகள் எதுவுமே நிறைவேற்றப் படவில்லை.

1937–38க்குப் பிறகு 1951-ம் ஆண்டு வரவு-செலவு திட்டத்தில் அதிக பற்றுக்குறை ஏற்பட்டது. இரண்டாம் உலகப் போர்க்காலத்திற்குப் பிறகு சென்னை மாநிலத்தில் நிதிநிலை பாராட்டத்தக்க முறையிலேயே இருந்தது. வருமானம் உபரித் தொகை சேமிப்பு நிதியாக மாற்றப்பட்டது. 1949-ல்,

ஏப்ரல் மாதம் 1 ஆம் தேதியன்று சேமிப்புத் தொகை ரூ. 33 கோடியாகும். 1949–50-ல் சென்னை விற்பனை வரியின் வருவாய் ஈட்டால் ரூ. 35 இலட்சம் வருமான உபரி கிடைத்தது. தொடர்ந்து 1950–51-ல் ரூ. 1·29 கோடியும், 1951–52-ல் ரூ. 4·97 கோடி பற்றுக்குறையும் ஏற்பட்டதால் சேமிப்பு நிதி குறைய ஆரம்பித்தது. 1949-ல் சென்னை மாநில அரசு ரூ. 43·5 கோடி மதிப்புள்ள கடன் பத்திரங்களும், ரூ. 89 இலட்சம் பஞ்ச நிவாரணவைப்பு நிதியும் கொண்டிருந்தது. மூலதனச் செலவு உயர்ந்ததால் பல அரசாங்கக் கடன் பத்திரங்கள் (Securities) விற்கப்பட்டன. 1951–52-ல் ரூ. 14·5 கோடி கடன் பத்திரமும் ரூ. 63 இலட்சம் பஞ்ச நிவாரண நிதியும் செலவிடப்பட்டது. பண அங்காடியில் கருவூல உண்டியல்கள் வெளியிட்டுக் கடன் வாங்காமல் இந்திய மைய வங்கியிடம் கடன் வாங்கப் பட்டது.

முன்பணமாகக் கடன் வாங்கிய தொகை
ரூ. கோடியில்

| ஆண்டு | முன்பணமாக வாங்கிய தொகை | திருப்பிக் கொடுக்கப் பட்டது | மீதி | வட்டி |
|---|---|---|---|---|
| 1949–50 | 16·03 | 16·03 | — | 0·01 |
| 1950–51 | 29·08 | 27·44 | 1·64 | 0·03 |
| 1951–52 | 5 38 | 6·22 | 0 80 | 01·0 |

1952 முதல் 1956 வரை சென்னை மாநிலம் பற்றுக்குறை வரவு-செலவு திட்டத்தையே மேற்கொண்டது. மேலும், இக்காலத்தில் பொதுக்கடன் தொகை உயர்ந்து கொண்டே சென்றது. மாநிலப் பரப்பளவு மாற்றியமைக்கப்பட்டதால் சென்னை அரசாங்கத்தின் மொத்த வருமானம் ரூ. 58·42 கோடியி-லிருந்து ரூ. 56·23 கோடியாகக் குறைந்தது. வரி வருமானம் ரூ. 48·73 கோடியிலிருந்து ரூ. 37·65 கோடியாகக் குறைந்தது, மொத்த வருமானத்தில் 1952-53-ல் விற்பனைவரி 28·31%ஈந்தது. வருமானவரி பகிர்வு வருவாய், மொத்த வருமானத்தில் 13%லிருந்து 11.26% ஆகக் குறைந்தது. நிலவரி வருவாய் மொத்த வருமானத்தில் 1952–53-ல் 12·9% ஆக இருந்தது 1956–57-ல் 4·68%ஆகக் குறைந்தது. பத்திர விற்பனை வரவும் மொத்த வருமானத்தில் 7·73% இருந்து 6·45% ஆகக் குறைந்தது.

இந்த ஐந்தாண்டுகளில் பற்றுக்குறை வரவு-செலவு திட்டமே தொடர்ந்து நடத்தப்பட்டது. அரசாங்கச் செலவு உயர்ந்து கொண்டே சென்றது. ஆனால், வருவாயோ குறைந்து கொண்டே சென்றது.

| ஆண்டு | மொத்த வருமானம் | மொத்தச் செலவு | பற்றுக்குறை / உபரி |
|---|---|---|---|
| | ரூ. இலட்சத்தில் | | |
| 1952–53 | 5842·32 | 6840·70 | —998·38 |
| 1954–55 | 4332·88 | 4724·52 | —391·64 |
| 1955–56 | 5209·48 | 5455·88 | —246·40 |
| 1956–57 | 5622·88 | 5779·73 | —156·85 |
| 1957–58 | 6256·36 | 5915·02 | +341·34 |

1952–53-ல் பொது நிர்வாகத்திற்காகச் செய்த செலவு, மொத்த வருமானத்தில் 73.81% அதாவது, மொத்தச் செலவில் 63·04% ஆகும். பஞ்ச நிவாரண நிதிக்காக ஒதுக்கப்பட்ட பணமும், வருமான சேமிப்புப் பணமும், முழுவதும் செலவிடப் பட்டது. மைய வங்கியிடம் இருந்து வழிவகை முன்பணமாகவும், சிறப்பு முன்பணமாகவும் அதிகப் பற்றுக்கடனும் மாநில அரசு பெற்றது. முன்பணமாக வழங்கப்பட்ட தொகை ரூ. 51·96 கோடியாகும். அதற்கான வட்டித் தொகை ரூ. 3·13 கோடி யாகும். சென்னை மாநில அரசாங்கத்தின் மொத்தப் பொதுக் கடன் ரூ. 84·05 கோடியிலிருந்து ரூ. 129.91 கோடியாக 1952–57 ஆண்டுகளில் உயர்ந்தது. இதைத் தவிர 1952–53ல் பஞ்ச நிவாரண வேலைக்காக ஒரு தனியார் வங்கியிடமிருந்து ரூ. 1 கோடி கடனாகப் பெறப்பட்டது. இந்திய அரசாங்கம் மூலதனப் பெருக்கத்துக்கு அயல் நாடுகளை நம்பியிருப்பதைப்போல், இந்திய மாநில அரசாங்கங்கள் மைய வங்கியையும், மத்திய அரசினையும் நம்பியே நிதித்திட்டம் அமைத்தனர்.

1957க்குப் பின் மாநில நிதிநிலைமை :

1957 முதல் 1962 வரை சென்னை மாநில நிதி நிலை சாதக மாகவே இருந்தது. இந்தியாவிலுள்ள எல்லா மாநிலங்களின் வருமானம் ரூ. 711.71 கோடியிலிருந்து ரூ 1073.49 கோடியாக உயர்ந்தது; சென்னை மாநில வருவாய் ரூ. 62.56 கோடியிலிருந்து

ரூ. 92·11 கோடியாக 47% உயர்ந்தது. இம்மாநிலத்தின் வரி வருமானம் இடைவெளியில் ரூ 42·19 கோடியிலிருந்து ரூ. 54·39 கோடியாக 28% வளர்ச்சி கண்டது. மற்ற அரசாங்க வருமானம் ரூ. 20·37 கோடியிலிருந்து ரூ. 37·78 கோடியாக 80% உயர்வு கண்டது.

சென்னை அரசாங்க வரிகளின் வருவாயைப் பார்க்கும்போது விற்பனைவரி வருமானம் ரூ. 15·2 கோடியிலிருந்து ரூ. 21·25 கோடியாக 1957–62 ஆண்டுகளில் உயர்ந்தது. எல்லா மாநிலங்களிலுமே விற்பனைவரி மாநில அரசாங்கத்திற்கு அதிக வருமானத்தை அளித்தது. 1957–ல் இந்திய மாநிலங்களின் மொத்த வருமானத்தில் விற்பனை வரி வாயிலாக ரூ. 107·3 கோடி வருமானம் கிடைத்தது. 1962–ல் இத்தொகை ரூ. 163·14 கோடியாக உயர்ந்தது. இன்று சில மாநிலங்களின் வருவாய்ப் பெருக்கத்திற்குக் காரணமே இந்த விற்பனைவரி மாநில வரியாக இருப்பதேயாகும். வருமானவரிப் பகிர்வால் மாநில அரசாங்கத்திற்குக் கிடைக்கும் வருவாய் இந்த ஐந்து ஆண்டுகளில் ரூ. 78·36 கோடியிலிருந்து ரூ. 94·37 கோடியாகக் கூடியது. நிலவரி வருமான குறையும் தன்மை இந்த ஐந்து ஆண்டுகளில் காணப்பட்டது. மொத்த வருமானத்தில் நிலவரிப் பங்கு 7·93 சதவீதத்திலிருந்து 4·80 சதவீதமாகக் குறைந்தது. இதைத்தவிரப் பத்திரத்தாள் வருமானம் மொத்த வருமானத்தில் 5·66% ஈந்தது. வரிகளாலும், தீர்வைகளாலும் சென்னை மாநிலத்திற்குக் கிடைக்கும் வருவாய் 67·43%-லிருந்து 59·0% ஆகக் குறைந்தது. இந்த ஐந்தாண்டுகளில் வரி வருமானம் 28% ஆகவும், மற்ற வரியற்ற வருமானம் 85% ஆகவும் உயர்ந்தது.

அரசாங்கச் செலவு :

அரசாங்கச் செலவு வருமானத்தைவிட வேகமாக உயர்ந்தது. இச்சமயம் இந்தியாவில் இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டம் செயல்படுத்தப்பட்டிருந்தது. சென்னை மாநில இரண்டாவது திட்டம் பல கொள்கைகளைக் கொண்டு இயற்றப்பட்டிருந்தது. முக்கியமாக,

(1) மாநில உற்பத்தி அளவினை மாநிலத்தின் தேவைக்கேற்ப உயர்த்துவதும்,

(2) மக்கள் தேவைக்கேற்ப மாநிலம் உற்பத்தியில் தன்னிறைவு அடைதலும்,

(3) வேளாண்மை உற்பத்தியை மாநிலத் தேவைக்கு மேல் உபரியாகப் பெருக்குவதுமாகும்.

மத்திய அரசாங்கம் சென்னை மாநிலத் திட்டத்திற்காக ஒதுக்கீடு செய்த தொகை ரூ. 152 கோடி. ஆனால், ஏற்பட்ட செலவு ரூ. 156 கோடியாகும். இந்த அதிகச் செலவினை மாநில அரசாங்கமே மேற்கொண்டது. பொது நிர்வாகத்திற்கும், சமூகப் பொருளாதார முன்னேற்றத்திற்கும், 1957–58-ல் மொத்தச் செலவில் 63·66% செலவு செய்தது. 1961–62-ல் இத்தலைப்புக்குச் செய்த செலவு மொத்தச் செலவில் ரூ. 69·75 கோடியாகும். பொதுப்பணித் துறைக்காகச் செய்த செலவு மொத்தச் செலவில் 7·15% ஆகஇருந்து 8.73% ஆக 1957–62 வருடங்களில் கூடியது. இதற்குக்காரணம் இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் தொழில் வளர்ச்சிக்கேற்ற சூழ்நிலையும் மாநில அரசின் முக்கிய கடமையாகக் கருதப்பட்டது. இதைத்தவிர அரசாங்கப் பொதுக்கடன் வட்டிச்செலவு, மொத்தச் செலவில் 3·86%-லிருந்து 5·76% ஆக உயர்ந்தது.

இந்த ஐந்தாண்டுகளில் உபரி வரவு- செலவுத் திட்டம் (Surplus Budget) அமைத்தும், பொதுக்கடன் உயர்ந்துகொண்டேயிருந்தது.

பின்வரும் புள்ளி விவர அட்டவணை இதனை விளக்குகிறது.

| ஆண்டு | மொத்த வருமானம் | மொத்தச் செலவு | உபரி / பற்றுக்குறை | மொத்தக் கடன். |
|---|---|---|---|---|
| | | | ரூ. கோடியில் | |
| 1957–58 | 62·56 | 59·15 | + 3·41 | 144·98 |
| 1958–59 | 69·95 | 68·35 | + 1·60 | 147·27 |
| 1959–60 | 81·11 | 80·58 | + 0·53 | 179·31 |
| 1960–61 | 92·03 | 91·09 | + 0 94 | 202·74 |
| 1961–62 | 92·17 | 11·79 | — 9·1 | 230·09 |

1957 முதல் 62 வரை சென்னை மாநில அரசின் மொத்தக் கடன் 95% உயர்ந்தது. இதைத் தவிர மைய வங்கியிடமிருந்து முன்பணமாகப் பலமுறை சென்னை அரசாங்கம் கடன் பெற்றது. 1957 முதல் 62 வரை வருமானமும், செலவும், கடனும் உயர்ந்து கொண்டே சென்றன. வருமான உயர்வுக்கேற்பச் செலவும் உயர்ந்தமையால்கடனைத் தவிர்ப்பது கடினமாயிற்று.

இன்றைய தமிழக மாநில நிதிநிலை :

1962 முதல் தமிழக மாநிலத்தில் வரி வருமானம் அதன் செலவினைப்போல் உயரவில்லை. ஆகையால், மத்திய அரசிடம் அதிகக் கடனும், ரிசர்வ் வங்கியிடமிருந்து அதிகப்பற்றுக் கடனும் வாங்க வேண்டிய அவசியம் ஏற்பட்டது. தமிழக அரசின் வருமானம் 1961–62-ல் ரூ. 91 கோடியாக இருந்தது. 1965–66-ல் ரூ. 172 கோடியாகவும், 1968–69-ல் ரூ. 248 கோடியாகவும், ஏழு ஆண்டுகளில் இரு மடங்கிற்குமேல் உயர்ந்தது. எல்லா மாநிலங்களின் வருமான உயர்வினை நோக்கும்போது 1961–62 ல் மொத்த மாநிலங்களின் வருவாய் ரூ. 1,073 கோடியாகும், 1965-66-ல் ரூ. 18·31 கோடியாக 11% உயர்ந்தது; தமிழக மாநிலத்தின் வருமானம் மற்ற மாநிலங்களின் வருமானத்தைவிட வேகமான வளர்ச்சியினைக் காண்பித்துள்ளது.

தமிழக அரசாங்கச் செலவு, வருவாயைவிட அதிவேகமாக உயர்ந்தமையால் வருமான உபரி ஏற்படத் தடையாக இருந்தது. 1961–62-ல் மாநிலத்தின் மொத்தச்செலவு ரூ. 101 கோடியாகவும், 1965–66-ல் ரூ. 180 கோடியாகவும் உயர்ந்தமையால் பற்றுக்குறை வரவு-செலவு திட்டம் அமைக்க வேண்டிய அவசியம் ஏற்பட்டது.

| ஆண்டு | மொத்த வருமானம் | மொத்தச் செலவு | பற்றுக்குறை உபரி |
|---|---|---|---|
| | | ரூ. கோடியில் | |
| 1961–62 | 92·17 | 101·79 | — 9·62 |
| 1962–63 | 117·80 | 121·80 | — 3·84 |
| 1963–64 | 134·76 | 134 99 | — 2· 2 |
| 1964–65 | 153 88 | 151·29 | + 2.55 |
| 1965–66 | 172·79 | 180·66 | — 7 86 |

1962-க்குப் பின்னர், 1964–65, 1968–69 நிதியாண்டுகளைத் தவிர மற்ற எல்லா ஆண்டுகளிலும் பற்றுக்குறை வரவு–செலவு திட்டமே அமைக்கப்பட்டது. 1964–65 வருமான உபரி ரூ. 23 இலட்சமும்; 1968–69 ல் ரூ. 13·6 இலட்சமும் உபரி ஏற்பட்டும் நிதிநிலை சாதகமாக மாறவில்லை. மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டக் காலத்திலும் மத்திய அரசும் பற்றுக் குறை வரவு-செலவு திட்டத்தை மேற்கொண்டமையால் மொத்தம் ஏற்பட்ட பற்றுக் குறை ரூ 774 கோடியாகும். மத்திய, மாநில அரசாங்கங்கள்

இதைப்போல் பற்றுக்குறை நிதியாக்கத்தைக் கையாண்டமையால் தான் 3-வது திட்டக்காலத்தில் பணவீக்கம் மிகப் பெரிய பொருளாதாரப் பிரச்சினையாயிற்று. 1962–63ஆம் ஆண்டு தமிழகத்தின் மொத்த வருமானம் ரூ. 117·96 கோடியாகும். 1970–71-ல் மொத்த வருமானம் ரூ. 312·59 கோடி. பத்தாண்டுகளுக்குள் வருமானம் இரண்டரை மடங்கு பெருகியுள்ளது. அதற்கேற்ப வருவாய்க் கணக்கில், செலவும் ரூ. 121·80 கோடியிலிருந்து ரூ. 320·43 கோடியாக இதே ஆண்டுகளில் உயர்ந்துள்ளது. மாநிலத்தின் கடமைகளும், பணிகளும் அதிகமாகிக் கொண்டிருப்பதால், கணிசமான வருமான உயர்வு ஏற்பட்டும், வரவு-செலவு திட்டத்தில் உபரி ஏற்படவில்லை. 1962–63 முதல் 1970–71 வரை விற்பனை வரி வருவாய் மட்டும் ரூ. 24·80 கோடியிலிருந்து ரூ. 82·61 கோடியாக உயர்ந்துள்ளது. அதே ஆண்டுகளில் கல்வித்துறைச் செலவு ரூ. 25·76 கோடியிலிருந்து ரூ. 70·95 கோடியாக அதிகரித்துள்ளது. இதைத் தவிர இவ்வாண்டுகளில் மாநிலங்கள் மத்திய அரசிடமிருந்து பெறும் கடனும், ரிசர்வ் வங்கியிடமிருந்து பெறும் அதிகப்பற்றும் மிகவும் உயர்ந்துள்ளது.

# 3. தமிழக மாநில வருமானம்

''பொருளின்றி அமையாது எத்திட்டமும்''
[அர்த்த சாஸ்திரம்]

''இயற்றலும் ஈட்டலும் காத்தலும் காத்த
வகுத்தலும் வல்ல தரசு'' [குறள்]

தமிழக மாநிலத்தின் நிதி வரலாற்றினைப்பற்றி அறிந்த பின்னர், அதன் வரி வருமானத்தைப் பற்றித் தெரிந்து கொள்ளுதல் அவசியம். மாநில வரி வருவாய் பற்றிய சிக்கல்கள் பல. பொது நிதியியல் பொருளாதார வரிக் கோட்பாடுகளைப் பற்றியும், அவற்றைச் செயல் முறையில் பின்பற்றுவதில் ஏற்படும் பல இன்னல்களைப்பற்றியும் நுணுகியாய்கிறது. இவண் மாநில அரசின் வரி அதிகாரங்களைப்பற்றியும், அதனுல் மாநில அரசாங்கத்திற்குக் கிடைக்கும் வருவாயினைப்பற்றியும், வருவாயைப் பெருக்க எவ்வித வரித் திட்டங்கள் உதவியாக இருக்கும் என்பதைப் பற்றியும் ஆராய்வோம்.

மாநில அரசாங்கங்களின் முக்கிய வரிகள் பின்வருமாறு :

(1) நிலவரி,

(2) விற்பனைவரி,

(3) ஆயத்தீர்வை.

(4) நில வருமான வரி,

(5) வண்டி வரி,

(6) பத்திரங்கள்,

(7) பதிவுக் கட்டணங்கள்,

(8) கேளிக்கை வரி முதலியன.

இவற்றைத் தவிர மத்திய அரசிடமிருந்து தொகுநிதி பகிர்வுத் திரட்டிலே ஓரளவு பங்கும், உதவி மானியங்கள், வரி அல்லாத மற்ற வருமானங்கள் (Non tax-Revenue) முதலியவை மாநில அரசாங்கங்களுக்குக் கிடைக்கின்றன. 1951–52 முதல் 1966–67 வரை மாநிலங்களின் வருமானம் 5½ மடங்கு வளர்ந்துள்ளது. 1951–52-ல் மாநிலங்களின் வரிவருவாய் மொத்த வருமானத்தில் 58% ஆக இருந்தது. 1966–67-ல் மாநில வரித்தொகை மொத்த வருமானத்தில் 44% ஆகக் குறைந்துள்ளது

மாநில வரவு–செலவு திட்டம்

(1955–56 முதல் 1969–70 வரை)

| | வருமானம் | வருமானத்தில் செலவு | + அல்லது — |
|---|---|---|---|
| | | ரூ. கோடியில் | |
| 1955–56 | 52·09 | 54·55 | — 2·46 |
| 1956–57 | 55·22 | 56·87 | — 1·65 |
| 1957–58 | 62·56 | 59·15 | + 3·41 |
| 1958–59 | 69·95 | 68·35 | + 1·60 |
| 1959–60 | 81·10 | 80·57 | + 0·63 |
| 1960–61 | 92·03 | 91·09 | + 0·94 |
| 1961–62 | 92·17 | 101·79 | — 9·62 |
| 1962–63 | 117·96 | 121·80 | — 3·84 |
| 1963–64 | 134·76 | 134·99 | — 2·2 |
| 1964–65 | 153·88 | 151·29 | + 2.58 |
| 1965–66 | 172·79 | 180·66 | — 7·86 |
| 1966–67 | 194·55 | 201·42 | — 6 86 |
| 1967–68 | 233·39 | 233·32 | + 13·66 |

| மாநில அரசு | மாநில வருமானம் 1962–65 சராசரி. மொத்த வருமானம் (ரூ. கோடியில்). | தலா வருமானம் | வரிவருமானம் 1967–68-ல். மொத்தம் (ரூ. கோடியில்). | தலா. | மாநில மொத்தத்தில் மாநில வருமானச் சதவீதம். |
|---|---|---|---|---|---|
| (1) | (2) | (3) | (4) | (5) | (5) |
| பஞ்சாப் ... | 595 | 492 | 50·20 | 37·46 | 8·44 |
| மஹாராஷ்டிரம் ... | 2,019 | 478 | 168·28 | 36·50 | 8·34 |
| மேற்கு வங்காளம் ... | 1,742 | 465 | 108·11 | 26·30 | 6·21 |
| குஜராத் ... | 1,025 | 462 | 71·90 | 29·59 | 7·01 |
| ஹரியாளு ... | 367 | 445 | 26·34 | 28·95 | 7·18 |
| தமிழ்நாடு ... | 1,408 | 400 | 109·54 | 29·37 | 7·78 |
| அஸ்ஸாம் ... | 503 | 393 | 26·31 | 18·66 | 5·23 |
| ஆந்திரா ... | 1,460 | 386 | 79·48 | 19·67 | 5·44 |
| மைசூர் ... | 936 | 373 | 63·10 | 23·28 | 6·74 |
| கேரளா ... | 616 | 341 | 53·79 | 27·44 | 8·73 |
| மத்தியபிரதேசம் ... | 1,126 | 325 | 63·54 | 16·94 | 5·64 |
| ராஜஸ்தான் ... | 683 | 314 | 46·60 | 19·50 | 6·82 |
| உத்திரபிரதேசம் ... | 2,398 | 306 | 123·09 | 14·60 | 5·13 |
| ஒரிஸ்ஸா ... | 568 | 306 | 24·25 | 12·12 | 4·27 |
| ஜம்மு, காஷ்மீர் ... | 111 | 302 | 7·58 | 19·44 | 6·83 |
| பீஹார் ... | 1.308 | 265 | 64·29 | 12·06 | 4·91 |
| நாகாலாந்து ... | — | — | 0·23 | 5 75 | — |
|  | 16,865 | 369 | 1,086·63 | 21.92 | 6·44 |

வரி வருமானமும் வரி அல்லாத வருமானமும் 67-68ல்

| மாநிலங்கள் | வரி வருமானம் | வரி அல்லாத வருமானம் | மொத்த வருமானம் | மொத்த வருமானத்தில் வரி அல்லாத வருமானச் சதவீதம் |
|---|---|---|---|---|
| | | ரூ, கோடியில் | | |
| ஆந்திரப்பிரதேசம் | 79·48 | 43·31 | 122 79 | 35·27 |
| அஸ்ஸாம் | 26·31 | 8·59 | 34·90 | 24·61 |
| பீஹார் | 64·29 | 28·67 | 92·96 | 30·84 |
| குஜராத் | 71·90 | 31·94 | 103·84 | 30·76 |
| ஹரியாணு | 26·34 | 22·02 | 48·36 | 45·53 |
| ஜம்மு & காஷ்மீர் | 7·58 | 12·85 | 20·43 | 62·90 |
| கேரளா | 53·79 | 23·69 | 77 48 | 30·58 |
| மத்தியப்பிரதேசம் | 63·54 | 43·65 | 107·19 | 40·72 |
| மஹாராஷ்டிரம் | 168·28 | 63·45 | 231·73 | 27·38 |
| மைசூர் | 63·10 | 50·68 | 113·78 | 44·54 |
| நாகாலாந்து | 0·23 | 0 76 | 0·99 | 76·77 |
| ஒரிஸ்ஸா | 24·25 | 27·25 | 51·50 | 52·91 |
| பஞ்சாப் | 50·20 | 33·68 | 83 88 | 40·15 |
| ராஜஸ்தான் | 46·60 | 27·59 | 74·19 | 37 19 |
| தமிழ்நாடு | 109·54 | 61·49 | 171·03 | 35·95 |
| உத்தரப்பிரதேசம் | 123·09 | 112·74 | 235·84 | 47 81 |
| மேற்குவங்காளம் | 108·11 | 31·86 | 139·97 | 22·76 |
| | 1,086·63 | 624·22 | 1,710·85 | 36·49 |

மாநில வரி வருமானமும் தலா வரி வருமானமும்

| | 1960–61 | | 1965–66 | |
|---|---|---|---|---|
| ரூ. | மொத்தம் கோடியில் | தலா | மொத்தம் | தலா வருமானம் |
| ஆந்திரப்பிரதேசம் | 40·18 | 11·17 | 69·13 | 17·69 |
| அஸ்ஸாம் | 12·27 | 10·33 | 21·61 | 16·07 |
| பீஹார் | 31·24 | 6·72 | 54·92 | 10·71 |
| குஜராத் | 21·08 | 10·22 | 51·79 | 22·33 |
| ஜம்மு & காஷ்மீர் | 2·85 | 8·00 | 5·24 | 13·87 |
| கேரளா | 20·17 | 11·93 | 38·56 | 20·49 |
| மத்தியப்பிரதேசம் | 27·17 | 8·40 | 48 96 | 13·87 |
| மஹாராஷ்டிரம் | 64·26 | 16·05 | 112·42 | 27·72 |
| மைசூர் | 24·42 | 10·35 | 46·48 | 17·84 |
| நாகாலாந்து | — | — | 0·14 | 3·53 |
| ஒரிஸ்ஸா | 8·54 | 4·87 | 19·74 | 10·23 |
| பஞ்சாப் | 25 66 | 12·67 | 55·91 | 24·13 |
| ராஜஸ்தான் | 18·12 | 8·99 | 35·42 | 15·53 |
| தமிழ்நாடு | 39·80 | 11·81 | 83·21 | 22·98 |
| உத்தரப்பிரதேசம் | 57·45 | 7·79 | 94·97 | 11·71 |
| மேற்கு வங்காளம் | 51·53 | 14·75 | 94·12 | 23 99 |

## மொத்த வருமானத்தில் மாநில வரி வருவாய்

ரூ கோடியில்

| | 1951-52 | சதவீதம். | முதல் திட்டத்தில் சராசரி வருமானம். | சதவீதம். | இரண்டாவது திட்டத்தில் சராசரி வருமானம். | சதவீதம். | மூன்றாவது திட்டத்தில் சராசரி வருமானம். | சதவீதம். | 1966-67 | சதவீதம். |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| மாநில வரிகள் | 228 | 58 | 253 | 54 | 389 | 48 | 662 | 45 | 933 | 44 |
| பகிர்வுத் திரட்டு | 53 | 13 | 69 | 15 | 132 | 16 | 239 | 16 | 347 | 17 |
| வரிதவிர மற்ற வருமானம் | 90 | 23 | 107 | 23 | 202 | 25 | 311 | 21 | 430 | 20 |
| உதவிமானியங்கள் | 25 | 6 | 308 | 8 | 85 | 11 | 251 | 18 | 402 | 19 |
| மொத்தம் | 396 | 100 | 468 | 100 | 808 | 100 | 1,463 | 100 | 2,112 | 100 |

மாநிலங்களின் வரி வருமானம் குறைந்து வருகிறது. மத்திய அரசிடமிருந்து பெரும் உதவி மானியங்கள் தொகை 1951–52ல் 6%ஆக இருந்து 1966–67-ல் 19% ஆக உயர்ந்துள்ளது. பகிர்வுத் திரட்டினால், 1951 முதல் 1967 வரை மாநிலங்களின் வருமானம் 4% மட்டுமே உயர்ந்துள்ளது. 1951 முதல் நமது நாட்டில் திட்டமிட்ட முறையில் முன்னேற்றம் அடைவதால், மாநிலங்களின் செலவில் முன்னேற்றத்திற்கல்லாத செலவும் உயர்ந்துள்ளது. 1951 முதல் 1967 வரை மாநிலங்களின் வரி வருமானத்தையும், முன்னேற்றத்திற்கு அல்லாத செலவினையும் ஒப்பிட்டுப் பார்த்தால் மாநிலங்களின் நிதி நிலையை நாம் அறிய முடியும்.

| | 1951–52<br>ரூ. கோடியில் | முதல் திட்ட சராசரி. | இரண்டாம் திட்ட சராசரி. | மூன்றும் திட்ட சாரசரி | 1966–67 |
|---|---|---|---|---|---|
| மாநிலவரிகள் வருமானம் | 228 | 253 | 389 | 662 | 933 |
| முன் னேற்றத் திற்கு அல்லாத செலவு | 196 | 229 | 344 | 619 | 889 |
| உபரி | 32 | 24 | 45 | 43 | 44 |

மாநிலங்களின் வரி வருவாய் செலவிற்கேற்ப வளர்ச்சியடையவில்லை. மாநில வரிகள் வருமான வளர்ச்சிக்கேற்ப வளரும் நெகிழ்ச்சி கொண்டவையா என்பதைப் பற்றி அறிதல் அவசியம்.

## வண்டி வரிகள்
## (Tax on Motor Vehicles)

இந்திய மாநிலங்கள் எல்லாவற்றிலும் வண்டிகள் மீது வரி விதிக்கப்படுகிறது. பேருந்து வண்டி, லாரிகள், கார்கள், ஸ்கூட்டர்கள், ஆட்டோரிக்ஷாக்கள் போன்ற பலவித மோட்டார் வண்டிகள்மீது வண்டிவரி விதிக்கப்பட்டு வருகிறது. வண்டி வரிக் கட்டணங்களும், வரி விதிப்பின் அடிப்படை விதியும் பல மாநிலங்களில் பல விதங்களில் காணப்படுகின்றன. தனியார் கார்கள் மீது மோட்டார் வண்டியின் எடைக்கேற்பவும் (தமிழகத்திலும், மஹாராஷ்டிரத்திலும்) சில மாநிலங்களில் பயணிகள் எண்ணிக்கைக்கு ஏற்றவாறும், உள் பரப்பளவுக்கு ஏற்ற மாதிரியும் வரி

விதிக்கப்படுகிறது. சரக்கு வண்டிகள் மீது அதன் சரக்கோடு சேர்த்த அடிப்படையிலும், சரக்கில்லாத வண்டி, அதன் எடைக் கேற்பவும் வரி விதிக்கப்படுகிறது. சில மாநிலங்களில் காற்றடித்த குழாய்ப்பட்டை (Pneumatic Tyres) கொண்ட சக்கரம் உடைய வண்டி மீது ஒரு வித வரியும், மற்ற வித கனமான பட்டை கொண்ட சக்கரம் உடைய வண்டிகள் மீது 50% கூடுதலான வண்டி வரியும் விதிக்கப்படுகிறது. இதைத் தவிரச் சில மாநிலங்களில் வண்டிகள் பதிவு செய்யும்போது மற்றொரு கட்டணம் வசூலிக்கப்படுகிறது. இந்த வரி வருவாய் பெரும்பாலும் சாலை முன்னேற்றத்திற்கும், பழுது பார்க்கவுமே உபயோகப்படுத்தப் படுகிறது. 1950-ல் மோட்டார் வண்டி வரி ஆய்வுக்குழு இந்த வரிவருவாயினைக் கொண்டு மாநிலங்களில் மாநிலச் சாலை நிதி (State road fund) ஒன்றை ஏற்படுத்தும்படி சிபாரிசு செய்தது. இந்த நிதியினைக் கொண்டு மாநிலங்கள் சாலைகளை நல்ல முறையில் பழுது பார்க்கவும், புதிய சாலைகள் அமைக்கவும் உபயோகப் படுத்தலாம் என்று இக்குழு கருதியது. மாநிலங்கள் எல்லாம் ஒரே அடிப்படையில் மோட்டார் வண்டிகள் மீது வரி விதித்தல் அவசியம் என்றும் இக்குழு சிபாரிசு செய்தது. மாநிலங்களிடையே போக்குவரத்து முன்னேற்றம் அடையப் பல்வேறு முறைகளில் வரி விதிப்பினைத் தவிர்க்கவேண்டும். ஒரே முறையில் வண்டி வரிக் கட்டணங்கள் எல்லா மாநிலங்களும் விதித்தால் போக்குவரத்து முன்னேற்றத்திற்கு ஏதுவாக இருக்கும். இந்த வண்டி வரிகள் மூலம் 1966-67ல் எல்லா மாநிலங்களுக்கும் ரூ. 69 கோடி வருமானம் கிடைத்தது.

தமிழகத்தில் 1931ஆம் ஆண்டு முதல் மோட்டார் வண்டிகள் மீது வரி விதிக்கப்பட்டு வருகிறது. 1931-ல் இயற்றப்பட்ட மோட்டார் வண்டிகள் வரி விதிப்புச் சட்டப்படி உள்ளாட்சி நிறுவனங்கள் விதித்த எல்லாச் சுங்கங்களும், மோட்டார் வண்டி மீது விதித்த பல்வேறு வரிகளையும் ஒழித்து, ஒரே வரியாக— அதாவது மாநில மோட்டார் வண்டி வரியினை அமுலுக்குக் கொண்டு வந்தனர். மேலும், இந்த வரி வருவாயினை உள்ளாட்சி நிறுவனங்களுக்குப் பங்கிட இதில் ஏற்பாடு செய்யப்பட்டது. 1938-ல் தமிழ்நாடு போக்குவரத்துக் கட்டுப்பாட்டுச் சட்டம் நிறைவேற்றப்பட்டதால் 1914, 1920-ல் நகராட்சிச் சட்டங்கள் கீழ் பகிரப்பட்டு வந்த கூடுதல் கட்டணம் தள்ளு செய்யப்பட்டது. இதனால் இழந்த வருமானத்தொகையை ஈடு செய்ய மோட்டார் வண்டி வரி விதிப்பு உயர்த்தப்பட்டது. 1939-ல் மோட்டார் வண்டிகள் சட்டப்படியும், 1952-ல் தமிழ்நாடு மோட்டார் வண்டி (பயணிகள், சரக்கு வரி விதிப்புச்) சட்டத்தின் படியும்

விதிக்கப்பட்ட கட்டணங்கள், வண்டிவரி வருவாய் தலைப்பில் இடம் பெறுகின்றன. அவை பின் வருமாறு:

மோட்டார் வண்டிகள் பதிவுக்கும், அவற்றின் உரிமை அல்லது அனுபவ மாற்றத்துக்கும் உரிய கட்டணங்கள்; தயாரிப்பாளர்கள், வியாபாரிகள், செப்பனிடுவோர் இவர்களுக்கு வியாபாரச் சான்றிதழ் கொடுப்பதற்குரிய கட்டணங்கள்; மோட்டார் ஓட்டுவதில் பயிற்சி பெறுவதற்கு வேண்டிய உரிமத்திற்குரிய கட்டணங்கள்; வண்டி ஓட்டுபவர்களுக்கு வேண்டிய உரிமங்களுக்கும், வில்லைகளுக்கும் உரிய கட்டணங்கள்; போக்குவரத்து வண்டிகளுக்கு வேண்டிய அனுமதிச் சீட்டுக்குரிய கட்டணங்கள்; பஸ்களில் கண்டக்டர்களுக்குக் கொடுக்கப்படுகிற உரிமங்கள், வில்லைகள் இவற்றிற்குரிய கட்டணங்கள்; போக்குவரத்து வண்டிகள் நல்ல நிலையில் இருப்பதாக உறுதி கூறுவதற்குரிய கட்டணங்கள்; மோட்டார் வண்டி ஆய்வாளர்கள் பதவிக்கு விண்ணப்பித்துக் கொள்பவர்களிடமிருந்து வாங்கப்படும் கட்டணங்கள்; மோட்டார் வண்டி பதிவேடுகளிலிருந்து வர்த்தக நிறுவனங்களுக்குப் பகுதிகள் எடுததெழுதிக் கொடுப்பதற்குரிய கட்டணங்கள்.

சில முக்கிய தமிழக மாநில வரிகள்

| ஆண்டு | நிலவரி | விற்பனைவரி ரூ. கோடியில் | வேளாண்மை வருமானவரி | வண்டி வரி |
|---|---|---|---|---|
| 1,961-62 | 6·83 | 21·25 | 1·41 | 7·02 |
| 1,962-63 | 7·13 | 24·80 | 1·14 | 10·19 |
| 1,963-64 | 8·93 | 27·01 | 1·35 | 12·33 |
| 1,964-65 | 8.45 | 35·30 | 1·42 | 12·99 |
| 1,965-66 | 9·12 | 40·95 | 1·22 | 13·31 |
| 1,966-67 | 6·65 | 48·76 | 1·45 | 14·96 |
| 1,967-68 | 8·16 | 56·47 | 1·61 | 16·83 |

1952ஆம் ஆண்டு இயற்றப்பட்ட தமிழ்நாடு மோட்டார் வண்டிகள் (பயணிகள், சரக்குகள் வரி விதிப்புச்) சட்டத்தின்படி தமிழ்நாட்டில் பஸ்களிலும், லாரிகளிலும் ஏற்றிச் செல்லப் படுகிற பயணிகள் மீதும் மற்றப் பொருள்கள் மீதும் வரி விதிக்கப் படுகிறது. இதன் படி, பஸ்களை நடத்துகிறவர்களுக்குச் செலுத்தப்படத்தக்க கட்டணங்களின் மேல் ரூபாய்க்குப் பத்து

பைசா வீதப்படியும், வாரியுடையோர் செலுத்தும் கட்டணங்களின் மேல் ரூபாய்க்கு ஐந்து காசு வீதப்படியும் வரி வதிக்கப்படுகிறது.

வண்டிவரி வருவாய்

| ஆண்டு | வருமானம் ரூ. இலட்சத்தில் |
|---|---|
| 1938–39 | 81·22 |
| 1962–63 | 1,019·06 |
| 1963–64 | 1,233·59 |
| 1964–65 | 1,299·99 |
| 1965–66 | 1,331·11 |
| 1966–67 | 1,496·08 |
| 1967–68 | 1,683·26 |
| 1968–69 | 1,865.17 |
| 1969–70 | 1,946·98 |
| 1970–71 | 2,195·02 |

மாநில ஆயத்தீர்வைகள் :

வெறிநீர், அபினி, சணல், மற்றும் மரமரப்பூட்டும் மருந்துகள் மேல் ஆயத்தீர்வை விதிக்க மாநில அரசாங்கங்களுக்கு உரிமை உண்டு. மாநிலங்கள் மேற்கூறிய பொருள்கள் உற்பத்தி செய்தாலோ, அல்லது வேறொரு மாநிலத்திலிருந்து விற்பனைக்கு வந்தாலோ, அவற்றின் மேல் வரி விதிக்க மாநிலங்கள் உரிமை பெற்றுள்ளன. பல்வேறு மாநிலங்கள் பல்வேறு வகையான கட்டணங்களை இப் பொருள்களின் உற்பத்திமீது விதிக்கின்றன. அபினி உற்பத்தி மத்திய அரசாங்கத்தின் முழூவுரிமையாக அதன் விற்பனை, மருத்துவ, விஞ்ஞான காரணங்களுக்காகக் கட்டுப்படுத்தப்படுவதால், அதன் வருவாய் குறைவே. மதுவிலக்கு இல்லாத மாநிலங்கள் பெரும்பாலும் வெறிநீர்மீது அதிகமான வரி விதிக்கின்றன. தமிழகத்தில் மதுவிலக்கு இருப்பதால் வெறிநீர் ஆயத்தீர்வையால் கிடைக்கும் வருவாய் மிகக் குறைவே. மதுவிலக்கினால் சமூக நலன்கள் பல காணப்படலாம்; ஆனால், வெறிநீர் அருந்த விரும்புவோர் சிலர், மாநிலத்தில் மதுவிலக்கு இருப்பதால் உடலுக்கு ஊறு விளைவிக்கின்ற வார்னிஷ் போன்ற மதுவகைகளை அருந்துகின்றனர். மேலும் வளர்ச்சியுறாத நாடுகளில் முன்னேற்றத்திற்கான செலவினை வரி வருமானம் கொண்டே

மேற்கொள்ள வேண்டும். சில மாநிலங்களில் மதுவிலக்கினால் இழக்கப்படும் வருமானம் ரூ. 50 கோடிக்கு மேலாகும்.

சாராய மது வகைகள், சணப்பு மருந்து சரக்குகள் தயாரிப்பு, உபயோகிப்பது, கையாள்வது ஆகியவற்றையும், பச்சை அபினில் தயாரிக்கப்பட்ட மருந்து சரக்குகள் இவற்றை விற்பனை செய்வது, பயன்படுத்துவது ஆகியவற்றையும் அரசாங்கம் கட்டுப்படுத்துவது மூலம் தமிழ்நாடு அரசாங்கத்திற்கு வருவாய் கிடைக்கிறது. 1948 அக்டோபர் மாதம் 2ஆம் தேதி முதல் தமிழ்நாடு முழுவதும் மதுவிலக்கு நடைமுறைக்குக் கொண்டுவரப்பட்டதால், பல புதிய வருவாய்கள் அரசாங்கத்திற்குக் கிடைக்கின்றன. அபின் பயன்படுத்துவோர் என்று பதிவு செய்யப்பட்டவர்கள் மீது வசூலிக்கப்படும் கட்டணமும், மற்ற மாநில அரசாங்கங்களுக்கு அபின் விற்பனை செய்வது மூலம் கிடைக்கும் வருமானம் இந்த தலைப்பில் இடம் பெறுகிறது. இதைத் தவிர அரசாங்கம் மது, அபின் முதலியவை அடங்கிய மருத்துவ ஒப்பனைப் பொருள்கள் மீது தீர்வைகள்; ஒப்புதல் சீட்டு பெற்றவர்களுக்கு வெளிநாட்டு மது வகைகள் விற்றதன் பேரில் கிடைத்த விற்பனைவரி; மது விலக்குக் குற்றங்களுக்காக வசூலித்த தண்டத் தீர்வைகள் முதலியவற்றின் வாயிலாக அரசாங்கத்திற்கு வருமானம் கிடைக்கிறது. ஆயத்தீர்வை மூலம் நமது அரசாங்கத்திற்குக் கிடைத்த வருமானம் 1962–ல் ரூ. 38·30 இலட்சம். 1969–70-ல் இத்தொகை ரூ. 116·72 இலட்சமாகும்.

நிலவரி ;

இன்று நடைமுறையில் இருக்கும் வரிகளில் தொன்மையானது நிலவரி. 1967 முதல் பல மாநிலங்கள் நிலவரியை ஒழிக்கத் திட்டமிட்டன. திட்டக்குழுவும், மாநில அரசாங்கங்களும் புதிய வரி வருவாய்களை எதிர் நோக்கும் போது, இத்தகைய நிலவரி ஒழிப்பு வியக்கத்தக்கதாகவே காணப்பட்டது. சில மாநிலங்கள் நிலவரிக்குப் பதில் வேளாண்மை வருமானவரி விதிக்க முன் வந்தன. வேளாண்மைத் துறையில் அதிக வரி வருமானம் பெருக்க முடியுமா என்பதே மாநிலங்களின் இன்றைய முக்கிய பிரச்னையாகத் திகழ்கிறது.

இந்தியா போன்ற வளர்ச்சியுறாத பின்தங்கிய நாடுகள் பெரும்பாலானவற்றில் பொருளாதார வளர்ச்சி வேளாண்மை வளர்ச்சியினைப் பொறுத்துள்ளது. ரஷ்யா, ஜப்பான் போன்ற நாடுகள் வேளாண்மை வரி வருமானத்தைக் கொண்டு தம்மைத் தொழில்மயமாக்கிக் கொண்டன. இந்த நாடுகளில் தொழில் வளர்ச்சிக்கான செலவையும், சுமையையும் வேளாண்மைத்

துறையே மேற்கொண்டது. பொருளாதார முன்னேற்றம் ஏற்படும் போது, தொழில்துறைக்கு உணவுப் பொருள்களும் கச்சாப் பொருள்களும் வேளாண்மைத் துறையே வழங்கவேண்டும். வேளாண்மை வரி மூலம்தான் இத்தகைய அங்காடி உபரி பெருக்க முடியும். 'பொருளாதார முன்னேற்றத்தில் வேளாண்மை வரி ஒரு முக்கிய பங்கினைப் பெற்றுள்ளது. கட்டாய வேளாண்மை வரி வழியாகத்தான் பொருளாதார முன்னேற்றத்திற்கான சேமிப்பு நிதியைப் பெருக்க முடியும்.'[1]

இந்தியாவில் வேளாண்மை வரி மற்ற நாடுகளை விடக் குறைந்தே காணப்படுவதாகச் சில அயல்நாட்டுப் பொருளியல் வல்லுநர்கள் கூறுகின்றனர். நிகோலஸ் கால்டர் தனது 'இந்திய வரித் திருத்த அறிக்கை'யில் தற்போதுள்ள வேளாண்மை வரியை இருமடங்காக்கினாலும் அது அதிகச் சுமையாக இருக்காது என்று கூறுகிறார்.[2] மைக்கேல் கேலகி என்பவர் மூன்றாவது திட்ட நிதிப்பிரச்சினைகளை ஆராயும்போது வளர்வீத 'நிலவரி' இந்திய வரிமுறையில் இடம் பெறவேண்டும் என்று கூறுகிறார். திருமதி, உர்சுலா ஹிக்ஸ் இந்தியாவில் வேளாண்மைவரி விதிக்கத் தயக்கப்படுவதாகக் கூறியுள்ளார்.

வேளாண்மைத் துறையில் மந்திய-மாநில அரசுச் செலவு

| ஆண்டு. | நடப்புச் செலவு ரூ. 10 இலட்சம். | மூலதனச்செலவு ரூ. 10 இலட்சம். |
|---|---|---|
| 1960–61 | 1,496·2 | 515·6 |
| 1961–62 | 1,688·8 | 631·4 |
| 1962–63 | 1,875·1 | 610·4 |
| 1963–64 | 2,090·5 | 745·3 |
| 1964–65 | 2,458·7 | 868·5 |
| 1965–66 | 3,076·3 | 1.016·4 |
| 1966–67 | 31,99·2 | 1,123·0 |

(Report of Currency & Finance) 1967–68.

[1] Kaldor N. — 'The Role of Taxation in Economic Development.'
[2] Kaldor N. — 'Indian tax Reform, Report of Survey-new Delhi, 1965,' p. 4.

மத்திய-மாநில அரசின் மூலதனச் செலவிற்கேற்ப வேளாண்மைத் துறை அரசாங்கத்திற்கு வரி வருவாய் பெருக்க வில்லை. வேளாண்மை வருமான வரியும், மற்ற நிலவரிகளின் வருவாயும் வளரும் தன்மையின்றிக் குறைந்து கொண்டே வருகின்றது.

கடந்த சில ஆண்டுகளாகப் பல இந்திய, அயல்நாட்டுப் பொருளியல் வல்லுநர்கள் இந்திய வேளாண்மைத் துறை வரி மட்டும் குறைந்து இருப்பதாகவும், கூடுதலான வரி தாங்கக் கூடிய தகுதி உடையதாகவும் கருதுகின்றனர். கடந்த இருபது ஆண்டுகளில் வேளாண்மைத் துறை தவிர மற்றத் துறைகளின் மீது பலவித புதிய வரிகள் விதிக்கப்பட்டன. பொருளாதார முன்னேற்றம் தடையின்றி ஏற்பட வளர்ச்சியடையாத நாடுகளில், வளர்ச்சியடைந்த நாடுகளைவிட, வேளாண்மைத் துறை மீது போதிய அளவு வரி விதிப்பது அவசியம். தொழில் துறையைவிட வேளாண்மைத் துறை மீது வரி விழுக்காடு 50% குறைச்சலாக இருப்பதாக டாக்டர் எம். எச். கோபால் கருது கிறார். டாக்டர் கே. என். ராஜ் எழுதிய 'மூன்றாவது திட்டத்திற்கான நிதி'யில் இதே கருத்தைத் தெரிவித்துள்ளார்.

திட்டக்காலத்தில் வேளாண்மைத் துறை மூன்று காரணங் களால் பலன் அடைந்தது.

(1) தொடர்ந்து உயரும் உற்பத்தி.

(2) தொடர்ந்து வேளாண்மைப் பொருள் விலை உயர்வு.

(3) தொடர்ந்து உயரும் வருமானம்.

மேலும், இரண்டாவது திட்டத்திற்குப் பிறகு வேளாண்மைத் துறை-தொழில் துறை வாணிபமாற்று வீதம் வேளாண்மைத் துறைக்கே சாதகமாக மாறியது. ஆனால், வேளாண்மைத் துறை யினால் கிடைக்கும் வரி வருமானம் உயரவில்லை.

வேளாண்மைத் துறையின் வரிச்சுமை குறைவு என்ற கருத்துக்கு எதிராகச் சில பொருளியல் வல்லுநர்கள் மறுப்புத்

தெரிவித்துள்ளனர். பசுமைப் புரட்சிக்குப்பின் ஏற்பட்ட இலாபத்தினால் வேளாண்மைத்துறை வருமானம் பெருகியது என்றும், ஆகையால், மேலும் புதிய வரிகளை விதிக்க வாய்ப்பு உண்டு என்பது தவறான கருத்து என்றும் ஏ. எஸ். கஹ்லானும், எஸ். எஸ். கஹ்லானும் கருதுகின்றனர்.[1] இந்தியாவில் உற்பத்தி பெருக்கக்கூடிய விதைகளை உபயோகிப்பதால், உற்பத்திப் பெருக்கத்திற்கேற்ப உள்ளீட்டுச் செலவும் உயர்கிறது. வேளாண்மை வரியை கூடுதலாக்கினால் விவசாயிகளுடைய ஊக்கம் குறையும்; உற்பத்தியும் குறையக்கூடும். இதனால், பசுமைப் புரட்சியும் பாதிக்கப்படலாம். கடந்த சில ஆண்டுகளாக அதிக விளைச்சல் தரக்கூடிய விதைகளை உபயோகப்படுத்துவதால் நிலைத்த ஆக்கச் செலவும், (Fixed cost) மாற்றக்கூடிய ஆக்கச் செலவும் (Variable cost) உயர்ந்துள்ளன. இயந்திரக் கலப்பை ஒன்றின் விலை 1950–ல் ரூ. 7,000; ஆனால், அதே சக்தியுள்ள இயந்திரக் கலப்பையின் விலை 1968–ல் ரூ. 18,000 ஆக உயர்ந்துள்ளது. மொத்த உற்பத்திச் செலவுக்குறி எண் 1952–53-ல் 100 ஆகக் கொண்டால் 1967–68–ல் 214.8 ஆக உயர்ந்துள்ளது. வேளாண்மைப் பொருள்களின் விலை குறிஎண் 1952–53-ல் 100 ஆகக் கொண்டால், 1967–68-ல் 178 ஆக உயர்ந்துள்ளது. ஏற்கெனவே வேளாண்மை உற்பத்தி பலவிதமாக வரிகளினால் பாதிக்கப்பட்டுள்ளது; வேளாண்மைப் பொருள்வரி (Agricultural commodities act), சிறப்புத் தீர்வைகள் (Special assessment) நிலவரி (Land tax), வேளாண்மை வருமானவரி (Agricultural income tax) போன்ற பல வரிகளின் சுமையினை வேளாண்மைத் துறை ஏற்கவேண்டியிருக்கிறது. கடந்த சில ஆண்டுகளாக நமது நாட்டில் இரசாயன உரம் உபயோகப்படுத்துவதன் அவசியத்தை உணர்ந்து பல விவசாயிகள் அதிக விளைச்சல் பெருக்க இரசாயன உரங்களுக்காக அதிகச் செலவினை மேற்கொள்ளுகின்றனர். A. S. கஹ்லான், S. S. கஹ்லான் ஆய்வுப்படி இந்தியாவில் வேளாண்மைத் துறை ஆக்கச் செலவு மற்றச் சில நாடுகளோடு ஒப்பிட்டுப் பார்க்கும்போது அதிகமாகக் காணப்படுகிறது. இந்திய விவசாயி ஒரு கிலோகிராம் இரசாயன உரம் வாங்க 5·2 கிலோ அரிசியாவது 3·7 கிலோ கோதுமையாவது விற்க வேண்டும். ஜப்பானில் 1 கிலோ உரம் வாங்க 1·2 கிலோ கிராம் அரிசி அல்லது 1·7 கிலோ கோதுமை விற்பனை செய்தால் போதும். கோதுமை, அரிசி விலையும், ஒரு கிலோ இரசாயன உரம் வாங்கத் தேவைப்படும் அளவும்,

[1] A. S. Kahlan & S. S. Kahlan — A case Against Agricultura Taxation Artha vikas-June 1969.

அரிசி :

| நாடு | 1 கிலோ விலை (அமெரிக்க சென்டில்) | 1 கிலோ இரசாயன உரம் வாங்கத் தேவையான தானிய அளவு |
|---|---|---|
| ஜப்பான் | 15·6 | 1·2 |
| அமெரிக்கா | 13·5 | 1·5 |
| பிலிப்பைன்ஸ் | 7·8 | 3·4 |
| சைனு | 9·0 | 3·5 |
| தாய்லாந்து | 5·6 | 4·1 |
| இந்தியா | 6·6 | 5·2 |
| ஐக்கிய அரபுக் குடியரசு | 4·9 | 7·1 |
| | கோதுமை : | |
| ஜப்பான் | 11·6 | 1·7 |
| ஸ்பெயின் | 9·3 | 2·3 |
| நெதர்லாந்து | 8·6 | 2·4 |
| அமெரிக்கா | 7·3 | 2·7 |
| இந்தியா | 9·4 | 3·7 |
| ஐக்கிய அரபுக் குடியரசு | 5·8 | |

மூலம்: State of food and Agriculture. 1967. Fao. p. III.

வேளாண்மைத் துறையில் முன்னேற்றம் அடையவும், முதலாக்கம் பெருக்கவும் வேளாண்மைத் துறைமீது சில ஆண்டு

களுக்குக் கூடுதலான வேளாண்மை வரி விதிக்காமல் இருப்பது நலம்.[1]

வேளாண்மைத் துறைமீது கூடுதலான வரி விதிக்க ஒரு சாரார் கூறுகின்றனர். அதற்கு நேர்மாறாகச் சிலர் இத் துறையில் தொடர்ந்து பசுமைப் புரட்சி ஓங்க வேண்டுமானால் வரி விதிப்பது தவிர்க்கப்படவேண்டும் என்று கருதுகின்றனர். தமிழக அரசு வேளாண்மைத் துறைமீது அதிக வரிச்சுமை ஏற்படுத்தாமல், பல விதங்களில் ஊக்கம் அளித்து வருகிறது. தமிழகத்தில் உள்ள வேளாண்மை வரிகள் பின்வருமாறு:

நில வரி:

மாநில வரிகளிலே தொன்மையான வரி நில வரியாகும். மாநிலங்கள் பலவற்றில் பலவித அடிப்படையில் நில வரி விதிக்கப்பட்டு வசூலிக்கப்படுகிறது. ஆங்கிலேயர் முறைப்படி நிலங்களைக் கண்டு ஆய்வு செய்து வகைப்படுத்தி வரி விதிக்கப் பட்டது. நிரந்தரமாக நிலத்தில் குடியிருப்போருக்கு வரி அளவு பல ஆண்டுகளுக்கு நிர்ணயிக்கப்பட்டது தாற்காலிகமாக நிலத்தில் குடியிருப்போருக்கு வரையறுக்கப்பட்டுச் சில ஆண்டுகளுக்கு மட்டுமே நில வரி விதிக்கப்பட்டது. இத்தகைய நில வரிப் பாகு பாடே ஜமீந்தாரி முறை என்றும், மஹல்வாரி முறை என்றும் அழைக்கப்படுகிறது. இரயத்துவாரி என்பது ஒரு தனி விவசாயி தனது நிலத்திற்கேற்பக் கட்டும் நில வரி முறையினைப் பற்றிக் குறிக்கிறது.

நிலவரி நிர்வாகத்தில் பலவிதமான முறைகளில் நிலவரி அளவு நிர்ணயிக்கப்படுகிறது. 1953-ல் வரி விசாரணைக் குழு தமது அறிக்கையில் இந்திய மாநிலங்கள் நிலவரி வசூலிக்கும் முறைகளைப் பின்வருமாறு வகைப்படுத்தியுள்ளது.

(1) நிகரச் சொத்து அல்லது நில வாரத்தொகை.
(2) நிகர உற்பத்தி அல்லது விலை மதிப்பீடு.
(3) உண்மைப் பயன்.
(4) வாரத்திற்கேற்ப மதிப்பு.
(5) மூலதன மதிப்பு.
(6) மொத்த உற்பத்தி.

1951 ஆம் ஆண்டிற்குப் பிறகு ஏற்பட்ட நிலச் சீர்திருத்தங்களினால் நிலவரி வருமானம் சில மாநிலங்களில் உயர்ந்தது. ஆனால்,

[1] S. Chidambaram — A case Against Agricultural Taxation. 'The presidencian' 1970, p. 2.

மொத்த வரி வருமானத்தில் நில வரியின் பங்கு குறைந்து கொண்டே வந்தது.

மாநில வருமானத்தில் நிலவரியின் பங்கு

| மாநிலம் | 1951–52 ரூ. கோடி. | 1966–67 ரூ. கோடி |
|---|---|---|
| ஆந்திரப்பிரதேசம் | — | 15·01 |
| அஸ்ஸாம் | 1·81 | 5·15 |
| பீஹார் | 1·45 | 12·67 |
| குஜராத் | 6·14 | 6·06 |
| ஜம்மு, காஷ்மீர் | 0·62 | 0·62 |
| கேரளா | — | 1·63 |
| மத்தியப் பிரதேஷ் | 4·39 | 9·67 |
| சென்னை | 6·57 | 6·33 |
| மஹாராஷ்டிரா | — | 6·01 |
| பஞ்சாப் | 1·98 | 3·68 |
| ஒரிஸ்ஸா | 1·03 | 3·20 |
| இராஜஸ்தான் | 3·15 | 8·73 |
| உத்தரப்பிரதேசம் | 7·58 | 27·07 |
| மேற்கு வங்காளம் | 2·10 | 7·57 |
| மைசூர் | — | 5·79 |

உத்தரப் பிரதேசம் தவிரப் பல மாநிலங்களின் மொத்த வருமானத்தில் நிலவரி வருமானம் குறைந்து கொண்டே வருகிறது. நிலவரியினால் மாநில அரசாங்கங்களுக்குக் கிடைத்த மொத்தத் தொகை 1921–22-ல் ரூ. 29·08 கோடி; 1944–45-ல் ரூ. 30·21 கோடியாகவும், 1951–52-ல் ரூ. 48·00 கோடியாகவும், 1966–67-ல் ரூ. 120·48 கோடியாகவும் உயர்ந்துள்ளது.

தமிழக மாநிலத்தில் நிலவரி வளர்ச்சியினைப் பின்வரும் அட்டவணை விவரிக்கிறது.

| ஆண்டு | நிலவரி வருமானத் தொகை (ரூ. இலட்சம்) | மொத்த வருமானத்தில் நிலவரியின் சதவீதம் |
|---|---|---|
| 1950–51 | 694 | 11·93 |
| 1951–52 | 657 | 11·92 |
| 1952–53 | 756 | 12·93 |
| 1954–55 | 425 | 9·82 |
| 1955–56 | 434 | 8·34 |
| 1956–57 | 453 | 8·11 |
| 1957–58 | 495 | 7·93 |
| 1958–59 | 458 | 6·55 |
| 1959–60 | 490 | 6·04 |
| 1960–61 | 498 | 5·41 |
| 1961–62 | 442 | 4·80 |
| 1962–63 | 441 | 3·73 |
| 1963–64 | 649 | 0·48 |
| 1964–65 | 551 | 3·58 |

இந்தியாவில் நிலவரி வருமானம் தேக்கம் அடையவில்லை. ஆனல், மற்றைய வரி வருவாயோடு ஒப்பிட்டுப் பார்த்தால் நிலவரி வருமானம் குறைந்தே காணப்படுகிறது. இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்திற்குப் பின் பல மாநிலங்கள் நிலவரி வருமானத்தைப் பெருக்கப் பின்வரும் புதிய வரிகள் விதிக்கப் பட்டன. (1) நிலவரி உயர்வு (2) கூடுதல் மேல்வரி, (3) உள்ளாட்சி நிறுவனங்கள் விதிக்கும் வரி, (4) நீர்ப்பாசனக் கட்டணத் தண்ணீர்த் தீர்வை, (5) வியாபாரப் பயிர்களை விவசாயம் செய்வோர் கட்டும் வரி, (6) இனம் நில வருமானம்.

இதைப்போல் பல புதிய வரிகளால் நிலவரி வருமானத்தைப் பல மாநிலங்கள் உயர்த்தின. ஆனால், தமிழகமும் மற்றச் சில மாநிலங்களும் நிலவரியை ஒழிக்கத் திட்டமிட்டு வருகின்றன. நில வசூலிக்கச் சில மாநிலங்கள் மேற்கொள்ளும் செலவு, நிலவரி வரி வருவாயினைவிடக் கூடுதலாகக் காணப்படுகிறது. நிலவரி ஒழிப்பு வேளாண்மை உற்பத்தியைப் பெருக்க ஓர் ஊக்கியாக அமையலாம். மேலும், பசுமைப் புரட்சியினால் பயனடைந்துள்ள தமிழக மாநிலத்தில், நிலவரி ஒழிப்புத் திட்டத்தினால் பல நன்மைகள் ஏற்படக்கூடும். ஆனால், மாநில அரசின் நிதிநிலையை நோக்கும்போது மாநிலத் திட்டத்திற்கான செலவை மேற்கொள்ள எந்தெந்த முறையிலே வருமானத்தைப் பெருக்க முடியுமோ, அவற்றை எல்லாம் செயலாக்குவது நலம்.

நிலவரி வருமானம் 1955-67




பொதுவாக நிலவரி என்பது மாநில அரசாங்கத்திற்குக் கிடைக்கும் சாதாரண வருவாய் ஆகும். தற்போது நிலவரி வருவாய் பின்வரும் வரிகளைக் குறிக்கிறது.

1. இரயத்துவாரி முறையில் உள்ள நிலத்தின்மீது விதிக்கும் வரி, பாசனநீர் வழங்குவதற்கான தீர்வை, ஒரு போக நன்செய் நிலத்தில், இரண்டாம் போக வரி விதிப்பு, புன்செய் நிலத்தில் விதிக்கப்படும் தண்ணீர்த் தீர்வை, 1963ஆம் ஆண்டு முதல் தமிழ்நாடு விதிக்கும் கூடுதல் தண்ணீர்த்தீர்வை முதலியன இந்தத் தலைப்பில் அடங்கும்.

2. அரசு மேற்கொள்ளாத நில உடைமைகளில் இருந்து அரசாங்கம் வசூலிக்கும் ஜமீன் உரிமை வரி (பேஷ்கஷ்), அரசு மேற்கொண்ட நில உடைமைகளிலிருந்து கிடைக்கும் பேஷ்கஷ், சில அனுகூல உரிமை முறைப்படி உள்ள இனாம் கிராமங்கள் மீது விதிக்கப்படும் விடுவரி (Quit Rent).

3. பட்டாவில் இல்லாத சாகுபடி செய்யப்படுகிற புறம்போக்கு நிலங்களிலிருந்து கிடைக்கும் வருவாய், தரை வரி.

4. மாவட்டக் கழகநிதி வசூலிக்கப்படும் நிலத்தீர்வை, நிலத்தீர்வையின் மேல் வரியாக விதிக்கப்படுகிற தொடக்கக் கல்வி வரியும் இதில் சாரும்.

தமிழகத்தில் 1955 ஆம் ஆண்டில் இயற்றப்பட்ட தமிழ்நாடு நிலவரி (கூடுதல் வரி) சட்டத்தின் படி மேல் வரி (Surcharge) விதிக்கப்படுகிறது. நன்செய், புன்செய், தோட்ட நிலம் என்று பிரிக்கப்பட்டுள்ள எல்லா நிலங்கள் மீதும், எல்லா வித தண்ணீர்த் தீர்வை மீதும் நிலவரியில் ரூபாயில் 13 காசு என்ற விகிதப்படி விதிக்கப்படுகிறது. ஓர் ஏக்கர் நிலத்தில் இவ்வகைக் கூடுதல் வரியினால் கிடைக்கும் வருவாய் உயர்ந்த அளவு ரூ. 10 ஆகும். இந்தக் கூடுதல் மேல்வரியினால் கிடைக்கும் வருமானம் முழுவதும் மாவட்டக் கழகங்களுக்கும், பஞ்சாயத்துகளுக்கும் இடையே பகிர்ந்து கொடுக்கப்படுகிறது. தமிழக அரசுக்கு வேளாண்மைத் துறையிடமிருந்து கிடைக்கும் வரி வருவாயில் முன்னாள் ஜமீன் சொத்துக்களை நிர்வகிப்பது மூலம் கிடைக்கும் வருவாயும் சேர்ந்துள்ளது.

மாநில நீர்ப்பாசனத் திட்டங்களினால் பல மாவட்டங்களில் வேளாண்மை உற்பத்தி பெருகியுள்ளது. அதனால் நடைமுறையில் இருந்து வரும் தண்ணீர்த் தீர்வையினையும், மேம்பாட்டு வரி Betterment Tax) முதலியவற்றையும் ஒழிக்காமல் இருத்தல் நலம். இதனால் கிடைக்கும் வருவாயினை நீர்ப்பாசனப் திட்டப் பேணுகைச் செலவிற்குப் பயன்படுத்தலாம். மேலும், தற்போது உள்ளாட்சி நிறுவனங்களின் நிதிநிலையினைப் பலப்படுத்த நிலவரியினை அறவே

ஒழிக்காமல் தண்ணீர்த் தீர்வை மேம்பாட்டு வரி முதலிய வரிகளை விதித்தல் அவசியம்.

**விற்பனை வரிகள் :**

1935 இந்திய அரசாங்கச் சட்டப்படி மாநிலங்களுக்குப் பொருள்கள் மீது விற்பனைவரி விதிக்கும் அதிகாரம் வழங்கப் பட்டது. இந்தியா சுதந்திரம் அடைந்த பின் அரசியல் சட்டப்படி இந்த விற்பனை வரி (செய்தித்தாள்வரி தவிர) மாநிலங்களின் தனி உரிமையாகக் காணப்படுகிறது. மத்திய, அரசு, மாநிலங் களிடையே பொருள்கள் விற்பனை செய்யப்பட்டால், விற்பனைவரி விதிக்க அதிகாரம் பெற்றுள்ளது. ஆனாலும், இத்தகைய வரி வருவாய் மாநிலங்களையே சாரும். இந்தியாவில் ஜம்மு, காஷ் மீரைத் தவிர எல்லா மாநிலங்களும் பொருள்களின் விற்பனை மீது விற்பனை வரி விதிக்கின்றன. சில மாநிலங்களில் மோட்டார் எரிபொருள், கரும்பு, புகையிலை, சணல் முதலிய பொருள்கள் மீது சிறப்பு விற்பனை வரிகளும் விதிக்கப்படுகின்றன.

இந்தியாவில் முதன் முதலாக 1938-ல் மத்தியப் பிரதேசத்தில் மோட்டார் எரிபொருள் மீதும் (Motor Fuel), மசகுப் பொருள் மீதும் (Lubricant) விற்பனைவரி விதிக்கப்பட்டது. பொதுவிற்பனை வரி 1939-ல் சென்னை மாநிலத்திலும், அதைத்தொடர்ந்து மற்ற மாநிலங்களிலும் விதிக்கப்பட்டது. 1956-க்கு முன்னர் (அ) பிரிவு மாநிலங்களிலும், (ஆ) பிரிவு மாநிலங்களிலும் காஷ்மீரைத் தவிர பொது விற்பனைவரி வழக்கில் இருந்தது. 1956-ல் மாநிலச் சீரமைப்புக்குப் பிறகு எல்லா மாநிலங்களும் விற்பனை வரிச் சட்டங்களை இயற்றி இவ்வரி மூலம் அதிக வருவாய் பெற முற்பட்டது.

இன்று எல்லா மாநிலங்களிலும் பொது விற்பனை வரி விதிக்க இரண்டு முக்கிய காரணங்கள் உண்டு.

(1) மதுவிலக்கினால் பெரும்பாலான மாநிலங்கள் அதிக வருவாயினை இழந்தன.

(2) ஜமீந்தாரி ஒழிப்புச் சட்டத்தினால் நிலவரி வருமானம் அதிக அளவு குறைந்துவிட்டது. மதுவிலக்கினாலும், ஜமீந்தாரி ஒழிப்பினாலும் இழந்த வருமானத்தை மீட்க வேண்டியே விற்பனை வரி விதிக்கப்பட்டது. 1948 – 49-ல் மதுவிலக்கினால் ரூ. 16. கோடி வருமானம் தமிழக அரசு இழந்தது. ஜமீந்தாரி ஒழிப்பினால் கணிசமான வருமானத்தை இந்த அரசு இழக்க நேர்ந்ததால் பொது விற்பனை வரிக்கு முக்கியத்துவம் கொடுத்தது.

இன்று தமிழக அரசின் பலவித வரிகளில் அதிக வருவாயினை ஈட்டித்தருவது விற்பனை வரியே. மேலும், இந்த வரி வருமான வளர்ச்சிக்கேற்ப வளரும் நெகிழ்ச்சி கொண்டது. 1966–67-ல் எல்லா மாநிலங்களிலும் விற்பனை வரியால் கிடைத்த வருமானம் ரூ. 407 கோடி. பண்ட வரிகளிலே சிறந்த வரி விற்பனை வரியாகும்.

**விற்பனை வரி வகைகள் :**

இந்திய மாநிலங்களில் பலவிதமான விற்பனை வரிகள் விதிக்கப்பட்டுள்ளன. அவற்றைப்பற்றி அறிவது நலம். விற்பனை வரி (Sales tax), வாங்கு வரி (Purchase tax) என்று இருவகையான வரிகள் உண்டு. பதிவாக்கப்பட்ட தனி வியாபாரியின் மொத்த விற்பனை மீது விதிக்கப்பட்டு, திரட்டப்படும் வரியே விற்பனை வரி; அந்த வியாபாரி விற்பனை செய்வதற்காக வாங்கப்பட்ட பொருள் மீது விதிக்கும் வரியே வாங்கு வரி என்று அழைக்கப்படுகிறது. விற்பனை வரி வியாபாரிகள் மீதும், சில்லறை வியாபாரிகள் மீதும் விதிக்கப்படுகிறது. வாங்கு வரியினை நுகர்வோர் மீது கூட விதிக்கலாம். ஆனால், வழக்கத்தில் விற்பனை வரியே பல மாநிலங்களில் அமுலில் இருந்து வருகிறது. விற்பனை வரிகளையே பொது விற்பனை வரி (General sales tax) என்றும் தேர்ந்தெடுக்கப்பட்ட விற்பனைவரிகள் (Selective sales tax) என்றும் குறிப்பிடுகின்றனர். பொது விற்பனை வரி ஒரு தனி வியாபாரியின் மொத்த விற்பனை மீது விதிக்கப்படும் வரி. ஆனால், சில தெரிந்தெடுக்கப்பட்ட பொருள்கள் மீது மட்டும் வரி விதிக்கப்பட்டால் அதுவே தெரிந்தெடுக்கப்பட்ட விற்பனை வரியாகும். இந்தியாவில் பல மாநிலங்களில் பொது விற்பனை வரியும், தெரிந்தெடுக்கப்பட்ட விற்பனை வரியும் விதிக்கப்படுகின்றன. மேலும், பல பொருள்களின் விற்பனை, விற்பனை வரியிலிருந்து விலக்கப்பட்டுள்ளது. பல மாநிலங்களில் மோட்டார் எரிபொருள், கரும்பு, சணல்மீது தெரிந்தெடுக்கப்பட்ட விற்பனைவரிகள் விதிக்கப்பட்டு வருகின்றன.

பொது விற்பனை வரியை ஒரு முனை வரி (Single point tax), பல முனை வரி (Multi point tax) என்று இருவகையாகப் பிரிக்கலாம். ஒரு முனை வரியில் உற்பத்திக்கும் நுகர்வுக்கும் இடையே ஒரு முறையே விற்பனைவரி விதிக்கப்படுகிறது. பல முனை வரியில் உற்பத்திக்கும் நுகர்வுக்குமிடையே ஒவ்வொரு பேரம் நிகழும்போதும் வரி விதிக்கப்படும். நடைமுறையில் உற்பத்தியாளர் விற்பனை செய்யும்போதோ அல்லது சில்லறை வியாபாரி விற்கும்போதோ, வரி விதிக்கப்படும். பல பேர வரியில் உற்பத்திக்கும் நுகர்வுக்குமிடையே பல்வேறு நிலை வியாபாரங்

களில் தனித்தனியே விற்பனைவரி விதிக்கப் படும். இவ்வகையான விற்பனைவரி வருவாய் குறைந்தே இருக்கும். இந்த வரிகளைத் தவிர்க்கவும் முடியாது. மேலும், தரகர்களை இவ்வரி மூலம் ஒழிக்க முடியும். விற்பனை வரிகள் ஒவ்வொருவரின் மதிப்புக்கேற்ப விதிக்கப்பட்டால் அது பெறுமான விகித வரி (Advalorem tax) ஆகும். விற்பனை செய்யப்பட்ட பொருள்கள் எண்ணிக்கைக்கேற்ப வரி விதிக்கப்பட்டால் அது குறித்த வீதவரி என்று அழைக்கப் படுகிறது.

**விற்பனை வரி விளைவுகள் :**

விற்பனை வரி நாட்டின் பொருளாதார வளர்ச்சிக்கு இரண்டு விதங் களில் உதவுகிறது. பொருளாதார முன்னேற்றத்திற்காக அரசாங்க வருவாய் திரட்டவும், குறுகிய காலத்தில் அதிக வரு மானம் ஈட்டவும், மேலும் மக்களின் தற்கால நுகர்வைக் குறைத்து உதவவும், அதனால் ஏற்றுமதிக்கு உபரி பெருக்கவும் விற்பனை வரிகள் உதவியாக இருக்கின்றன. விற்பனைவரி மூலம் நாட்டில் வருமான மறுபகிர்வினை ஏற்படுத்த முடியும் என்று சில பொது நிதியியல் வல்லுநர்கள் கருதுகின்றனர். ஆடம்பரப்பொருள்கள் மீது அதிக விற்பனைவரி விதிப்பதன் மூலம் ஆடம்பரப் பொருள்கள் உபயோகப்படுத்தும் செல்வர்களுடைய வருமானத்தை அரசாங்கம் மறுபகிர்வு செய்ய முடிகிறது. விற்பனைவரிகள் சமுதாயத்தில் வருமான மறுபகிர்வு ஏற்படுத்துவது மட்டுமன்றி, மூலதனப் பெருக்கத்திற்கு நேரிடைவரிகள் போல் எந்த விதத் தடையாக இருப்பதில்லை. விற்பனைவரி உயர்வால் தனிநபர் சேமிப்பும் எந்த முறையிலும் பாதிக்கப்படாது.

விற்பனை வரிகளால் பொருள்களின் விலை அதிகமாகிறது என்றும், இத்தகைய பொருள் விலை உயர்வு வளர்ச்சியுறுத நாடு களில் பல பிரச்சினைகளுக்குக் காரணமாகும் என்றும் சிலர் கருதுகின்றனர். ஆனால், மாநில அரசாங்கங்களின் நேர்முக, மறைமுக வரிகளின் தன்மைகளை ஆராய்ந்து பார்த்தால் விற்பனை வரிகள் அவசியம் என்ற உண்மை புலப்படுகிறது.

மற்றப் பண்டவரிகளைப் போல் விற்பனைவரி பெற்றுள்ள சிறப்பியல்புகளைக் கீழ்வருமாறு பிரிக்கலாம்.

(1) பண்டவரி வருவாய்களின் நிலைப்பேறு.

(2) வசூல் செய்வதற்கான செலவு ஒப்புமையில் குறைவாக இருத்தல்.

(3) வரியின் தேய்வீதத் தன்மை.

(4) வரியில், செலவைக் கட்டுப்படுத்துவதற்கான சாத்தியக் கூறுகள் இருத்தல்.

(5) உடனடியாக வருவாய் திரட்டும் திறன்.

(6) வரி செலுத்துகிறோம் என்ற உணர்ச்சியை மக்களிடையே அபிவிருத்தி செய்தல்.

(1) வருவாய்களின் நிலைப்பேறு :— நேர்முக வரியாகிய வருமான வரியைவிட விற்பனைவரி வருவாய் நிலையானதாகக் காணப்படுகிறது. மக்களின் வருமான மட்டத்திற்கேற்ப வருமான வரி வருவாய் மாறும். ஆனால், மக்கள் நுகர்வு மட்டும் நிலைபேறாக இருப்பதால் விற்பனை வரி வருவாய்த் தளம் நிலை பேறுள்ளதாகத் திகழ்கிறது. வருமானவரி போன்றவை வளர்வீத வரிகளாகும். நாட்டு வருமானத்தில் ஏற்ற இறக்கங்கள் ஏற்படும்போது வருமானவரி வருவாயிலும் ஏற்ற இறக்கங்கள் ஏற்படக்கூடும். விற்பனை வரிகளின் வருவாய் ஓரே நிலையானதாக இல்லாவிடினும் மற்ற நேர்முக வரிகளைவிட, மந்த காலத்திலும் (Depression period) ஓரளவு நிலையான வருவாய் ஈட்டும் தன்மை யினைக் கொண்டுள்ளது.

அமெரிக்காவில் 1920 முதல் 1929 வரை பொருளாதாரத்தில் மொத்த நுகர்வின் மட்டம் 50% உயர்ந்தது. 1929 முதல் 1932 வரை நுகர்வின் மட்டம் 20% குறைந்தது. வாணிபச் சுழலின் போது விற்பனைவரி வருவாய்கள் நிலைபேறாக இருப்பது விலக்குப் பட்டியலைப் பொறுத்திருக்கிறது.

(2) வசூல் செலவு : விற்பனைவரி மற்ற மறைமுக வரிகளைப் போலவே 'தானாகவே வசூலாகி விடுகிறதென்றும்' அரசாங்கம் வசூல் செய்ய மேற்கொள்ளும் செலவு மிகக் குறைவே என்றும் கருதப்படுகிறது. பேராசிரியர் டியு (Professor John. F. Due) விற்பனைவரிகளை அமுல் செய்வதற்காகும் செலவுகள் அவற்றின் வரவுகளில் 0·67 சதவீதத்திலிருந்து 2·5% வரை ஆகுமென்றும் சராசரி 1·5% என்றும் அறிவிக்கிறார். கூட்டாட்சி நாடுகளில் ஒவ்வொரு மாநிலத்திலும் பலவித விற்பனைவரிகள் விதிக்கப் படுகின்றன. சில மாநிலங்களில் விற்பனைவரி அமுல் செலவு விற்பனை வரிச்சட்டங்களைப் பொறுத்துள்ளது. தமிழகத்தில் பொதுவிற்பனை வரியைஅமுலாக்க 1962–63-ல் ரூ. 71·08இலட்சம் செலவிடப்பட்டுள்ளது; 1970–71-ல் ரூ. 187·67 இலட்சம் செலவிடப்பட்டது. 1962–63-ல் விற்பனை வரிவருவாய் ரூ 24·80 கோடியாகும். 1970–71-ல் விற்பனை வரிவருவாய் ரூ· 82·61 கோடியாக உயர்ந்துள்ளது. விற்பனைவரி வருவா

யினையும், செலவினையும் ஒப்பிட்டுப் பார்த்தால் வசூல் செலவு மிகக் குறைந்தே காணப்படுகிறது.

3. விற்பனை வரிகளின் தேய்வீதத் தன்மை (Regressiveness of sales taxes : விற்பனைவரி தனியாள் வருமானத்தை அடிப்படையாகக் கொண்டு பார்த்தால், ஒரு தேய்வீத வரியாகும். ஏனெனில், தனியாள் வருமானத்திலிருந்தே இவ்வரி செலுத்தப் படுகிறது. இந்த விற்பனைவரி நுகர்வோர்மீது விழுவதாலும், குறைந்த வருமானம் கொண்டுள்ளோர்மீது விழுவதாலும், குறைந்த வருமானம் கொண்டுள்ளோர் மீது வரிப்பளு அதிகமாகவும், அதிக வருமானம் உடையோர்மீது வரி செலுத்தும் திறனுக்கேற் க் குறைந்தும் காணப்படுவதால் விற்பனை வரிகள் தேய்வீதத் தன்மை உடையவை என்று எண்ணப்படுகின்றன. போகப் பொருள்கள் மீதான விற்பனை வரியை அதிகமாக்கி, இன்றியமையாத பொருள்கள் பலவற்றினை விலக்குப் பட்டியலில் சேர்த்தால் இந்த விற்பனைவரி மூலம் அதிக வருமானம் பெறலாம்.

4. செலவைக் கட்டுப்படுத்தும் சாத்தியக் கூறுகள்: அரசாங்கம், சமூக நலன் கருதி, சில பண்டங்களின் விற்பனையைக் கட்டுப் படுத்த ஆயத் தீர்வையைப் போலவே, விற்பனை வரியும் உதவுகிறது. வெறிநீர் ஆயத் தீர்வை மக்கள் வெறிநீர் அருந்துவதைத் தடுக்க வேண்டும் என்ற நல்லெண்ணத்தோடு விதிக்கப்படுகிறது. இதைப் போலவே சில பொருள்கள் மீது விற்பனைவரி விதிப்பதால், மக்கள் இவற்றை வாங்குவதைக் குறைக்க முடியும். இதனால் செலவைக் குறைக்கும் தன்மை விற்பனை வரிகளுக்கு உண்டு.

5. உடனடியான வருவாய்கள் (Immediate Revenue.) : வரிச் சட்டத்தை அமுலாக்கியவுடன் மாநில வருவாய் பெருக்கும் திறன் விற்பனை வரிக்கு உண்டு. இது இந்த வரியின் சிறப்பானதோர் அம்சமாகும். வருமான வரி ஆண்டு தோறும் வசூலிக்கப்படுகிறது. வருமான வரிச் சட்டத்தில் மாற்றங்கள் ஏற்படுத்தினாலும், உடனடியாகப் பலனளிக்காது. ஆனால், விற்பனை வரி வருவாய், பொருள்களின் நுகர்வுக்கேற்ப உயரும் தன்மையுடையது.

6. வரியுணர்வு (Tax consciousness) : கூட்டரசு நாடுகளில் வாழும் மக்கள் தாம் செலுத்தும் வரி மாநில அரசாங்கங்களின் வருவாயினைப் பெருக்க உதவுகிறது என்பதை உணர வேண்டும். நேர்முக வரிகள் பெரும்பாலும் மக்களிடையே வரியுணர்வை ஏற்படுத்துவது போலவே விற்பனை வரியும் வரியுணர்வை உண்டாக்குகிறது.

தமிழக மாநில விற்பனை வரிகள்

இந்திய மாநிலங்களில் முதன் முதலாக விற்பனைவரி விதித்த சிறப்புத் தமிழக மாநிலத்தையே சாரும். மதுவிலக்கினால் ஏற்பட்ட

தமிழ் நாட்டில் விற்பனைவரி வருமானம்




நிதி இழப்பைத் தவிர்க்கும் எண்ணத்தோடு 1939-ல் விற்பனைவரி விதிக்கப்பட்டது. 1959ஆம் ஆண்டில் இயற்றப்பட்ட தமிழ்நாடு

பொது விற்பனை வரிச் சட்டம், 1939 முதல் இருபது ஆண்டுகள் அமுலில் இருந்த விற்பனை வரிச் சட்டத்தை நீக்கம் செய்தது. பலமுனை வரிக்குட்பட்ட சரக்குகள் சம்பந்தமான விற்பனைவரி விதிப்புக்கான குறைந்த மொத்த வியாபாரத் தொகை 1966 ஜூன் வரை ரூ. 10,000, 1967 ஜூலை 1 முதல் இத்தொகை ரூ. 15,000 ஆகும். ஒரு முனை வரிக்கு உட்பட்ட சரக்குகள் மீது விதிக்கும் விற்பனைவரி பொறுத்தவரையில் மொத்த வியாபாரத் தொகை எந்த அளவானாலும், விற்பனைவரி செலுத்த வேண்டும். பல முனை வரியின் பொது வீதம் 1967ஆம் ஆண்டு ஜூலை முதல் தேதி முதல் 3% ஆகும். உலர்ந்த அல்லது நீரகற்றிய காய்கறிகள் நீங்கலாக ஏனைய காய்கறிகள், புதிய பழங்கள், வெற்றிலை, வாழையிலை, மலர்கள், முட்டைகள், இறைச்சி, மீன், உருளைக் கிழங்கு ஆகியவை 1960, ஏப்ரல் 1ஆம் தேதி முதல் விற்பனை வரியிலிருந்து விலக்கப்பட்டன. புகையிலை, அதன் பொருள்கள், மோட்டார் எண்ணெய், சில வகைத் துணிகள், வெல்லம் உட்பட சர்க்கரை, கையால் நூற்ற நூல், கைத்தறித் துணி முதலியவை கூட வரிப் பட்டியலிலிருந்து விலக்கப்பட்டுள்ளன.

1956 முதல் அமுலுக்கு வந்த மத்திய விற்பனை வரிச் சட்டத்தின் 14-வது பிரிவு சில பொருள்களை மாநிலங்களிடையே வியாபாரம் செய்யப்படுவன என்று அறிவித்தது. மாநிலங் களிடையே வியாபாரம் செய்பவர் தமது மொத்த விற்பனை அளவு பாராமல் விற்பனைவரி செலுத்த வேண்டும். இரும்பு, உருக்கு, கல் கரி உட்பட நிலக்கரி, சணல், எண்ணெய் வித்துக்கள், பருத்தி, பருத்திநூல், ஆட்டுத்தோல், மாட்டுத்தோல் போன்ற பொருள்கள் மீது மாநில அரசு வரி விதிப்பதற்குள்ள அதிகாரத்தை வரையறுக்கிறது. இப்பொருள்கள் மீது ஒரு முனையில் மட்டுமே வரி விதிக்கப்பட வேண்டும். மத்திய விற்பனை வரிச்சட்டத்தின் படி இந்த வரிகள் 1959 ஆம் ஆண்டு தமிழ் நாடு பொது விற்பனை வரிச்சட்டத்தில் தகுந்த முறையில் நடைமுறைக்குக் கொண்டு வரப்பட்டுள்ளன.

1939 ஆம் ஆண்டு இயற்றப்பட்ட தமிழ் நாடு மோட்டார் எண்ணெய் விற்பனை மீது வரி விதிப்பு சட்டப்படி மோட்டார் எண்ணெய் விற்பனை மீது வரி விதிக்கப்படுகிறது. 1951-ல் எண்ணெய் மீது வரி விதிப்பு வீதம் காலனுக்கு 10 காசிலிருந்து 35 காசுவரை உயர்த்தப்பட்டுள்ளது. 1965 டிசம்பர் மாதம் 1-ஆம் தேதி முதல் பாறை எண்ணெய் லிட்டர் ஒன்றுக்கு 10 காசும், டீசல் எண்ணெய் லிட்டர் ஒன்றுக்கு 10 காசும் விற்பனை வரி விதிக்கப்பட்டது. விமான எரி எண்ணெய் மீதும் லிட்டர் ஒன்றுக்கு 10 காசு வரி 1967 முதல் விதிக்கப்பட்டது. மேற்கூறிய

| மாநிலம் | | நிலவரி 1967–68-ல் | பயிரிடப்பட்ட நிலம் 1965-66-ல் (1,000 ஏக்டரில்) | ஒரு எக்டர் நிலவரி (ரூபாயில்) |
|---|---|---|---|---|
| | | கோடியில் | | |
| ஆந்திரப் பிரதேசம் | | 7·90 | 10,995 | 7·19 |
| அஸ்ஸாம் | ... | 3·04 | 2,337 | 13·01 |
| பிஹார் | ... | 4·24 | 8,338 | 3·89 |
| குஜராத் | ... | 7·81 | 9,528 | 8·20 |
| ஹரியாணா | ... | 1·43 | 3,403 | 4·20 |
| ஜம்மு & காஷ்மீர் | ... | 0·58 | 671 | 8·64 |
| கேரளா | ... | 1·85 | 2,064 | 8·96 |
| மத்தியப் பிரதேசம் | ... | 7.26 | 16,527 | 4·39 |
| மஹராஷ்ரா | ... | 8·74 | 18,122 | 4·82 |
| மைசூர் | ... | 7·41 | 10,011 | 7·40 |
| நாகாலாந்து | ... | 0·01 | 47 | 2·13 |
| ஒரிஸ்ஸா | ... | 1·61 | 5,989 | 2·69 |
| பஞ்சாப் | ... | 1·85 | 3,836 | 4·82 |
| இராஜஸ்தான் | ... | 10·14 | 14,131 | 7·18 |
| தமிழ்நாடு | ... | 5·28 | 5,934 | 8·90 |
| உத்தரப் பிரதேசம் | ... | 25·33 | 17,343 | 14·61 |
| மேற்கு வங்காளம் | ... | 5·47 | 5,443 | 10·05 |

மூலம்; 5-வது ஆணைக் குழு அறிக்கை பக்கம் 145.

| மாநிலம் | நிலவரிகள் | மாநில ஆயத் தீர்வை | வண்டி வரி | பொது விற்பனை வரி | மாநிலங்களுக்கு இடையே விற்பனை வரி | முத்திரைகள் பத்திரப் பதிவுக் கட்டணங்கள் | மற்ற வரிகள் | மொத்த வரி வருமானம் |
|---|---|---|---|---|---|---|---|---|
| பஞ்சாப் | 1·38 | 11·31 | 4·43 | 9·34 | 3·26 | 4·64 | 3·10 | 37·46 |
| மஹாராஷ்டிரம் | 1·91 | 0·90 | 5·76 | 14·09 | 5·25 | 2·44 | 6·15 | 36·50 |
| மேற்கு வங்காளம் | 2·36 | 3·21 | 3·42 | 6·64 | 4·79 | 2·56 | 3.32 | 26·30 |
| குஜராத் | 3·54 | 0·26 | 4·98 | 12·04 | 3·15 | 1·91 | 3·71 | 29·59 |
| ஹரியாணு | 1·57 | 6·86 | 4·24 | 6·15 | 3·89 | 3·96 | 2·28 | 28·95 |
| தமிழ் நாடு | 1·85 | 0·20 | 5·89 | 11·01 | 2·76 | 3·58 | 4·08 | 29·37 |
| அஸ்ஸாம் | 6·10 | 2·10 | 3·04 | 5·23 | 0·42 | 1·01 | 0·76 | 18·66 |
| ஆந்திரா | 1·96 | 3·96 | 2·99 | 6·88 | 1·08 | 2·01 | 0·79 | 19·67 |
| மைசூர் | 3·42 | 2·62 | 4·24 | 7·80 | 1·67 | 2·05 | 1·48 | 23·28 |
| கேரளா | 2.64 | 4·73 | 4·81 | 10·39 | 1·33 | 2·62 | 0·92 | 27·44 |
| மத்தியப் பிரதேசம் | 1·94 | 3·16 | 2·21 | 5·11 | 1·99 | 1·16 | 1·37 | 16·94 |
| இராஜஸ்தான் | 4·25 | 3·26 | 2·42 | 6·94 | 1·07 | 0·98 | 0·58 | 19·50 |
| உத்தரப்பிரதேசம் | 3.03 | 2·38 | 1·70 | 4·10 | 0·42 | 1·24 | 1·73 | 14·60 |
| ஒரிஸ்ஸா | 0·83 | 1·43 | 1·57 | 3·69 | 2·12 | 1·02 | 1·46 | 12·12 |
| ஜம்மு & காஷ்மீர் | 1·49 | 4·46 | 9·26 | 2·57 | — | 1·10 | 0·56 | 19·47 |
| பீஹார் | 0·64 | 2·02 | 1·06 | 3·70 | 2·20 | 1·32 | 1·12 | 12·06 |
| நாகாலாந்து | 0·25 | 1·25 | 1·25 | 2·50 | — | — | 0·50 | 5·75 |
| | 2·36 | 2·63 | 3·28 | 7·18 | 2·74 | 1·95 | 1·78 | 21·92 |

எண்ணெய்கள் தவிர, மற்றைய மோட்டார் எண்ணெய்கள் மீது லிட்டர் ஒன்றுக்கு 2 காசு விற்பனை வரி விதிக்கப்படுகிறது.

எல்லா மாநிலங்களிலும் 1950–51 முதல் 1967–68 வரை விற்பனை வரி வருவாய் 9 மடங்கு உயர்ந்துள்ளது. 1950–51-ல் மாநில அரசாங்கத்திற்கு விற்பனை வரியால் கிடைத்த வருவாய் ரூ. 55·99 கோடியாகும். 1967–68-ல் இத்தொகை ரூ. 509·56 கோடியாக உயர்ந்துள்ளது. தமிழக மாநில வரி வருவாயில் இன்று அதிக பங்கு விற்பனை வரி மூலம் கிடைக்கிறது. 1960–61க்குப் பிறகு விற்பனை வரி வருவாய் தொடர்ந்து உயர்ந்து கொண்டே வருகிறது.

| ஆண்டு. | விற்பனை வரி வருவாய். ரூ. இலட்சம் |
|---|---|
| 1962–63 | 2,480·09 |
| 1963–64 | 2,701·73 |
| 1964–65 | 3,530·15 |
| 1965–66 | 4,095·38 |
| 1966–67 | 4,876·51 |
| 1967–68 | 5,641·74 |
| 1968–69 | 6,120·04 |
| 1969–70 | 7,215·47 |
| 1970–71 | 8,261·42 |
| 1971–72 (திட்ட மதிப்பீடு) | 9,319·48 |

**கேளிக்கை வரி :**

கேளிக்கைத் திடல்களின் நுழைவு சீட்டின் மதிப்பின் அடிப்படையில் கேளிக்கை வரி விதிக்கப்படுகிறது. திரைப்படக் காட்சி, சர்க்கஸ், விளையாட்டுப் பந்தயங்கள் போன்ற கேளிக்கைகள் நடத்துவோர்மீது இந்த வரி விதிக்கப்படுகிறது. ஆனால், கேளிக்கை நடத்துவோர் கேளிக்கை வரிச்சுமையினை கேளிக்கை பார்த்து மகிழ்வோர்மீது சுமத்துகின்றனர். இவ்வரி நுழைவுச் சீட்டின்மேல் விதிக்கப்படுவதால், நுழைவுச் சீட்டின் மதிப்பிற் கேற்ப அமைகிறது. நன்கொடைக்காகவும், மதச்சார்பாக நடத்தப்படும் கேளிக்கைகளுக்கும் இந்த வரியிலிருந்து விலக்கு அளிக்கப்

படுகிறது. தொழில்துறை முன்னேறறத்திற்கோ அல்லது சுகாதார முன்னேற்றத்திற்கோ நிதி திரட்ட இத்தகைய கேளிக்கைகளை நடத்தினுல் அவை கேளிக்கை வரியிலிருந்து விலக்கப் படுகின்றன.

கேளிக்கை வரி பல மாநிலங்களில் உள்ளாட்சி மன்றங்களின் வரி அதிகாரமாக உள்ளது. தமிழகத்தில் 1939 வரை கேளிக்கை வரிவருமானம் உள்ளாட்சி நிறுவனங்களுக்கு அளிக்கப் பட்டது. 1939 ஆம் ஆண்டு தமிழ்நாடு கேளிக்கை வரிச் சட்டம், 1926 ஆம் ஆண்டு உள்ளாட்சி நிறுவனங்களின் கேளிக்கை வரிச் சட்டத்தை நீக்கம் செய்தது. அதற்கு இழப்பு நிதியாக மூன்றுண்டு களுக்கு உள்ளாட்சி நிறுவனங்கள் கேளிக்கை வரியால் பெற்ற தொகையை அளித்து வந்தது. 1945ஆம் ஆண்டிற்குப் பிறகு கேளிக்கை வரிகளை வசூலிக்க 10% கழித்து மற்ற மொத்த கேளிக்கை வரி வருமானத்தை உள்ளாட்சி நிறுவனங்களுக்கே வழங்கியது. 1958ஆம் ஆண்டு ஏப்ரல் திங்கள் முதல் திரைப்படக் காட்சிகள், குதிரைப் பந்தயம் இவற்றிற்கு மட்டும் வரி விதிக்கும விதத்தில் இச்சட்டம் மாற்றியமைக்கப்பட்டது. அனுமதிக் கட்டண வரி விதிப்பு விகிதமும், முதல் கட்டத்தில் $\frac{1}{4}$ ஆகவும், இரண்டாவது கட்டத்தில் $\frac{1}{3}$ ஆகவும், மூன்ருவது கட்டத்தில் $\frac{2}{5}$ ஆகவும் உயர்த்தப்பட்டது.

1961ஆம் ஆண்டு முதல் உள்ளாட்சி நிறுவனங்கள் கேளிக்கை வரி மீது மேல் வரி (Supertax) விதிக்க அனுமதி பெற்றன. இவை உள்ளாட்சி நிறுவனங்களுக்குக் கணிசமான வருமானம் அளித்து வருகிறது.

குதிரைப் பந்தய வரி :

கேளிக்கைகளில் ஒன்று குதிரைப் பந்தயம், தமிழகத்தில் கிண்டியிலும், உதக மண்டலத்திலும் குதிரைப் பந்தயம் ஒரு சிறந்த கேளிக்கையாகும். 1935ஆம் ஆண்டிலே குதிரைப் பந்தயத்தின் மீது கேளிக்கை வரி விதிக்கப்பட்டது. இப்போது குதிரைப் பந்தயத்தின் மீது கீழ்க்கண்ட வரிகள் விதிக்கப் படுகின்றன:

(அ) பந்தயம் கட்டுவோர்கள் பந்தயம் அல்லது ஓட்டப் பணமாக பந்தயக் கணக்கீடு இயந்திரத்தில் கட்டிய பணம் முழுவதற்கும் அப்பந்தயம் கட்டியவர்கள் மீது.

(ஆ) குதிரைப் பந்தய மைதானத்திற்குள் கட்டிய பந்தயத்தின் விளைவாகப் பந்தயம் கட்டுவோர் பந்தயம் பிடிப்ப

வருக்குக் கொடுத்த அல்லது கொடுக்க ஒப்புக் கொண்ட எல்லாத் தொகை குறித்தும் பந்தயம் பிடிப்பவர்கள் மீது, குதிரைப் பந்தய வரி செலுத்தப்படும் முறை வருமாறு :

கிண்டி குதிரைப் பந்தயத்தில்:

| | |
|---|---|
| மின்சாரத்தால் இயங்கும் பந்தயக் கணிப்புப் பொறி | — 15% |
| ஏனைய பந்தயக் கணிப்புப் பொறிகள் | — 15% |
| பணய ஒப்புநர்கள் | — 15% |

உதகமண்டலத்தில் நடக்கும் குதிரைப் பந்தயம் :

| | |
|---|---|
| பந்தயக் கணக்கு இயந்திரங்களும், பந்தயம் பிடிப்பவர்களும் | — 100% |

தமிழகத்தில் குதிரைப் பந்தயத்தை ஒழிக்க அரசாங்கம் சில ஆண்டுகளாக எண்ணிக் கொண்டிருக்கிறது. தமிழகத்தில் குதிரைப் பந்தயம் ஒழித்தால் குதிரைப் பந்தயத்தில் ஈடுபடுவோர் பலர் அந்நிய மாநிலங்களுக்குச் சென்று பந்தயத்தில் ஈடுபடுவர். மேலும், குதிரைப் பந்தயவரியால் அரசாங்கம் கணிசமான தொகை பெற்று வருகிறது.

(திட்ட மதிப்பீடு)

| | 1967–68 | 1968–69 | 1969–70 | 1970–71 |
|---|---|---|---|---|
| குதிரைப் பந்தய வரி | | (ரூ. இலட்சம்) | | |
| (பந்தயக் கணிப்புப் பொறி) | 55·10 | 100·30 | 62·00 | 71·00 |
| (பணய ஒப்புநர்) | 28·80 | 44·80 | 32·50 | 34·00 |

கேளிக்கை வரியினால் அரசாங்கத்திற்குக் கிடைக்கும் வருவாய் உயர்ந்து கொண்டே வருகிறது. பல ஊர்களில் திரைப்படக் காட்சி அரங்கங்கள் தோன்றியுள்ளன. கடந்த மூன்று ஆண்டுகளில் கேளிக்கை வரியால் அரசாங்கத்துக்குக் கிடைத்த வருவாய் பின்வருமாறு.

| | 1967–68 | 1968–69 | 1969–70 | 1970–71 |
|---|---|---|---|---|
| | | ரூ. லட்சம் | | |
| கேளிக்கைவரி. | 669·95 | 757·68 | 852·23 | 957·83 |

எல்லா மாநிலங்களிலும் 1967–68-ல் கேளிக்கை வரி மூலம் கிடைத்த வருவாய் ரூ. 35 கோடியாகும்.

மின்சாரத்தீர்வை :

மின்சாரம் பயன்படுத்துவதன் மீது 1932-ல் பம்பாய் மாநிலத்தில் வரி விதிக்கப்பட்டது. மற்ற மாநிலங்கள் பம்பாய் மாநிலத்தைப் பின்பற்றி மின்சாரத் தீர்வை விதித்தன. இந்தியாவில் அஸ்ஸாம், ஜம்மு & காஷ்மீர் தவிர மற்ற மாநிலங்களில் மின்சாரத் தீர்வை அமுலில் இருந்து வருகிறது. அரசியல் சட்டத்திலேயே மத்திய அரசு உபயோகப்படுத்தும் மின்சாரம் தவிர மற்ற மின்சாரப் பயன் மீது வரி விதிக்க அதிகாரம் வழங்கப் பட்டுள்ளது. இந்த மின்சாரத் தீர்வை மின்சாரம் வழங்கு உரிமதாரர்கள் மீது விதிக்கப்படுகிறது: ஆனால், மின்சாரம் வழங்கு நிறுவனங்கள் மின்சாரப் பயன் கட்டணத்தை உயர்த்தி மின்சாரத் தீர்வையைப் பயன்படுத்துவோர் மீது புரட்டுகின்றன.

1939ஆம் ஆண்டு இயற்றப்பட்ட தமிழ் நாடு மின்சாரத் தீர்வைச் சட்டத்தின் படி ஒரு யூனிட் மின்சார சக்தி விற்பனைக்கு மூன்றுகாசு தீர்வை செலுத்த வேண்டும். இந்திய அரசினருக்கும் இரயில்வே துறைக்கும் விற்ற மின்சாரம் குறித்தும், உரிமதாரர்கள் இயக்குதல் பேணுதல் போன்றவற்றிற்கு உபயோகப்படுத்தும் மின்சாரத்திற்கும் தீர்வை கிடையாது.

1965 முதல் மின் சக்தி பயனுக்கேற்ப வரி வீதங்களும் மாற்றப்பட்டன.

| | |
|---|---|
| (1) உயர் அழுத்த மின்சாரம் வழங்கல். | பயன்படுத்தும் மின்சக்தி விலையில் 35% |
| (2) துணி ஆலைத் தொழிலுக்கு உயர் அழுத்த மின்சாரம் வழங்கல். | பயன்படுத்தும் மின்சக்தி விலையில் 30% |
| (3) சிமிட்டித் தொழிலுக்காக உயர் அழுத்த மின்சாரம் வழங்கல். | பயன்படுத்தும் மின்சக்தி விலையில் 15% |
| (4) தீவிர சக்தி தேவைப் படுகிற தொழில்களுக்கான உயர் அழுத்த மின்சாரம் வழங்கல். | பயன்படுத்தும் மின்சக்தி விலையில் 10 % |
| (5) குறைவழுத்த மின்சாரம் வழங்கல். | பயன்படுத்தும் மின்சக்தி விலையில் 20% |

| | | |
|---|---|---|
| (6) | வீட்டுக் காரியங்களுக்காக ஒரு மொத்தமாக மின் சாரம் வழங்கல் நீங்கலாக வீட்டுக் காரியங்களுக்குக் குறைவழுத்த மின்சாரம் வழங்கல். | பயன்படுத்தும் மின் சக்தி விலையில் 10% |

மின்சாரத் தீர்வை மூலம் தமிழக மாநில அரசாங்கத்திற்குக் கடந்த சில ஆண்டுகளில் கிடைத்த வருவாய்:

மின்சாரத்தீர்வை.

| 1967–68 | 1968–69 | 1969–70 | 1970–71 |
|---|---|---|---|
| | | ரூ. இலட்சம் | |
| 725·88 | 766·10 | 823·61 | 870·34 |

முத்திரைத் தாள்கள் ;

வர்த்தகம் பற்றிய பத்திரங்கள், கடன் நோட்டு, வில்லடி, கடன் கடிதங்கள், காப்புறுதிப் பத்திரங்கள் பங்கு மாற்றங்கள், கடன் பத்திரங்கள், அதிகாரப் பத்திரங்கள், இரசீதுகள் முதலியவற்றின்பேரில் முத்திரைத் தீர்வை விதிக்கப்படுகிறது. இவற்றைத் தவிர அரசாங்க முத்திரைத் தாள்கள் விற்பனை மூலம் அரசாங்கத்திற்கு வருமானம் கிடைக்கிறது. அரசாங்க முத்திரைத் தாள்களை இரண்டு வகைகளாகப் பிரிக்கலாம்.

(1) நீதித்துறை சார்பற்ற முத்திரைத்தாள்கள்.

(2) நீதித்துறை முத்திரைத் தாள்கள்.

பல வகைத் தொகை முத்திரைத் தாள்கள் விற்பனையிலிருந்து அரசாங்கத்திற்கு நேரிடையாக வருவாய் கிடைக்கிறது. சென்னை நகரிலும், மற்ற ஊர்களிலும் இயங்கு சொத்து சம்பந்தமான முத்திரைத் தீர்வையின் பேரில் மேல்வரி ஒன்றினை உள்ளாட்சி நிறுவனங்கள் விதிக்கின்றன. சில பத்திரங்களில் போதுமான அளவு முத்திரை ஒட்டப்படாமல் இருந்தாலோ, முத்திரையே ஒட்டப்படாமல் இருந்தாலோ, சிவில் நீதி மன்றங்களும், மாவட்ட ஆட்சித் தலைவர்களும், உரிய தீர்வையும், அபராதமும் விதிக்கலாம். இத்தகைய வருமானம் இத்தலைப்பில் சேருகிறது.

இவற்றைத் தவிர நீதித்துறை முத்திரைத் தாள்களும் இத் தலைப்பின் கீழ் வருகிறது. முத்திரைத் தாள்களாகப் பெற்ற நீதி

மன்றக் கட்டணங்கள், நீதிமன்றக் கட்டளைகளைச் சேர்ப்பிப்பதற்கான சட்டணமும், மாஜிஸ்ட்ரேட்டுகள் அதிகாரப் பத்திரங்களை உறுதிப் படுத்த விதிக்கும் கட்டணமும் இத்தலைப்பில் இடம் பெறுகின்றன.

முத்திரைத்தாள்கள் மூலம் அரசாங்கத்திற்குக் கிடைக்கும் வருவாய் உயர்ந்துகொண்டே வருகிறது.

| | | | |
|---|---|---|---|
| 1962–63 | 24·33 | 1967–68 | 26·44 |
| 1963–64 | 31·22 | 1968–69 | 27·32 |
| 1964–65 | 31·62 | 1969–70 | 30·86 |
| 1965–66 | 25·20 | 1970–71 | 32·50 |
| 1966–67 | 19·31 | | |

நிறுவன வரி நீங்கலாக ஏனைய வருமான வரிகள்.

இந்திய அரசியல் சட்டத்தின் 270 வது பிரிவுப்படி மத்திய அரசு வேளாண்மை வருமானம் தவிர மற்ற வருமானம் மீது வரி விதிக்கிறது. இவ்வரியால் வசூலாகும் தொகை இந்திய அரசாங்கத்திற்கும் மாநில அரசாங்கங்களுக்குமிடையே நிதி ஆணைக் குழுவின் பரிவுரையின் பேரில் பிரித்துக் கொடுக்கப்படுகிறது. முதல் நிதி ஆணைக்குழு மொத்த வசூலில் 55%ம், இரண்டாவது நிதி ஆணைக்குழு 60%ம், மூன்றுவது நிதி ஆணைக்குழு $66\frac{2}{3}$%ம், நான்காவது நிதி ஆணைக்குழு 75%ம், ஐந்தாவது நிதி ஆணைக்குழு 75%ம், மாநிலங்களுக்குப் பிரித்துத்தரச் சிபாரிசு செய்துள்ளது. இத்தொகை மக்கள் தொகை அடிப்படையில் 80%ம், வசூல்கள் அடிப்படையில் 20%ம், மாநிலங்களுக்குப் பிரித்துக் கொடுக்கப்படுகிறது. தமிழக மாநிலத்திற்கு இந்த அடிப்படையில் பிரித்துக் கொடுக்கும் தொகை, மொத்தத் தொகையில் 8·34% ஆகும்.

ஐந்தாவது ஆணைக்குழு பரிவுரையின்படி மக்கள் தொகைக்கென 90%, வசூல் அடிப்படையில் 10% பிரித்துத் தரப்படுகிறது. தமிழகமாநிலம் அடுத்த நான்காண்டுகளில் மொத்தத் தொகையில் 8·18% பெறும்,

| | 1967–68 | 1968–69 | 1969–70 | 1970–71 |
|---|---|---|---|---|
| வருமானவரி : | | | | |
| (நிகர வருமானவரி வருவாயிலிருந்து மாநிலங்களுக்குப் பிரித்துக் கொடுக்கப்படும் பங்கு). | 1,460·13 | 1,627·70 | 2,150·00 | 2,250·01 |

வருமானவரி, நிறுவன வரி, மையவரி மூலம் கிடைக்கும் வருவாய்:—

| ஆண்டு | வருமானவரி | நிறுவனவரி | மைய உபரிவரி |
|---|---|---|---|
| 1 | 2 | 3 | 4 |
| | | ரூ. கோடியில் | |
| 1952–53 | 143·2 | 43·8 | 6·1 |
| 1953–54 | 124·2 | 41·6 | 4·9 |
| 1954–55 | 123·2 | 37·3 | 5·0 |
| 1955–56 | 132·0 | 37·1 | 5 0 |
| 1956–57 | 151·2 | 51·2 | 5·6 |
| 1957–58 | 161·6 | 56·1 | 6 9 |
| 1958–59 | 172·8 | 54·3 | 8·4 |
| 1959–60 | 149·2 | 106 6 | 8 3 |
| 1960–61 | 168·7 | 110·7 | 5·7 |
| 1961–62 | 161·0 | 160·8 | 5·1 |
| 1962–63 | 187·4 | 220·1 | 5·6 |
| 1963–64 | 245·6 | 287·3 | 14·9 |
| 1964–65 | 266 9 | 313·6 | 12 6 |
| 1965–66 | 271·9 | 304·8 | 7 1 |
| 1966–67 | 306·3 | 330·8 | 8 2 |
| 1967–68 | 313·3 | 310·3 | 9·3 |
| 1968–69 (R.E) | 338·0 | 322 0 | 14·0 |

ஆதாரம்; நிதிநிலை, வருவாய் கூட்டுக் கணக்கும், மைய அரசின் பதிவேடுகளும்.

1962–63-லிருந்து 1964–65 வரை மாநில வரி வருமான வரி கணக்குத் தொகுப்பு (மைய அரசு ஊழியர் ஊதிய வரி சேர்க்கப் படாமல்)

| மாநிலங்கள் | 1962–63 | 1963–64 | 1964–65 | மொத்தம் 1962–63 to 1964–65 |
|---|---|---|---|---|
| | | ரூ. கோடியில் | | |
| ஆந்திரப் பிரதேசம் | 4 91 | 5·99 | 6·40 | 17·30 |
| அஸ்ஸாம் | 2·25 | 2·29 | 2·30 | 6·84 |
| பீகார் | 2·90 | 1·88 | 4·80 | 9·58 |
| குஜராத் | 9·85 | 9·22 | 9 98 | 29·05 |
| ஹரியாணு | 1·76 | 1·53 | 2·02 | 5·31 |
| ஜம்மு & காஷ்மீர் | 0·47 | 0·48 | 0·62 | 1·57 |
| கேரளா | 3·55 | 3·26 | 3·66 | 10·47 |
| மத்தியப் பிரதேசம் | 3·09 | 2·56 | 5·32 | 10·97 |
| மகாராஷ்டிரம் | 35·16 | 35·72 | 38·75 | 109·63 |
| மைசூர் | 6·06 | 5·96 | 4 98 | 17·00 |
| நாகாலாந்து | — | — | — | — |
| ஒரிஸ்ஸா | 0·76 | 0 77 | 1·49 | 3·02 |
| பஞ்சாப் | 2 58 | 2·22 | 2·96 | 7·76 |
| இராஜஸ்தான் | 0 53 | 1·92 | 2·08 | 4·53 |
| தமிழ்நாடு | 13·08 | 14·27 | 12·99 | 40·34 |
| உத்தரப் பிரதேசம் | 5·85 | 6·56 | 7·92 | 20·33 |
| மேற்கு வங்காளம் | 21·61 | 20 08 | 22·86 | 64·55 |
| மொத்தம் | 114·41 | 114·71 | 129·13 | 358·25 |

ஆதாரம் :- மைய அரசு நேர்முக வரிக் குழு.

**வேளாண்மை வருமான வரி ;**

இந்த வரி மாநிலங்களின் வரி அதிகாரமாகும். முதன் முதலாக 1938-ல் பீஹார் மாநிலத்தில் வேளாண்மை வரி விதிக்கப்பட்டது. தமிழகத்தில் 1955ஆம் ஆண்டு ஏப்ரல் 1ஆம் தேதி முதல் காப்பி, தேயிலை, ரப்பர், ஏலக்காய், சின்கோனு ஆகிய மலைத் தோட்டப் பயிர்கள் மீது வேளாண்மை வருமான வரி விதிக்கப்பட்டது. 1958 முதல் வேளாண்மை வருமான வரி எல்லா விதப் பயிர்கள் மீதும் விதிக்கப்பட்டது. 1968ஆம் ஆண்டு வேளாண்மை வருமான வரிச் சட்டத்திருத்தப்படி விலக்கு வரையறையான 7·50 ஸ்டாண்டர்டு ஏக்கருக்கு மேற்பட்ட நிலம் வைத்துள்ள ஒவ்வொரு நபர் மீதும் வேளாண்மை வரி விதிக்கப்படுகிறது. தனி நபர் ஒருவர் 12·50 ஸ்டாண்டர்டு ஏக்கருக்கு மேல் நிலம் வைத்திருந்து, மொத்த வேளாண்மை வருமானம் ரூ. 4,000க்கு மேற்பட்டால் கீழே குறிப்பிட்டுள்ள வீதங்களில் வரி விதிக்கப்படும்.

| | | |
|---|---|---|
| (1) | மொத்த வேளாண்மை வருமானத்தின் முதல் ரூ. 4,000 மீது | வரி இல்லை. |
| (2) | மொத்த வேளாண்மை வருமானத்தின் அடுத்த ரூ. 1,000 மீது | ரூபாயில் 5 காசு. |
| (3) | மொத்த வேளாண்மை வருமானத்தின் அடுத்த ரூ. 5,000 மீது | ரூபாயில் 15 காசு. |
| (4) | மொத்த வேளாண்மை வருமானத்தின் அடுத்த ரூ. 5,000 மீது | ரூபாயில் 20 காசு. |
| (5) | மொத்த வேளாண்மை வருமானத்தின் அடுத்த ரூ. 5,000 மீது | ரூபாயில் 25 காசு. |
| (6) | மொத்த வேளாண்மை வருமானத்தின் அடுத்த ரூ. 5,000 மீது | ரூபாயில் 30 காசு. |
| (7) | மொத்த வேளாண்மை வருமானத்தின் எஞ்சியுள்ள தொகையின் மீது | ரூபாயில் 45 காசு. |

நிறுவனங்களைப் பொறுத்த வரையில் வேளாண்மை வருமான வரி மொத்த வேளாண்மை வருமானம் மீது ரூபாயில் 45 காசு என்ற உயர்மட்ட வீதத்தில் வரி விதிக்கப்படுகிறது. இதைத் தவிர மலைத் தோட்டப் பயிர் அல்லாத மற்ற நிலங்கள் மீது உடன் பாட்டுவரி விதிக்கப்படுகிறது. அவை முறையே:

முதல் $7\frac{1}{2}$ ஸ்டாண்டர்டு ஏக்கரா மீது வரி இல்லை.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| அடுத்த | $12\frac{1}{2}$ | ,, | ,, | ,, | ரூ. 11·25 |
| அடுத்த | 10 | ,, | ,, | ,, | ரூ. 18·75 |
| அடுத்த | 10 | ,, | ,, | ,, | ரூ. 25·00 |
| அடுத்த | 10 | ,, | ,, | ,, | ரூ. 37·50 |
| அடுத்த | 10 | ,, | ,, | ,, | ரூ. 43·15 |
| அடுத்த | 50 | ,, | ,, | ,, | ரூ. 50·00 |
| எஞ்சிய | | ,, | ,, | ,, | ரூ. 62·50 |

வேளாண்மை வருமானம் ரூ. 25,000க்கு மேற்பட்டால் மேல்வரி (Super tax) விதிக்கப்படுகிறது. குறைந்த மேல்வரி ரூபாயில் 10 காசு. அதிகமாக மேல்வரி ரூபாயில் 40 காசு, நிறுவனங்கள் மீது வேளாண்மை வருமானவரி ரூபாயில் 25 காசாகும்; மேல்வரி ரூபாயில் $12\frac{1}{2}$ காசாகும்.

மேல்வரி விவரம் :

'ஒவ்வொரு தனி நபர், பிரிவினை ஆகாத இந்துக் குடும்பம், பிரிவினையாகாத மருமக்கள், பதிவாகாத நிறுவனம், உறுப்பினர்கள் அடங்கிய மற்ற சங்கம் ஆகிய ஒவ்வொன்றின் மீதும் விதிக்கப்படும் மேல்வரி பின்வருமாறு:

| | | |
|---|---|---|
| (1) | மொத்த வேளாண்மை வருமானத்தின் முதல் ரூ. 25,000 மீது | வரி இல்லை. |
| (2) | மொத்த வேளாண்மை வருமானத்தின் அடுத்த ரூ. 15,000 மீது | ரூபாயில் 10 காசு. |
| (3) | மொத்த வேளாண்மை வருமானத்தின் அடுத்த ரூ. 15,000 மீது | ரூபாயில் 15 காசு. |
| (4) | மொத்த வேளாண்மை வருமானத்தின் அடுத்த ரூ. 15,000 மீது | ரூபாயில் 20 காசு. |
| (5) | மொத்த வேளாண்மை வருமானத்தின் அடுத்த ரூ. 15,000 மீது | ரூபாயில் 30 காசு. |
| (6) | மொத்த வேளாண்மை வருமானத்தின் அடுத்த ரூ. 15,000 மீது | ரூபாயில் 35 காசு. |
| (7) | மொத்த வேளாண்மை வருமானத்தின் எஞ்சியுள்ள தொகையின் மீது | ரூபாயில் 40 காசு. |

மாநிலங்களின் வரி வருமானம்

| தலைப்பு | 1950–51 | 1955–56 | 60 61 | 65 66 | 66 67 | 67·68 |
|---|---|---|---|---|---|---|
| | | | ரூ. கோடியில் | | | |
| வேளாண்மை வருமானவரி | 3·59<br>(100) | 7·68<br>(214) | 11 92<br>(332) | 9 62<br>(268) | 10·25<br>(286) | 1 05<br>(2336) |
| நிலவரி ... | 49·60<br>(100) | 77·78<br>(157) | 97·50<br>(197) | 112·83<br>(227) | 91 41<br>(184) | 104·74<br>(211) |
| மாநில ஆயத்தீர்வை ... | 48·03<br>(100) | 43·70<br>(91) | 53·09<br>(111) | 96 36<br>(201) | 108·91<br>(227) | 130·60<br>(272) |
| வண்டிவரி ... | 7·58<br>(100) | 15·87<br>(209) | 35·57<br>(469) | 64·66<br>(853) | 70 82<br>(934) | 78 06<br>(10[illegible]0) |
| விற்பனை வரிகள் ... | 55·99<br>(100) | 78·33<br>(140) | 157·92<br>(282) | 365.41<br>(653) | 439·45<br>(785) | 509 56<br>(910) |
| மற்றவரிகளும், தீர்வைகளும் | 24·41<br>(100) | 26 29<br>(108) | 45·25<br>185) | 117 97<br>(483) | 137 46<br>(563) | 155·40<br>(637) |
| முத்திரைகள் ... | 22·17<br>(100) | 24·30<br>(110) | 36·79<br>(166) | 64·21<br>(290) | 69·34<br>(313) | 81·00<br>(365) |
| பவுதி ... | 3·84<br>(100) | 3·92<br>(102) | 6·73<br>(175) | 11·56<br>( 01) | 13·17<br>(343) | 15·22<br>(40[illegible]) |
| | 215·21<br>(100) | 277·85<br>(129) | 444·77<br>(207) | 842 62<br>(392) | 940·81<br>(437) | 1086·63<br>(505) |

வேளாண்மை வருமான வரியில் மாநிலங்களுக்குக் கிடைக்கும் வருவாய் குறைவே. 1966–67-ல் எல்லா மாநிலங்களிலும் வேளாண்மை வரியில் கிடைத்த வருமானம் ரூ. 10 கோடியாகும். மொத்தவரி வருமானத்தில் இது 1%-க்கும் குறைவாகக் காணப் படுகிறது. தமிழக மாநிலத்தில் வேளாண்மை வருமான வரியால் கிடைக்கும் வருமானம் வருமாறு:

| | 1967–68 | 1968–69 | 1969–70 | 1970–71 |
|---|---|---|---|---|
| வேளாண்மை | | ரூ. இலட்சத்தில் | | |
| வருமானவரி | 163·28 | 183·69 | 195·00 | 195·00 |

மாநிலங்களின் தலா வருமானம்

| | 1960–61 | 1961–62 | 1962–63 | 1963–64 | 1964–65 |
|---|---|---|---|---|---|
| ஆந்திரப் பிரதேசம் | 314 | 341 | 338 | 381 | 438 |
| அஸ்ஸாம் | 349 | 353 | 349 | 388 | 441 |
| பீஹார் | 216 | 220 | 232 | 265 | 299 |
| குஜராத் | 380 | 412 | 413 | 451 | 523 |
| ஹரியாணு | 359 | 372 | 381 | 481 | 504 |
| ஜம்மு & காஷ்மீர் | 267 | 263 | 267 | 298 | 341 |
| கேரளா | 278 | 295 | 303 | 328 | 393 |
| மத்தியப் பிரதேசம் | 274 | 282 | 280 | 323 | 373 |
| மஹராஷ்டிரா | 419 | 403 | 429 | 478 | 526 |
| மைசூர் | 292 | 316 | 327 | 372 | 420 |
| ஒரிஸ்ஸா | 226 | 233 | 261 | 309 | 347 |
| பஞ்சாப் | 383 | 400 | 421 | 480 | 575 |
| இராஜஸ்தான் | 271 | 294 | 289 | 297 | 356 |
| தமிழ்நாடு | 344 | 361 | 365 | 401 | 434 |
| உத்தரப்பிரதேசம் | 244 | 254 | 258 | 287 | 374 |
| மேற்குவங்காளம் | 386 | 392 | 420 | 476 | 498 |
| எல்லா மாநிலங்களும் | 304 | 315 | 325 | 364 | 418 |

வருவாய் மற்றும்

நபர் வாரி

| | 60-61 | 65-66 | 66-67 |
|---|---|---|---|
| | (ரூபாயில்) | | |
| I. வரி வருமானம் | 15·96 | 28·14 | 32·51 |
| (a) மத்திய வரிகளில் பங்கு | 4·09 | 5·60 | 7·79 |
| 1. வருமான வரி | 2·19 | 2·71 | 3·04 |
| 2. சொத்துரிமை வரி | 0·08 | 0·16 | 0·09 |
| 3. மத்திய ஆயத்தீர்வை | 1·82 | 2·73 | 4·66 |
| (b) மாநில வரிகள் | 11·87 | 22·54 | 24·72 |
| 1. வேளாண்மை வருமான வரி | 0·40 | 0·33 | 0·39 |
| 2. நிலவரி | 1·49 | 1·83 | 1·03 |
| 3. மாநில ஆயத்தீர்வை | 0·07 | 0·13 | 0·14 |
| 4. விற்பனை வரி | 5·70 | 11·09 | 12·95 |
| 5. முத்திரைகள் | 1·35 | 2·21 | 2·39 |
| 6. பத்திர பதிவுக் கட்டணம் | 0·32 | 0·49 | 0·54 |
| 7. வண்டி வரி | 1·81 | 3·61 | 3·97 |
| 8. மற்ற வரிகளும் தீர்வைகளும் | 0·73 | 2·85 | 3·31 |
| II. வரி தவிர மற்ற வருவாய் | 11·49 | 18·67 | 19·16 |
| வருவாய்க் கணக்கில் மொத்த வருமானம் | 27·45 | 46·81 | 51·67 |
| III. மூலதனக் கணக்கில் வருவாய் | | | |
| கடன் | 8·21 | 22·54 | 18·74 |
| மற்றவை | 63·37 | 101·52 | 110·59 |
| மொத்தம் III | 71·58 | 124·06 | 129·33 |
| IV. மொத்த வருமானம் | 99·03 | 170·87 | 181·00 |
| மக்கள் தொகை மதிப்பீடு (மில்லியன்கள்) | 33·53 | 36·91 | 37·65 |

Source : Tamilnadu — An economic

மூலதனக் கணக்கில்

வருவாய்கள்.

| 67–68 | 68–69 | 69–70 | 70–71 | 71–72 | 72–73 |
|---|---|---|---|---|---|
| | | (ரூபாயில்) | | மதிப்பீடு | |
| 37·27 | 39·52 | 44·66 | 50·50 | 62·45 | 66·53 |
| 8·74 | 9·92 | 11·74 | 14·07 | 16·65 | 17·71 |
| 3·80 | 4·16 | 6·02 | 7·23 | 8·54 | 8.80 |
| 0 31 | 0·14 | 0·14 | 0·16 | 0·14 | 0·14 |
| 4·63 | 5·62 | 5·58 | 6·68 | 7·97 | 8·77 |
| 28·53 | 29·60 | 32·92 | 36·43 | 45·80 | 48·82 |
| 0·42 | 0·48 | 0·49 | 0·45 | 0·46 | 0·75 |
| 1·38 | 0·84 | 0·80 | 1·01 | 0·89 | 0·85 |
| 0·20 | 0·21 | 0·29 | 0·34 | 6·05 | 8·37 |
| 14·71 | 15·60 | 18·06 | 20·08 | 23·01 | 24·74 |
| 2·88 | 2·79 | 3·20 | 3·30 | 3·89 | 3·81 |
| 0·60 | 0·66 | 0·69 | 0·82 | 0·81 | 0·81 |
| 4·38 | 4·76 | 4·87 | 5·36 | 5·70 | 5·73 |
| 3·96 | 4·26 | 4·52 | 5·07 | 4·99 | 3·76 |
| 23·51 | 31·41 | 25·63 | 26·49 | 28·49 | 27·17 |
| 60·78 | 70·93 | 70·29 | 76·99 | 90·94 | 93·70 |
| 20·49 | 23·49 | 30·19 | 19·80 | 43·52 | 18·47 |
| 121·62 | 131·211 | 133·61 | 124·74 | 144·09 | 151·08 |
| 142·11 | 154·70 | 163·80 | 144·54 | 187·61 | 169·55 |
| 202 89 | 225·63 | 234·09 | 221·53 | 278·55 | 263·25 |
| 38·40 | 39·18 | 39·96 | 40·77 | 41·50 | 42·50 |

apprasial, 1972, Table 18·6.

# 4. தமிழக மாநிலச் செலவு

தனியார் நிதியியலுக்கும் அரசின் நிதியியலுக்கும் உள்ள முக்கிய வேறுபாடு செலவினங்களைப் பொறுத்துள்ளது. தனியார் நிதியியலில் தனி நபர் வருமானம் செலவின் அளவை நிர்ணயிக்கும். அரசு நிதியியலில் அரசின் வருவாய்க்கும், செலவினங்களுக்கும் எவ்வித தொடர்பும் இன்றி இருப்பதே அதன் சிறப்பு அம்சமாகும். இன்று பல அரசுகள் தலையிடாக் கொள்கையைக் கைவிடுத்துப் புதிய புரட்சிகரமான கொள்கைகளைக் கொண்டு பொருளாதாரச் சமுதாய வளர்ச்சி காண முனைந்துள்ளன. இதனால், அரசின் நிதி ஆண்டுதோறும் அதிக அளவில் செலவிடப்படுகின்றது. இத்தகைய பொதுச் செலவுகள் மத்திய–மாநில, தல அரசுகளால் மக்களின் பாதுகாப்பிற்காகவோ சமுதாய முன்னேற்றத்திற்காகவோ மேற்கொள்ளப்படலாம். பொதுநிதியியல் நிபுணர் டாக்டர், டால்டன் பொதுச் செலவைப் பின்வருமாறு வகைப் படுத்தியுள்ளார்.

(அ) நாட்டின் குடியரசுத் தலைவருக்கான செலவும் அயல் நாட்டுத் தூதரகச் செலவும்.

(ஆ) உள்நாட்டு நிர்வாகச் செலவு.

(இ) உள்நாட்டுப் பாதுகாப்பிற்காகக் காவல்துறைக்கும் மற்ற நாடுகளின் வன்முறைத்தாக்குதலில் இருந்து பாதுகாக்கும்இராணுவத்தைப் பராமரிக்கவும் செலவு.

(ஈ) நீதி நிர்வாகச் செலவு.

(உ) நாட்டின் வேளாண்மை, வாணிபம், தொழில் துறை முன்னேற்றத்திற்கான செலவு.

(ஊ) சமுதாய முன்னேற்றத்திற்காகவும், கல்வி, பொது நலம், சமூகப் பாதுகாப்புத் திட்டங்களுக்குமான செலவு.

(எ) பொதுக்கடன் கழிவுநிதிச் செலவும் வட்டிச் செலவும்.
டாக்டர் டால்டனின் பொதுச்செலவு விளக்கத்தைத் திருமதி ஹிக்ஸ் எளிமையான முறையில் பின்வருமாறு வகைப்படுத்தி யுள்ளார்.

(1) பாதுகாப்புச் செலவு.
(2) நிர்வாகச் செலவு.
(3) பொருளாதார முன்னேற்றச் செலவு.

பத்தொன்பதாம் நூற்றுண்டில் வாழ்ந்த செருமானிய பொருளியல் வல்லுநர் அடால்ப் வேக்னர் அரசாங்க நடவடிக்கை களின் வளர்ச்சியை 'அரசுத்துறைப் பணிப் பெருக்க விதி' (Law of increasing state activities) யின் மூலம் விவரித்தார்,

பல்வேறு நாடுகளையும் பல்வேறு காலங்களையும் விரிவான அளவில் ஒப்பிட்டுப் பார்க்கும்போது, முன்னேற்றம் அடைந்த மக்கள் சமுதாயங்களில் மைய அரசு, தல அரசு ஆகிய இரண்டின் நடவடிக்கைகளுமே தொடர்ந்து வளர்கின்றன என்பது தெள்ளத் தெளிய விளங்குகின்றது. இந்த வளர்ச்சி பரந்து பட்டும், தொடர்ந்தும் காணப்படுகின்றது. மைய அரசுகளும், தல அரசு களும் தொடர்ந்து புதிய பணிகளை மேற்கொள்வதோடு, பழைய பணிகளை முன்னிலும் திறமையாக இயக்கியும் வருகின்றன. இப்படி இவ்விரு அரசுகளும் மக்களின் பொருளியல் தேவைகளை விரிவான அளவிலேயும் முன்னைவிட மனநிறைவு அளிக்கத்தக்க முறையிலும் நிறைவேற்றி வருகின்றன.

பல இணைப்பாட்சி நாடுகளில் மைய அரசின் செலவையோ மாநில அரசின் செலவின் போக்கையோ ஆயும்போது 19ஆம் நூற்றுண்டின் வேக்னர் விதி இன்றும் நடைமுறைக்கு ஒத்ததாக இருப்பது காணக்கிடக்கின்றது. இந் நாடுகளில் நாட்டின் பொதுப் பணிகளும், அவற்றின் செயலாக்கங்களும் வளர்ச்சி யடைந்து கொண்டே இருக்கின்றன. இந்த நாடுகளில் அரசின் பணிகள் வளரக் காரணங்கள் பல உண்டு.

1. சேமநல அரசு : மக்கள் நலனைக் கருதி இன்றைய சேமநல அரசுகள் பல சமூகக் காப்பீடு, முதியவர் உதவி, வேலையின்மைக் காப்பீடு, சுகாதாரக் காப்பீடு, குடும்ப உதவித் திட்டம் போன்ற வற்றின் மூலம் சமுதாயத்திற்கு உதவி புரிகின்றன. இத்தகைய அரசுகளைச் சேமநல அரசு (Welfare state) என்று கூறுகின்றனர். இத்தகைய அரசை அமைக்கப் பன்னாட்டவரும் விரும்புதல் இயல்பு.

2. உள்நாட்டுப் பாதுகாப்பு : 19ஆம் நூற்றாண்டு முதல் உள் நாட்டில் சட்டம் ஒழுங்கைப் பராமரித்து நிலைநாட்ட இன்றைய அரசுகள் காவல் துறைக்கும், நீதித் துறைக்கும் அதிகம் செலவு செய்கின்றன. பின்தங்கிய நாடுகள் பொருளியல் முன்னேற்றம் காண உள்நாட்டு அமைதி இன்றியமையாததாதலால் காவல் துறைச் செலவு தவிர்க்க முடியாதது.

3. போர்ச் செலவும் போரினை எதிர்நோக்கி அதற்காக மேற் கொள்ளும் செலவும் :—இரண்டு உலகப் பெரும் போர்களுக்குப் பின்பும் உலக நாடுகளிடையே மனக் கசப்பு மிகுந்து கிடக் கின்றது. மேலும், நாடுகள் பகை யுணர்வு பாராட்டுவதால் அதற்கு வேண்டிய பாதுகாப்புச் செலவும் மிகுந்து கொண்டு செல்கின்றது. வளர்ச்சியடையாத நாடுகள் வளர்ச்சிக்கான நிதியைப் பெருக்க இயலாவிட்டாலும் இராணுவச் செலவை மேற்சொன்ன காரணங்களால் குறைப்பதில்லை.

4. மக்கள் தொகை வளர்ச்சியும் நகர்ப்புற வளர்ச்சியும் அரசாங்கச் செலவினைப் பன்மடங்கு உயர்த்தி உள்ளது. நாட்டின் மக்கள் தொகை பெருகுவதால் பல புதிய தொழிற் செறிவுள்ள நகரங்கள் தோன்றியுள்ளன. இப்பகுதியில் மக்கள் நலன் கருதிப் பல மருத்துவ இல்லங்களையும் விளையாட்டு அரங்கங் களையும் அரசாங்கம் அமைக்கின்றது. அரசின் பணிகள் வளர் வதற்கு மக்களாட்சியும் மற்றொரு காரணமாகும். இவ்வாட்சியில் மக்கள் தலைவர்கள் பணிவிடைச் செலவு, நாடாளுமன்ற நிர்வாகச் செலவு, போன்ற பல செலவினங்கள் உண்டு. மேலும், பொது விலைவாசி உயர்வதால் அரசின் செலவு உயர்கின்றது. இந்த நாடுகள் பல உலகமன்றங்களில் பங்கு கொள்வதற்காகவும் நிறையச் செலவிடவேண்டியுள்ளது.

தமிழகத்தில் பொதுச் செலவு உயரக் காரணங்கள் 1920-க்கு முன்னர் பொதுச் செலவு பற்றியோ பொதுச் செலவின் போக்கினைப் பற்றியோ எவ்வித முக்கியத்துவமும் அளிக்கப்பட வில்லை. 1920-க்குப் பிறகு மாநிலப் பணிகள் அதிகரித்ததால் மற்றைய மாநிலங்களைப் போலவே தமிழக மாநிலத்தின் செலவும் உயர்ந்துள்ளது.

சென்னை மாநிலச் செலவுப் போக்கினைக் காணும்போது 1940-க்கு பின்னர் அரசாங்கச் செலவு மிகவும் உயர்ந்துள்ளது. இதற்கு ஒரு முக்கிய காரணம் நாட்டில் ஏற்பட்ட பண வீக்கமும், பொதுவிலை உயர்வுமாகும். வாழ்க்கைத்தரச் செலவுக்குறி எண்

1939 முதல் 1947 வரை மட்டும் 289 எண்களாக உயர்ந்துள்ளது. 1939 முதல் 1945 வரை ஏற்பட்ட போர்க்காலத்தில் உள்நாட்டுப் பாதுகாப்புச்செலவு பல மடங்கு உயர்ந்துள்ளது. போரினால் சீரழிந்த இந்தியப் பொருளாதாரத்தை மாற்றியமைக்கவும்,

| ஆண்டு | வருமானம் | வருமான உயர்வு சதவீதம் | செலவு | செலவு உயர்வு சதவீதம் |
|---|---|---|---|---|
| | | ரூ. இலட்சத்தில் | | |
| 1920–21 | 1,619 71 | — | 1,479·63 | — |
| 1930–31 | 1,683·93 | 4% | 1,789·65 | 21% |
| 1940–41 | 1,867·51 | 7% | 1,754·75 | — |
| 1950–51 | 5,521·25 | 205% | 5,557·23 | 217% |

சமுதாயப் பொருளாதார முன்னேற்றப் பணிகளை மீண்டும் தொடரவும் அரசாங்கம் அதிக செலவு மேற்கொண்டுள்ளது.

சுதந்திரமடைந்தபின் மாநில அரசுகளின் பணிகளை மூன்று வகையாக்கலாம்.

(1) நிர்வாகத்துறைப் பணிகள்.

(2) சமுதாயப் பணிகள்.

(3) பொருளாதார முன்னேற்றப் பணிகள். சென்னை மாநில அரசு 1920 முதல் 1950 வரை மேற்கூறிய முக்கிய அரசாங்கப் பணிகளைச் செய்ய மேற்கொண்ட செலவு பின் வருவாறு.

எல்லாத் துறைகளிலும் மாநில அரசின் செலவு உயர்ந்தது. பாதுகாப்புத் துறைக்காக அரசாங்கம் செய்த செலவு மொத்தச் செலவில் சராசரியாக 42%ம், இரண்டாவதாக முன்னேற்றச் செலவும், சமுதாயப் பணிகளுக்கான செலவும் மொத்தச் செலவில் அதிகமான பங்கைப் பெற்றுள்ளன. இது தவிர நிர்வாகத்திற்

| ஆண்டு | மொத்த செலவு | பாதுகாப்பு துறை | மொத்த செலவில் பாதுகாப்புத் துறைச் செலவு (சதவீதம்) | சமுதாயப் பணிகள் செலவு | மொத்தச் செலவில் சமுதாயச் செலவு (சதம்) | முன்னேற்றச் செலவு | மொத்தச் செலவில் முன்னேற்ற செலவு சதம் | மற்றவை | மொத்த செலவில் மற்றவைக்கு செய்த செலவு சதம் |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| | ரூ. இலட்சத்தில் | | | | | | | | |
| 1920–21 | 1,479·60 | 647·71 | 44% | 200·88 | 14% | 230·95 | 16% | 400·06 | 26% |
| 1925–26 | 1,595·27 | 732·51 | 46% | 280·25 | 18% | 242·62 | 15% | 339·79 | 21% |
| 1930–31 | 1,789·68 | 813·01 | 45% | 432·94 | 24% | 437·59 | 25% | 106·49 | 6% |
| 1935–36 | 1,599·36 | 780·89 | 49% | 372·48 | 23% | 406·38 | 25% | 39·62 | 3% |
| 1940–41 | 1,754·75 | 866·70 | 49% | 416·31 | 23% | 391·50 | 23% | 80·24 | 5% |
| 1945–46 | 4,798·74 | 1346·97 | 28% | 694·20 | 15ஐ | 769·96 | 16% | 1987·61 | 41% |
| 1950–51 | 5,557·23 | 2264·26 | 41% | 1376·32 | 25% | 1713·73 | 30% | 203·52 | 4% |

காகவும் மாநில வரி வசூல் நிர்வாகத்திற்காகவும் அரசாங்கம் அதிகமாகச் செலவிட்டுள்ளது.

| ஆண்டு | வரிவசூல் நிர்வாகச் செலவு | பொதுநிர்வாகச் செலவு |
|---|---|---|
| | ரூ. இலட்சத்தில் | |
| 1920–21 | 231·62 | 24·21 |
| 1925–26 | 117·21 | 226·79 |
| 1930–31 | 111·31 | 283·94 |
| 1935–36 | 100·35 | 280·08 |
| 1940–41 | 170·16 | 269·29 |
| 1945–46 | 246·55 | 427·24 |
| 1950–51 | 435·89 | 687·77 |

1950–51-க்கு முன்னர் மாநில அரசின் பணிகள் தற்போதையதைவிடக் குறைந்திருந்தது. மேலும், ஆட்சிப் பொறுப்பிற்குட்பட்ட எல்லையும் குறைவே.

1935ஆம் ஆண்டு இயற்றப்பட்ட இந்திய அரசியல் சட்டம் மாநில அரசின் பணிகளை மேலும் உயர்த்தியது. இரண்டாவது உலகப் பெரும் போருக்குப் பின் சீரமைப்பு முயற்சியில் மாநில அரசும் மைய அரசும் ஒன்றியியங்குகின்றன. உலகப்போரின்போது மாநில அரசுகள் எவ்வித செலவுக் குறைப்பு நடவடிக்கைகளையும் மேற்கொள்ளவில்லை. விடுதலை அடைந்த பின்னர் இந்தியக் குடியரசு 'திட்டமிட்ட பொருளாதார வளர்ச்சி' அடைய விரும்பியது. மக்களாட்சி நாடுகளில் திட்டமிட்ட முறையில் முன்னேற்றம் அடைய விரும்பிய நாடு இந்தியாவே. கூட்டரசுகளிலும் இம் முறையைப் பின்பற்றும் நாடு இந்தியாவேயாகும். இந்திய அரசியல் சட்டத்தில் திட்டமிடுதல் மாநில மைய அரசுகளின் ஒருங்கிணைந்த பட்டியலில் காணப்படுவதால் திட்ட அமைப்பிலும் திட்டச் செலவிலும் இரு அரசுகளுக்கும் பங்கு உண்டு. இன்றைய தமிழக அரசின் செலவினங்களின் எண்ணிக்கை 47க்கு மேல் உள்ளது. மேலும், மக்கள் வாழ்க்கைத் தரத்தை உயர்த்தக்கூடிய பணிகளான உணவு உற்பத்தி, தொழில் வளர்ச்சி,

மக்கள் நலம், கல்வி, சமுதாய முன்னேற்றம் ஆகியவற்றிற்கு மாநில அரசே செலவினை மேற்கொள்ள வேண்டும். மக்களின் பொருளாதாரத் தேவைகளை விரிவான அளவிலே, மனநிறைவு அளிக்கக்கூடிய வகையில் நிறைவேற்றுவதே மாநில அரசுகளின் தலையாய பணியாகும். இதற்கான செலவுகளையும் இந்த அரசே மேற்கொள்கின்றது.

1920 முதலே சென்னை மாநில அரசு பொதுக்கல்வி, மருத்துவ உதவி, பொது மக்கள் நலம்போன்றவற்றிற்காக அதிக செலவினைச் செய்து வருகின்றது.

1920 முதல் 1957 வரை மேற்கூறிய மாநிலப் பணிகளுக்கான செலவு பின்வருமாறு

| ஆண்டு | கல்விக்கான செலவு | மருத்துவத் துறைச் செலவு | பொதுச் சுகாதாரச் செலவு | மொத்தம் |
|---|---|---|---|---|
| | | ரூ. இலட்சத்தில் | | |
| 1920–21 | 133·00 | 44·10 | 23·78 | 200·88 |
| 1925–26 | 187·44 | 59·66 | 33·15 | 280·25 |
| 1930–31 | 300·18 | 97·70 | 35·06 | 432·94 |
| 1935–36 | 255·19 | 93·03 | 24·26 | 372.48 |
| 1940–41 | 279·03 | 101·65 | 35·63 | 416·31 |
| 1945–46 | 459·12 | 180·00 | 54·48 | 694·20 |
| 1950–51 | 995·08 | 283·57 | 97·67 | 1,376·32 |

பொதுக்கல்விக்கான செலவு 7 மடங்கும்,

மருத்துவத் துறைச் செலவு 6 மடங்கும்,

பொதுச் சுகாதாரச் செலவு 4 மடங்கும்.

உயர்ந்துள்ளது. விடுதலைக்குப்பின் திட்டப் பணிகளின் பெருக்கத்தால் மாநிலங்களின் பொதுச் செலவும் அதிகரித்துள்ளது. 1937–38-ல் சென்னை மாநிலத்தின் பொதுச் செலவு 15·82 கோடியிலிருந்து 1970–71-ல் 296·98 கோடியாக உயர்ந்தது.

| மாநிலம் | | 1951 மொத்தச் செலவு | முன்னேற்றச் செலவு | மொத்தச் செலவில் முன்னேற்றச் செலவு (சதம்) | 1965 மொத்தச் செலவு | முன்னேற்றச் செலவு | மொத்தச் செலவில் முன்னேற்றச் செலவு |
|---|---|---|---|---|---|---|---|
| | | | | ரூ. கோடியில் | | | |
| ஆந்திரா | ... | 12·1 | 6·0 | 50 | 40·7 | 26 4 | 65 |
| அஸ்ஸாம் | ... | 12·4 | 6·4 | 52 | 49·9 | 31·3 | 62 |
| பீஹார் | ... | 8·5 | 4·5 | 54 | 22·0 | 12·9 | 58 |
| பம்பாய் | ... | 15·7 | 7·6 | 49 | 49·6 | 25·8 | 52 |
| கேரளா | ... | 14·1 | 7·2 | 51 | 43·5 | 30·7 | 71 |
| சென்னை | ... | 11·0 | 6·3 | 57 | 45·5 | 28·1 | 62 |
| மைசூர் | ... | 19·0 | 11·1 | 58 | 42·2 | 27·2 | 64 |
| ஒரிசா | ... | 7·4 | 4·2 | 56 | 46·5 | 28·0 | 60 |
| பஞ்சாப் | ... | 12·9 | 5·1 | 40 | 52·1 | 29·2 | 56 |
| இராஜஸ்தான் | ... | 9·8 | 4·0 | 40 | 38·0 | 22·2 | 58 |
| உத்தரப் பிரதேசம் | ... | 8·8 | 4·1 | 47 | 28·7 | 16·2 | 56 |
| மேற்கு வங்காளம் | ... | 14·2 | 6·3 | 45 | 42·2 | 23·4 | 55 |
| மத்தியப் பிரதேசம் | ... | 8·7 | 4·2 | 48 | 32·6 | 20·4 | 62 |
| எல்லா மாநிலங்கள் | ... | 11·6 | 5·8 | 50 | 38·9 | 22·9 | 59 |

மூலம் ; R. B. I. Bulletin.

மாநில அரசுகள் மக்களிடையே மாண்புடன் விளங்க உதவுவது அரசின் சமூகப் பொருளாதாரக் குறிக்கோள்களாகும். இக்குறிக்கோள்களே அரசுகளின் செலவின் அளவை நிர்ணயிக்கின்றன.[1] மக்கள் செலுத்தும் வரிக்காக அரசிடம் எதிர்பார்க்கப் படுவது சேம நலப் பணிகளாகும். மாநிலங்கள் பலவற்றில் வருவாய்ச் செலவும் மூலதனச் செலவும் உயர்ந்துள்ளது. வருவாய்ச் செலவினை நோக்கும்போது இந்திய மாநிலங்கள் பலவற்றில் முன்னேற்ற வகைச் செலவு அதிகபாக உயர்ந்துள்ளது.

1951 முதல் 1966 வரை மாநிலங்களின் மொத்தச் செலவு 3½ மடங்கு உயர்ந்துள்ளது. முன்னேற்றத்திற்கான செலவு 5 மடங்கும், மற்றைய செலவுகள் 4 மடங்கும், உயர்ந்துள்ளன. இச் செலவுகளை அவசியமற்றது எனக் கருத முடியாது. தமிழகத்தில் இத்தகைய முன்னேற்றத்திற்குதவாத செலவினங்கள் உயரப் பலகாரணங்கள் உண்டு.

1. மாநிலங்களின் ஒருங்கிணைப்பும் மாற்றமைப்புச் செலவும்
2. பஞ்சம், வெள்ளம், அவசர நிலைச்செலவு.
3. மாநில ஊழியர் ஊதிய உயர்விற்கான செலவு.
4. திட்டத்திற்காக மாநிலங்கள் மேற்கொள்ளும் செலவு.
5. மாநிலக் கடனுக்காகச் செலுத்தப்படும் வட்டிச் செலவு.

முதலாவது திட்ட காலத்தில் தமிழக அரசு, கடைசி ஆண்டைத்தவிர மற்ற ஆண்டுகளில் பற்றுக்குறை நிதியாக்க முறையிலே வரவு செலவு திட்டம் அமைத்தது.

| ஆண்டு | வருவாய் | செலவு | துண்டு விழும் தொகை |
|---|---|---|---|
| | | ரூ. இலட்சத்தில் | |
| 1952–53 | 5,842·32 | 6,840·70 | 998·39 |
| 1954–55 | 4,332·88 | 4,724·52 | 391·64 |
| 1955–56 | 5,209·48 | 5,455·88 | 246·37 |
| 1956–57 | 5,622·88 | 5,779·73 | 156·85 |
| 1957–58 | 6,256·36 | 5,915·02 | 341·34 |

[1] Kher, S. P. Mysore Government Finance, Bombay 1967, p. 39.

முதல் திட்டத்தில் செலவு உயரக்காரணங்கள். பெரு விருப்பத்தோடு தொடங்கிய முதல் ஐந்தாண்டுத் திட்டம் வெற்றியடைய மாநில அரசு அதிகம் செலவு செய்ய வேண்டியிருந்தது. 1952-ல் நிர்வாகச்செலவு மொத்த வருவாயில் 70% சதவீதத்திற்கு மேல் உயர்ந்தது. முன்னேற்றச் செலவைவிட மற்றைய செலவே அதிகம் உயர்ந்தது.

இரண்டாவது திட்டக்காலத்தில் மாநிலச் செலவு திட்டக் குறிக்கோளுக்கு ஏற்ப உயர்ந்தது.

(1) மாநிலத் தேவைக்கேற்ப உற்பத்தி.

(2) உணவு உற்பத்தியில் தன்னிறைவு அடைவது மட்டுமன்றி அவசர காலத்தேவைக்கு உபரி உற்பத்தி.

இரண்டாவது திட்டத்தில், திட்டச்செலவு, ஒதுக்கப்பட்ட செலவினைவிட அதிகமாயிற்று.

| தலைப்பு | திட்டத்தில் ஒதுக்கப் பட்ட அளவு | மொத்தச் செலவு |
|---|---|---|
| | ரூ. கோடியில் | |
| வேளாண்மைத்துறை | 29 | 32 |
| நீர்ப்பாசனம் | 12 | 17 |
| மின்சக்தி | 53 | 79 |
| தொழில் வளர்ச்சி | 10 | 14 |
| போக்குவரத்து | 7 | 5 |
| சமூகப் பொதுப்பணி | 37 | 39 |
| கதர் உற்பத்தி | 4 | — |
| | 152 | 186 |

1957–58-ல் நிர்வாகச் செலவும் சமுதாயப் பணிச் செலவும் மொத்த வருவாயில் 63·60% 1961–62-ல் இத்தொகை 69·75% ஆக உயர்ந்தது. வரி வசூல் செலவு இவ்வாண்டுகளில் மொத்த

## செலவு போக்கு தமிழகம்

| ஆண்டு | வரிவசூல் செலவு | கடன் செலவு | பொது நிர்வாகச் செலவு | காவல் துறை செலவு | மற்றவை | கல்வி செலவு | மருத்துவ செலவு | பொது சுகாதார செலவு | வேளாண்மை கால்நடைச் செலவு | மற்றவை | மொத்தம் |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 61–62 | 3·59 | 5·86 | 7·21 | 6 60 | 2·960 | 23·46 | 6·50 | 2·18 | 5·56 | 37·77 | 101·79 |
| 65–66 | 3·55 | 17·38 | 9·60 | 9·46 | 5·15 | 37·85 | 10·33 | 3·62 | 13·99 | 69·73 | 180·66 |
| 66–67 | 3·94 | 26·75 | 10·12 | 10·50 | 5·86 | 43·86 | 11·73 | 5·02 | 15 18 | 68·47 | 201 43 |
| 67–68 | 4·25 | 30 56 | 10·39 | 11·38 | 5·85 | 53·56 | 12·70 | 5·14 | 16·95 | 82·50 | 233·33 |
| 68–69 | 4·97 | 35·00 | 11·16 | 12·98 | 16 39 | 58·95 | 14 76 | 5·67 | 16·62 | 87·11 | 263·61 |

மூலம் : ஐந்தாவது நிதி ஆணைக் குழு அறிக்கை பக்கம் 171.

வருவாயில் 7·71%ஆக இருந்து 3·53% ஆக குறைந்தது. மாநிலக்கடன் வட்டிச் செலவு மொத்த வருமானத்தில் 3·86% இலிருந்து 5·76%ஆக உயர்ந்தது.

1957 முதல் 1962 வரை வரவு செலவில் உபரி தோன்றியும் மாநிலக்கடன் குறையாமல் ஆண்டுதோறும் உயர்ந்தும் காணப் பட்டது. இதைத் தவிர மாநில அரசு அடிக்கடி ரிசர்வ் பாங்கியிட மிருந்து வழிவகைக் கடனும் அதிகப்பற்றுக் கடனும் பெற்று வந்தது.

| ஆண்டு | வரவு | செலவு | உபரி பற்றுக்குறை | மொத்த கடன் |
|---|---|---|---|---|
| | | ரூ. கோடியில் | | |
| 1957–58 | 62 56 | 59·15 | +3·41 | 144·98 |
| 1958–59 | 69·95 | 68·35 | +1·60 | 147·27 |
| 1959-60 | 81·11 | 80·58 | +0·53 | 179·31 |
| 1960–61 | 92·03 | 91·09 | +0·94 | 202·71 |
| 1961–62 | 92·17 | 101·79 | —9 01 | 230·89 |

தமிழகச் செலவு வளர்ச்சி

| ஆண்டு | மொத்தச் செலவு | வளர்ச்சிப் பணிக்கான செலவு | வளர்ச்சிப் பணிக்கு அல்லாத செலவு |
|---|---|---|---|
| | | ரூ. இலட்சத்தில் | |
| 1961–62 | 101·79 | 63·01 | 38·78 |
| 1962–63 | 121 80 | 80·92 | 40·88 |
| 1963–64 | 134·99 | 87·77 | 47·22 |
| 1964–65 | 151·29 | 99·46 | 51 83 |
| 1965–66 | 180·66 | 119·23 | 61·43 |
| 1966–67 | 201·42 | 125·71 | 75·70 |
| 1967–68 | 233·32 | 143·36 | 89·96 |
| 1968–69 | 263·61 | 162·74 | 100·87 |

மாநிலத் தலாச் செலவு

| மாநிலம் | | தலாச் செலவு | தலா வருமானம் |
|---|---|---|---|
| ஆந்திரா | ... | 39·89 | 361·9 |
| அஸ்ஸாம் | ... | 50·27 | 401·7 |
| பீஹார் | ... | 21·55 | 274·0 |
| குஜராத் | ... | 46·83 | 480·1 |
| ஜம்மு & காஷ்மீர் | ... | 80·61 | 370·8 |
| கேரளா | ... | 42·99 | 388·4 |
| மத்தியப் பிரதேசம் | ... | 32·17 | 351·8 |
| தமிழகம் | ... | 44·36 | 421·1 |
| மஹாராஷ்டிரம் | ... | 49·75 | 574·8 |
| மைசூர் | ... | 41·41 | 377·3 |
| ஒரிஸ்ஸா | ... | 45·52 | 344·8 |
| பஞ்சாப் | ... | 50·27 | 541·7 |
| இராஜஸ்தான் | ... | 37·19 | 324·6 |
| உத்தரப் பிரதேசம் | ... | 27·79 | 370·3 |
| மேற்கு வங்காளம் | ... | 42·54 | 567.8 |

மூலம் ; Quarterly Report of Indian Institute of Public opinion 60.

மாநில அரசுகள் எவ்விதமான தனிச்செலவு கொள்கையையும் பின்பற்றவில்லை. ஆனால், அரசுகளின் தலையாய கொள்கைகள் செலவின் அளவினை நிர்ணயிக்கின்றன. தமிழகத்தின் மூன்றாவது திட்டத்தின் முக்கிய குறிக்கோள்கள்[1].

(1) உணவு உற்பத்தியில் தன்னிறைவு அடைதல்.
(2) கட்டாய இலவச உயர்தரக் கல்வி வழங்குதல்.

[1] III 'Five year plan Madras'.

(3) மருத்துவ மனைகளைப் பெருக்குதல்.

(4) பின்தங்கிய வகுப்பினரது வாழ்க்கைத் தரத்தை உயர்த்துதல்.

மூன்றும் திட்டத்தில் தமிழகத்தின் திட்டச் செலவு ரூ. 291 கோடி. அத்தொகையில் உதவி மானியங்கள் கடன் மூலம் ரூ.190 கோடியை மத்திய அரசிடமிருந்து பெறும். எஞ்சிய 101 கோடிச் செலவினை மாநில அரசு தனது வரி வருமானத்திலிருந்து செலவிட வேண்டும். வேளாண்மைத் துறைக்கும், நீர்ப்பாசன வசதி பெருக்கவும் ரூ. 62·16 கோடியும், ரூ. 127·61 கோடியும் முறையே செலவிடத் திட்டமிடப்பட்டது. மூன்றும் திட்டத்தில் தமிழக அரசின் செலவு 180 கோடி. இது இவ்வரசு செலவிட எதிர்பார்த்ததை விட 79 கோடி உயர்ந்தது. இவ்வாறு மாநில அரசுகள் திட்டத்தைச் செயல்படுத்த அதிக செலவை மேற்கொள்ள வேண்டியுள்ளது.

மூன்றுவது திட்டகாலத்திலும் பின்னர் ஓராண்டுத் திட்டங்களின் போதும் தமிழக அரசு முன்னேற்றத்திற்காகவும் மற்றத் துறைகளுக்காகவும் செய்த செலவு பின்வருமாறு.

| ஆண்டு | மொத்தச் செலவு | முன்னேற்றச் செலவு | மற்றைய செலவு |
|---|---|---|---|
| | | ரூ. கோடியில் | |
| 1961–62 | 101·79 | 63·01 | 38 78 |
| 1962–63 | 121·80 | 80·92 | 40·88 |
| 1963–64 | 134·99 | 87·77 | 47·22 |
| 1964–65 | 151·29 | 99·46 | 51·83 |
| 1965–66 | 180·66 | 119·23 | 61·43 |
| 1966–67 | 201·42 | 125·72 | 75·70 |
| 1967–68 | 233 32 | 143·36 | 89·96 |
| 1968–69 | 263·61 | 162·74 | 100 87 |

தமிழக அரசு மொத்தச் செலவில் அதிகமான தொகையை முன்னேற்றத்திற்காகவே செலவு செய்துள்ளது. 1961–62-ல் மொத்தச் செலவில் 63 சதம் முன்னேற்றச் செலவாகும். 1968–69-ல் 70 சதமாக உயர்ந்தது. பல்வேறு துறைகளுக்கும் மாநில அரசுகள் செய்த செலவு பின்வருமாறு :

வரி வசூல் செலவு :

நிறுவனவரி நீங்கலாக ஏனைய வருமான வரிகள் மைய அரசின் வசம் உள்ளன. வேளாண்மை வருமானவரி, வசூல் செய்யச் செலவாகும் நிர்வாகச் செலவும், மற்றும் பொது விற்பனைவரி, ஏனைய வரிகளும் தீர்வைகளுக்குமான நிர்வாகச் செலவு அதிகமாக உயர்ந்துள்ளது. வருமானம் உயரச் செலவும் உயரும் என்ற பார்க்கின்சன் விதி (Parkinson law) தமிழகத்திற்கு முற்றும் பொருந்துகின்றது. நிலங்களை அளந்து வரியைத் திட்டம் செய்து பதிவு செய்தல், நில அளவைப் பணியாளர்களுக்குச் செய்யப்படும் செலவு, பொது விற்பனை வரிச் சட்டம் முதலியவற்றைச் செயல் படுத்த ஆணையாளர்கள், வணிகவரி அதிகாரிகளுக்கு அளிக்கப்படும் ஊதியம், விற்பனைவரி கொடாமல் ஏய்ப்பதைத் தடுக்கச் சோதனைச் சாவடிகளில் பணிபுரியும் பணியாளர்களுக்கான செலவு, ஆகியவை வரிவசூல் தலைப்பில் சேரும். இவற்றைத் தவிர 1939ஆம் ஆண்டு மோட்டார் வண்டிகள் சட்டத்தையும் 1952 தமிழ்நாடு மோட்டார் வண்டிகள் (பயணிகள், சரக்குகள், வரிவிதிப்புச் சட்டத்தைச் செயல்படுத்தப் போக்குவரத்து ஆணையாளர் துறை செலவும் மற்றைய தீர்வைகள் வசூல் செலவும் வரிவசூல் மீதான செலவு தொடர்ந்து உயர்ந்து கொண்டிருக்கின்றது. நிதி வசூல் செலவு மற்றைய வரிவசூல் செலவைவிட அதிகமாக உயர்ந் துள்ளது.

| | 1966–67 | 67–68 | 68–69 | 69–70 | 70–71 |
|---|---|---|---|---|---|
| நிறுவன வரிநீங்க மற்ற வருமான வரி செலவு | 14·43 | 11·10 | 16·48 | 23·89 | 23·93 |
| நிலவரி | 119·85 | 131·10 | 1·69 | 1·91 | 1·89 |
| வண்டிவரி | 33·24 | 31·57 | 34·61 | 38·56 | 42·5 |
| விற்பனைவரி | 120·70 | 133·06 | 1·56 | 170·50 | 187·67 |
| முத்திரைதாள்கள் | 19·31 | 26·44 | 27·32 | 30·86 | 32·50 |
| பத்திரப் பதிவுக் கட்டணம் | 70 36 | 70·58 | 82·17 | 89·59 | 140·45 |

வளர்ச்சிப் பணி நீங்கலாக ஏனைய இனங்கள் மீதான செலவு :

மாநிலப் பொதுச் செலவில் வளர்ச்சிப்பணி நீங்கலாக ஏனையவற்றின்மீது செலவிடும் தொகை அதிகமான அளவாக

| | | 66–67 | 67–68 | 68–69 | 69–70 | 70–71 |
|---|---|---|---|---|---|---|
| | | | | ரூ. இலட்சத்தில் | | |
| 1. | கடனுக்குரிய வட்டி முதலிய செலவு | 1,986·53 | 2,28·35 | 2,472·00 | 3,867·12 | 3,074·00 |
| 2. | கடன் குறைப்பு (அ) தவிர்ப்பு நிதி ஒதுக்கம். | 688·86 | 772·04 | 855·00 | 857·00 | 968·00 |
| 3. | மாநில சட்டமன்றமும் தேர்தல்களும். | 73·95 | 61·18 | 29·19 | 45·61 | 65·62 |
| 4. | பொது நிர்வாகம் | 1,011·88 | 1,038·72 | 1,096 18 | 11·23 | 1,217·00 |
| 5. | நீதி நிர்வாகம் | 218·83 | 240·09 | 260·00 | 214·00 | 275·00 |
| 6. | சிறைச்சாலைகள் | 195·17 | 174 81 | 176·00 | 198·00 | 183·00 |
| 7. | காவல் துறைகள் | 1,049·46 | 1,137·94 | 1.304·00 | 1,313 00 | 1,319·00 |
| 8. | பல்வகை துறைகள் | 98·22 | 108·28 | 1,070·00 | 1,121·00 | 860·00 |
| 9. | பஞ்சம் தணிப்பு | 50 00 | 50·00 | 50·00 | 1,366·00 | 66·00 |
| 10. | ஓய்வு ஊதியம் | 350·00 | 361·00 | 405·00 | 141·00 | 422·00 |
| 11. | அரசியல் தியாகிகளுக்கான ஓய்வு தொகைகளும் மன்னர் மானியமும் | 2·47 | 3·02 | 3 65 | 2 14 | 2·65 |
| 12. | ஓய்வு ஊதியத் தொகையை மொத்தமாக்குதல் | 8·66 | 7 76 | 12·43 | 6·28 | 10 46 |
| 13. | எழுது பொருள் அச்சுத்துறை | 196 99 | 215·81 | 252 70 | 248 24 | 25·27 |
| 14. | பல்வகை | 387·03 | 483·98 | 566·49 | 690 59 | 823 49 |
| 15. | மற்ற இழப்பீடுகளும் ஒதுக்கீடுகளும் | 592·94 | 646·06 | 769·06 | 776·06 | 776·53 |
| 16. | தேசிய நெருக்கடிக்கு தொடர்புள்ள செலவு | 2·38 | 0·51 | 0·56 | — | — |

| | | 66–67 | 67–68 | 68–69 | 69–70 | 70–71 |
|---|---|---|---|---|---|---|
| | | | | ரூ. இலட்சத்தில் | | மதிப்பீடு |
| 1. | அறிவியல் துறைகள் ... | 8·19 | 8·56 | 9·30 | 10·12 | 10·01 |
| 2 | கல்வி ... | 4,385·62 | 5,355·50 | 5,751·48 | 6,574·23 | 6.683·09 |
| 3. | மருத்துவம் ... | 1,173·17 | 1,270·31 | 1,460·28 | 1.681·08 | 1,586·75 |
| 4. | பொது சுகாதாரம் ... | 502·16 | 519·25 | 595·60 | 748·06 | 868·85 |
| 5, | வேளாண்மை ... | 1,180·54 | 1,339·92 | 1,835·06 | 1,583·48 | 1.591·78 |
| 6. | கால்நடை வளர்ச்சி ... | 337·08 | 355·41 | 357·71 | 350·65 | 381·65 |
| 7. | கூட்டுறவு ... | 254·39 | 265·57 | 404·67 | 381·57 | 398·40 |
| 8. | தொழில்கள் ... | 251·07 | 356·39 | 362·12 | 426·54 | 458·73 |
| 9. | சமுதாய வளர்ச்சிப்பணிகள் ... | 640·66 | 638·89 | 609·31 | 607'92 | 604·89 |
| 10. | தொழிலாளர் வேலைவாய்ப்பு ... | 204·05 | 191·67 | 196·17 | 77·91 | 81 50 |
| 11 | பல்வகை சமூக வளர்ச்சி ... | 689·27 | 784·93 | 1,106 61 | 1,237·96 | 1,408·37 |
| 12. | பாசனம். ... | 222 19 | 311·18 | 378·89 | 424·33 | 321·56 |
| 13. | பொதுப்பணிகள் ... | 1,135 27 | 1,193·38 | 1,115·18 | 1,629·01 | 1,422 04 |
| 14. | பொதுப்பணிக்கான மூலதனச் செலவு ... | 4·37 | 7·42 | 12 46 | 61·22 | 43·71 |
| 15. | சாலைப்போக்குவரத்து ... | 986·76 | 1,214·16 | 1,616·60 | 1,790·58 | 1,950·8 |
| 16. | காட்டு வளம் ... | 147·24 | 169·59 | 219·0 | 194·23 | 198·21 |

உள்ளது. கடந்த ஐந்து ஆண்டுகளில் இச் செலவு 3 மடங்காக உயர்ந்துள்ளது. வளர்ச்சிப்பணி நீங்கலாக ஏனைய இனங்கள் மீதான செலவு 95ஆம் பக்கத்தில் கொடுக்கப்பட்டுள்ளது. கடனுக்கான வட்டி கணிசமான தொகையாகக் காணப்படுகிறது. பொதுக் கடன், ஏனைய பொறுப்புகளின் மீதான வட்டி, தாற்காலிகக் கடன்மீது வட்டி, நிதியிடப்படாத கடன்மீது வட்டி, சேமிப்பு வங்கி வைப்புத் தொகை, மாநில வருங்கால வைப்பு நிதிகள் இதர பொறுப்புகள் மீது வட்டி, இவை தவிர மத்திய அரசிடம் பெறப்பட்ட கடன் மீதான வட்டி, மற்றக் கடன்கள் மீதான வட்டிச் செலவுகள் வளர்ச்சிக்கு உதவா. ஆனாலும், அச் செலவினைத் தவிர்க்க முடியாது.

வளர்ச்சிப் பணிக்கான செலவு கடந்த திட்ட காலத்தில் அதிகமாக உயர்ந்துள்ளது. இந்திய விடுதலைக்கு முன் இச் செலவுகள் அதிகமில்லை. ஆனால், முதல் திட்டம் தொட்டுத் தமிழக அரசின் செலவு அதிகரித்திருக்கிறது. சமுதாய வளர்ச்சிப் பணிகள் பல மாநில அதிகாரப் பட்டியலில் காணப்படுகின்றன. அவற்றுள் முக்கியமானவை, (1) கல்வி, (2) பொதுச் சுகாதாரம், (3) தொழில் வளர்ச்சி, (4) சமுதாயத் திட்டங்கள், (5) நீர்ப் பாசனம், (6) பொதுப் பணிகள், (7) சாலைப் போக்குவரத்து கடந்த ஐந்து ஆண்டுகளில் மாநில அரசு மேற்கூறிய வளர்ச்சித் தலைப்புகளுக்காக மேற்கொண்ட செலவு 96ஆம் பக்கத்தில், கொடுக்கப்பட்டுள்ளது.

வளர்ச்சிப் பணித் தலைப்பின் கீழ் வரும் செலவுகளில் முக்கிய மானவை கல்வித்துறைச்செலவு, மருத்துவம், பொதுச்சுகாதாரம் வேளாண்மை, தொழில்கள், சமுதாய வளர்ச்சித் திட்டங்கள், பொதுப்பணிகள், சாலைப் போக்குவரத்து முதலியன. மேற்கூறிய இனங்களின் மீதான செலவைப் பிரித்து ஆராய்வோம்.

கல்வி:—

இப்பெருந்தலைப்பின் கீழ் அரசு மேற்கொள்ளும் உயர்நிலைக் கல்விசசெலவு, பல்கலைக்கழகக் கல்விச்செலவு, தொழில் நுட்ப கல்விச்செலவு, ஆரம்பக்கல்வி, சிறப்புக்கல்வி, பொதுக்கல்வி முதலியவற்றிற்கான செலவு சேர்ந்துள்ளது.

ஆரம்பக்கல்வியை அரசே நடத்தி வருகின்றது. அதே நேரத்தில் தனியார் ஆரம்பப் பள்ளிகளுக்கு வேண்டிய அளவு மானியங்களும் வழங்கி வருகின்றது. ஆரம்பக் கல்வியைப் பெருக்க உள்ளாட்சி மன்றங்கள் மாநில அரசிடமிருந்து மானியங்கள்

பெறுகின்றன. மேலும், பல ஆரம்பப் பள்ளிகளில் ஆசிரியர்களது ஊதியச்செலவிற்கு மானியங்கள் வழங்கப்படுகின்றன. கடந்த மூன்று ஆண்டுகளில் மாநில அரசு ஆரம்பக் கல்வியைப் பெருக்கச் செய்த செலவு பின்வருமாறு:

| | 1967–68 | 1968–69 | 1969·70 |
|---|---|---|---|
| | | ரூ. இலட்சத்தில் | |
| அரசினர் ஆரம்பப் பள்ளிகள் | 68 26 | 77·57 | 86·92 |
| மற்ற ஆரம்பப்பள்ளிகளுக்குக் கொடுத்த நேரடி மானியங்கள் | 356·10 | 408 13 | 461·52 |
| உள்ளாட்சி மன்றங்களுக்கு ஆரம்பக் கல்விக்கான மானியங்கள் | 2,085·44 | 2,042·99 | 2,240·49 |
| மொத்தம் | 2,509 80 | 2,528 69 | 2,788·93 |

**சிறப்புக் கல்வி:**

ஆரம்பநிலை ஆசிரியர்களுக்குப் பயிற்சி வழங்கும் பள்ளிகளும், பாலர் பள்ளிகளும், பன்மொழிகளில் தேர்ச்சி பெறப் பயிற்சி அளிக்கும் பள்ளிகளும், வர்த்தகப் பள்ளிகளும், சிறப்புக்கல்வி அளிக்கும் பள்ளிகள் எனக் கூறப்படுகின்றன. ஆசிரியப்பயிற்சி பெறும் மாணவர்களுக்கு அரசு உதவித்தொகை வழங்குகின்றது. கடந்த 5 ஆண்டுகளில் சிறப்புக் கல்வியைப் பெருக்க மாநில அரசு மேற்கொண்ட செலவு பின்வருமாறு.

| | 1967-68 | 1968–69 | 1969–70 |
|---|---|---|---|
| | | ரூ. இலட்சத்தில் | |
| அரசினர் சிறப்புப் பள்ளிகள் | 73·82 | 77·92 | 80·33 |
| மற்றச் சிறப்புச் பள்ளிகளுக்கு நேரடி மானியங்கள் | 29·58 | 30·40 | 31·60 |
| உள்ளாட்சி மன்றங்களுக்குச் சிறப்புச் கல்விக்காகச் சிறப்பு மானியங்கள் | — | 0·09 | 0 09 |
| | 103·40 | 108·37 | 112·02 |

**உயர்நிலைப் பள்ளிக் கல்வி :**

அரசு நடத்தும் உயர்நிலைப் பள்ளிகள், ஆங்கிலோ இந்தியருக்கல்லாத உயர்நிலைப் பள்ளிகளின் செலவு, தனியார் உயர்நிலைப் பள்ளிகளுக்கு வழங்கப்படும் மானியங்கள், உள்ளாட்சி நிறுவன உயர்நிலைக் கல்விக்காக வழங்கும் மானியங்கள், உயர்நிலைப் பள்ளிச் செலவில் சேருகின்றன. நகராட்சி மன்றங்கள் நடத்தும் பள்ளிகளுக்கான மொத்தச் செலவில் அரசு வழங்கும் தொகை $66\frac{2}{3}$ சதம். தமிழக அரசு இலவச உயர்நிலைப் பள்ளிக் கல்வி அளிப்பதால் தமிழக அரசின் கல்வித்துறைக்கான செலவு மேன் மேலும் உயர்ந்துகொண்டு செல்கின்றது.

**உயர்நிலைக் கல்வி :**

| | 1967–68 | 1968–69 | 1969–70 | 1970–71 |
|---|---|---|---|---|
| | | ரூ லட்சம | | மதிப்பீடு |
| அரசினர் உயர்நிலைப் பள்ளி மற்ற உயர்நிலைப் பள்ளிகளுக்கு | 78·92 | 92·43 | 103·71 | 105·81 |
| நேரடி மானியம் | 598·39 | 669·51 | 739·51 | 750·22 |
| உள்ளாட்சி மன்றங்களுக்கு உயர்நிலைக் கல்விக்காக வழங்கப்படும் மானியங்கள் | 717·48 | 854·95 | 1080·00 | 1068·07 |
| மொத்தம் | 1396·79 | 1616·89 | 1923·22 | 1923·47 |

**பல்கலைக் கழகக் கல்வி :**

தமிழகத்தில் உள்ள மூன்று பல்கலைக் கழகங்களும் தமிழக அரசின் உதவி மானியங்களைப் பெறுகின்றன. சென்னைப் பல்கலைக் கழகம் 21,50,000 ரூபாயும், அண்ணாமலைப் பல்கலைக் கழகம் ரூ. 14,11,300 ஐயும் மதுரைப் பல்கலைக் கழகம் ரூ. 8,00,000 ஐயும் மானியமாகப் பெற்றன. இவை தவிரப் பல்கலைக்கழகக் கல்வி போதிக்கும் அரசினர் கலைக் கல்லூரிகளுக்குச் செய்யும் செலவு பல்கலைக் கழகப் பிரிவில் சேருகின்றது. தனியார் கல்லூரிகளுக்கு அரசு கட்டிடம் அமைக்கவும், விளையாட்டு அரங்கங்கள் அமைக்கவும் மற்றப் பலவித செலவுகளுக்கெனவும் தனி உதவி மானியங்களை வழங்கி வருகின்றது. தொழிற்

கல்லூரிகள் பல அரசால் நடத்தப்படுகின்றன. அவற்றுள் முக்கியமானவை சட்டக் கல்லூரி, அரசாங்க ஆசிரியர் பயிற்சிக் கல்லூரி, கர்நாடக இசைக் கலைலூரி போன்றவை. இவற்றிற்கு அரசே மொத்தச் செலவையும் ஏற்கின்றது. தவிரத் தனியார் தொழிற் கல்லூரிகளுக்கும் அரசு மானியம் வழங்குகின்றது.

| | 1967-68 | 68-69 | 69-70 | 70-71 |
|---|---|---|---|---|
| | ரூ. இலட்சத்தில் | | | |
| பல்கலைக்கழக மானியங்கள் | 31·65 | 39·59 | 44·88 | 44·90 |
| அரசினர் கலைக்கல்லூரிகள் | 81 84 | 100·83 | 117·89 | 121·39 |
| மற்றக் கல்லூரிகளுக்கு மானியங்கள் | 130·96 | 183·49 | 222·55 | 222·55 |
| அரசினர் தொழிற் கல்லூரிகள் | 20·75 | 23·09 | 24·58 | 25·18 |
| மற்றத் தொழிற் கல்லூரிகளுக்கு மானியங்கள் | 6 69 | 7·16 | 8·58 | 8·53 |
| மொத்தம் | 271·89 | 354·76 | 418·43 | 422·55 |

தமிழக அரசு ஆரம்பக்கல்வி, உயர்நிலைப்பள்ளிக் கல்வி, பல்கலைக்கழகக் கல்வி முதலியவற்றுக்குச் செய்த செலவு உயர்ந்து உள்ளது. அரசாங்கமே ஆண்டுதோறும் பலகலைக்கல்லூரிகளையும் உயர்நிலைப்பள்ளிகளையும் ஆரம்பிப்பதால் அரசின் செலவும் உயர்ந்துளளது.

**வேளாண்மைத் துறைச் செலவு :**

தமிழக மக்கள் தொகையில் 73·3 சதத்தினர் வேளாண்மையை முக்கிய தொழிலாய்க் கொண்டுள்ளனர். மொத்த நிலப் பரப்பில் 47 சதம் நிலத்தில் சாகுபடி நடைபெறுகின்றது. மாநில வருவாயில் வேளாண்மைத் துறையின் பங்கு 45 4 சதம் ஆகும். தமிழக முன்னேற்றமே வேளாண்மையை நம்பியிருக்கின்றது என்றால் அது மிகையாகாது. கடந்த சில ஆண்டுகளாகத் தமிழகத்தில் நெல் உற்பத்தி அதிகம் கூடியுள்ளது. இத்தகைய பசுமைப் புரட்சியைத் தமிழகத்திலே ஏற்படுத்த A.D T. 27, 1025, I. R. 8 என்ற அதிக விளைச்சல் தரக்கூடிய நெல்களை விதைக்க அரசு அதிக ஊக்கம் அளித்து வருகின்றது.

மேலும், இவ்வரசு வேளாண்மை முன்னேற்றத்திற்காக வேளாண்மை சம்பந்தப்பட்ட கண்காட்சிகளையும் செயல் முறை விளக்கங்களையும் செய்து வருகின்றது. இவை தவிர அரசாங்கம் விதைகளையும், உரங்களையும் விவசாயிகளுக்கு வழங்க அதிக செலவு செய்கின்றது. வேளாண்மை ஆராய்ச்சிக்கல்வி ஆகிய வற்றைப் பெருக்க அதிக செலவு செய்கின்றது. அரசின் அயராத ஊக்கத்தினால் இன்று தமிழகம் உணவுற்பத்தியில் தன்னிறைவு பெற்றுள்ளது. வேளாண்மை முன்னேற்றத்தினைக் கருதிப் பலவித வளர்ச்சித் திட்டங்களை அரசு மேற்கொண்டுள்ளது.

வேளாண்மைப் பெருந் தலைப்பின் கீழ்வரும் சில செல வினங்கள் பின் வருமாறு :

வேளாண்மை

| | 1967–68 | 68–69 | 69–70 | 70–71 |
|---|---|---|---|---|
| | ரூ. இலட்சத்தில் | | | |
| மேற்பார்வை | 37·90 | 40·47 | 41·59 | 39·98 |
| மாதிரிப் பண்ணைகள் | 22·20 | 24·86 | 24·49 | 24·78 |
| பொதுக் கண்காட்சிச் செயல் முறை விளக்கச் செலவு | 170·46 | 185·56 | 233·10 | 234·12 |
| வேளாண்மைப் பரிசோதனை ஆராய்ச்சி | 20·95 | 23·29 | 42·68 | 37·92 |
| வேளாண்மைக் கல்வி | 27·33 | 29·91 | 45·36 | 45·65 |
| வளர்ச்சித் திட்டங்கள் ஐந்தாண்டுத்திட்ட வேலைகள் | 754·11 | 816·82 | 675·21 | 832·55 |

தொழில்கள் ;

தமிழகத்தில் பெருந்தொழில்களும், சிறுரகத் தொழில்களும், குடிசைத்தொழில்களும் கடந்த சில ஆண்டுகளாக அதிவேகத்தில் வளர்ச்சி அடைந்துள்ளன. பருத்தி ஆடைத்தொழிற்சாலைகள், சிமெண்ட் தொழிற்சாலைகள், சர்க்கரைத் தொழிற்சாலைகள், இரசாயனத் தொழில்கள், மின்சார இயந்திரத் தொழிற்சாலைகள் பல தமிழகத்தில் இன்று காணப்படுகின்றன. சிறு குடிசைத் தொழில்களின் வளர்ச்சிக்காக ஏற்படும் செலவினை அரசே மேற் கொள்கின்றது. சில பருத்தி நூற்பு ஆலைகள் கடனைக் செலுத்தத்

தவறுவதால் உத்தரவாத திட்டப்படி அரசே தவணை முறைப்படி வணிக வங்கிகளுக்குக் கடனைத் திருப்பித் தருகிறது. இதற்கான செலவும் இத் தலைப்பிலே சேருகின்றது.

| | 1967–68 | 68–69 | 69–70 | 70–71 |
|---|---|---|---|---|
| | ரூ இலட்சத்தில் | | | |
| தொழில்கள் | 81·11 | 89·30 | 98·72 | 96·13 |
| குடிசைத் தொழில்கள் | 66·30 | 66·75 | 66·74 | 72·35 |
| சிறுரகத் தொழில்கள் | 101·21 | 96·56 | 176·38 | 183·33 |
| உதவி மானியங்கள் | 0·06 | 0·34 | 0·44 | 0·39 |
| வளர்ச்சித் திட்டங்கள் ஐந்தாண்டுத் திட்டவேலை. | 44·96 | 48·59 | 30·88 | 33·01 |

மருத்துவம்–பொதுச் சுகாதாரம் :

தமிழகத்தில் உள்ள எல்லா அரசு மருத்துவமனை மருந்தகங்களுக்கும் ஏற்படும் செலவைத் தமிழக அரசே மேற்கொள்ளுகின்றது. இதுதவிர மருத்துவத் துறைப் பணியாளர்களுக்கும் மருத்துவக் கல்லூரிகளுக்கும் ஆகும் செலவு, மனநோய் மருத்துவமனைச் செலவுகள், இரசாயன ஆய்வுத் துறைக்கான செலவு, மருத்துவத்துறைச் செலவாகக் கருதப்படுகின்றன. மருத்துவமனைகளையும், மருந்தகங்களையும் நடத்தும் உள்ளாட்சி நிறுவனங்களுக்கு அரசு மானிய உதவி வழங்குகிறது. பொதுச் சுகாதாரத் துறையில் பணியாள்களுக்கும், மற்ற நோய் தடுப்புச் செலவும், சுகாதார வேலைக்கான செலவுகளையும் அரசே மேற்கொள்கின்றது. மலேரியா தடுப்புத் திட்டங்கள், காலரா தடுப்புத் திட்டங்கள், சுகாதாரச் சேய் விடுதிகள் முதலியவற்றினை நடத்தப் பஞ்சாயத்து ஒன்றிப்புகளுக்கு அரசு உதவிமானியம் வழங்குகின்றது. கொள்ளை நோய்களை அறவே ஒழிக்கச் சுகாதார பிரசாரங்கள் முதலியவற்றிற்கான செலவும் இத் தலைப்பில் காணப்படுகின்றது. ஐந்தாண்டுத் திட்டங்களில் மேற்கொள்ளப்படும் சில வளர்ச்சி வேலைகளுக்காகும் செலவும் இத் தலைப்பில் அடங்கும் கடந்த ஐந்தாண்டுகளில் மருத்துவத் துறையிலும், பொதுச் சுகாதாரத் துறையிலும் அரசு மேற்கொண்ட சில முக்கிய செலவினங்களும் அதற்கான தொகையும் பின்வருமாறு,

மருத்துவத்துறை

| | 1967–68 | 1968–69 | 1969–70 | 1970–71 |
|---|---|---|---|---|
| | | ரூ. இலட்சத்தில் | | |
| மருத்துவத்துறைப் பணியாளர் செலவு | 36·67 | 43·80 | 40·89 | 39·79 |
| மருத்துவ மனைகளும் மருந்தகங்களும் | 808·52 | 892·82 | 964·44 | 966·23 |
| மருத்துவக் கல்லூரி களும் பள்ளிகளும் | 130·68 | 138·08 | 185·31 | 193·27 |
| மனநோய் மருத்துவ மனைகள் | 35·92 | 40·49 | 41·67 | 42·20 |
| வளர்ச்சித் திட்டங்கள் | 95·53 | 124·02 | 100·68 | 120·17 |
| | | பொதுச் சுகாதாரம் | | |
| பொதுச் சுகாதாரப் பணியாளர் செலவு | 135·05 | 146·42 | 174·02 | 176·61 |
| மானியங்கள் | 54·76 | 42·60 | 45·00 | 45·31 |
| கொள்ளைநோய் சம்பந்த செலவு | 75·97 | 8·19 | 11·13 | 11·67 |
| வளர்ச்சித் திட்டச் செலவு | 237·64 | 370·40 | 485·68 | 616·81 |

மூலதனச் செலவு :

திட்டமிட்ட முன்னேற்றத்தில் அரசின் மூலதனச் செலவு வழக்கமாகப் பெருக்கம் அடையும். வளர்ச்சியடையாத நாடாகிய இந்தியாவில் மூலதனச் செலவில் மேற்கொள்ளும் தொழில்கள் அதிக வருவாய் அளிக்கும் தன்மையுடையனவாக இருத்தல் அவசியம். மூலதனச் செலவிற்கு வேண்டிய வருவாய்

பெரும்பாலும் கடன் மூலமாகவே மாநில அரசுகள் திரட்டு கின்றன. வரி வசூலிப்புக் கணக்கு அல்லாத மற்றைய கணக்கில் மாநில அரசின் வரவு பின்வருமாறு:

| | முதல் திட்ட காலம் | இரண்டாவது திட்ட காலம் | மூன்றாவது திட்ட காலம் |
|---|---|---|---|
| | | ரூ. கோடியில் | |
| நிரந்தரக் கடன் | 157·9 | 337·4 | 449·3 |
| குறுகிய காலக் கடன் | 15·7 | 28·9 | 17·2 |
| மைய அரசிடமிருந்து பெறும் கடன் | 769·5 | 1417·0 | 3091·4 |
| மற்றைய கடன்கள் | — | 54·6 | 201·2 |
| நிதியிடாக்கடன் | 26·9 | 49·9 | 99.2 |
| மாநில அரசுகளுக்குள் கடன் தீர்க்கும் வகையில் வந்த வரவு | 122·9 | 231·7 | 386·8 |
| வைப்புத் தொகைகள் முன்பணங்கள் போன்றவை | 21·6 | 122·4 | 383·7 |
| | 1114·5 | 2241·9 | 4628·8 |

Source : State Finances in india K. Venkataraman, Attern, 1968—p. 161

இம்மாநிலங்களில் பெரும்பாலும் பல நோக்கு நீர்ப்பாசனத் திட்டங்களுக்கும், வேளாண்மை முன்னேற்றம், மின்சக்தி உற்பத்தித் திட்டங்கள், சாலை அமைத்தல், தொழில் வளர்ச்சி முதலியவற்றிற்காகவும் அதிக மூலதனச் செலவினை மேற்கொண்டு உள்ளனர். இவற்றைத்தவிர வளர்ச்சிப் பணிக்கு அல்லாத பல திட்டங்களுக்கு மூலதனச் செலவினைச் செய்துள்ளனர். முதல்

ஐந்தாண்டுத் திட்டம், இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டம், மூன்றும் திட்டம் மூன்றிலும் மாநில அரசுகள் செய்த மூலதனச் செலவின் போக்குப் பின்வருமாறு.

| | முதல் திட்டம் | இரண்டாம் திட்டம் | மூன்றும் திட்டம் |
|---|---|---|---|
| | | ரூ. கோடியில் | |
| பலநோக்கு நீர்த் திட்டங்கள் | 235·1 | 262·9 | 290·7 |
| நீர்பாசனம் கால்வாய்கள் | 182·7 | 321·7 | 554·5 |
| வேளாண்மை மேம்பாடு ஆராய்ச்சி மூலதனச் செலவு | 8·6 | 19·0 | 47·5 |
| மின்சக்தி திட்டங்கள் | 134·2 | 166·2 | 107·8 |
| சாலை போக்குவரத்து | 9·1 | 17·3 | 24·8 |
| கட்டிடங்கள் குடிநீர் திட்டங்கள் | 101·3 | 398·0 | 620·4 |
| தொழில் முன்னேற்றம் | 26·9 | 68·8 | 148·9 |
| மற்றவை | 1·7 | 6·1 | 16·9 |
| | 698·8 | 1,260·0 | 1,811·5 |

மூலதனச் செலவில் அதிகமான பங்கைப் பலநோக்கு நீர்த் திட்டங்களும், மின்சக்தித் திட்டங்களும், நீர்ப்பாசனக் கால்வாய்களும் பெற்றுள்ளன. பொருளாதார வளர்ச்சியினைத் தடையின்றி மேம்படுத்த மின்சக்தி உற்பத்தி, நீர்ப்பாசனவசதி, வேளாண்மை மேம்பாட்டுத் திட்டங்களைச் செவ்வனே ஆக்கல் அவசியம். தமிழக மூலதனச் செலவை நோக்குங்கால் இந்த தலைப்புகளுக்கு மூலதனச் செலவில் முக்கியத்துவம் கொடுக்கப்பட்டுள்ளது.

| | 1968–69 | 69–70 | 70–71 |
|---|---|---|---|
| | ரூ. இலட்சத்தில் | | |
| நில உடைமையாளர்களுக்கு இழப்பீடு கொடுத்தல் | 51 | 35 | 43 |
| பொதுச் சுகாதார மேம்பாட்டுக்கான மூலதனச் செலவு | 5 | 39 | 24 |
| தொழில் பொருளாதார வளர்ச்சிக்கு மூலதனச் செலவு வேளாண்மை மேம்பாடு ஆராய்ச்சித் திட்ட மூலதனச் செலவு | 632 | 442 | 498 |
| பாசன மூலதனச் செலவு (வாணிகத் தன்மையுள்ளவை) | 453 | 542 | 580 |
| பாசன மூலதனச்செலவு (வாணிகத் தன்மையற்றது) | 319 | 249 | 219 |
| பொதுப்பணிக்கான மூலதனச் செலவு | 634 | 679 | 1,374 |
| ஏனைய வேலைகளுக்கான மூலதனச் செலவு | 539 | 386 | 267 |
| சாலை நீர்ப் போக்குவரத்து திட்ட மூலதனச் செலவு | 210 | 137 | 163 |
| காட்டு வள மூலதனச் செலவு | 44 | 106 | 130 |
| அரசாங்க வாணிகத் திட்டங்களுக்கான மூலதனச் செலவு | 1,589 | 529 | 468 |
| எதிர்பாராத செலவு நிதிக்கு | — | 500 | — |
| | 4,493 | 3,593 | 3,189 |

இயற்கைப் பேரிடருக்காக வருவாய்க் கணக்கில் செலவு.

| மாநிலம் | | 57–58 | 58–59 | 59–60 | 60–61 | 61–62 | 62–63 | 63–64 | 64–65 | 65–66 | 66–67 | 67–68 |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | | | | | | ரூ. இலட்சத்தில் | | | | | | |
| ஆந்திரா | ... | 13 | 18 | 24 | 100 | 26 | 21 | 18 | 46 | 90 | 164 | 34 |
| அஸ்ஸாம் | ... | 46 | 21 | 47 | 61 | 16 | 62 | 39 | 22 | 29 | 358 | 304 |
| பீஹார் | ... | 180 | 389 | 54 | 58 | 131 | 166 | 27 | 26 | 48 | 1,036 | 2,562 |
| குஜராத் | ... | — | — | — | 18 | 47 | 17 | 163 | 78 | 121 | 590 | 595 |
| ஹரியாணு | ... | — | — | — | — | — | — | — | — | — | 10 | 29 |
| ஜம்மு & காஷ்மீர் | ... | 35 | 34 | 80 | 8 | 30 | 12 | 38 | 30 | 22 | 46 | 43 |
| கேரளா | ... | 3 | 6 | 5 | 4 | 16 | 13 | 8 | 7 | 6 | 3 | 9 |
| மத்தியப் பிரதேசம் | ... | 52 | 111 | 4 | 7 | 3 | 12 | 21 | 33 | 338 | 2,075 | 1,864 |
| மஹாராஷ்டிரம் | ... | 23 | 70 | 45 | 5 | 235 | 107 | 63 | 35 | 40 | 55 | 372 |
| மைசூர் | ... | 38 | 10 | 28 | 57 | 30 | 25 | 25 | 48 | 56 | 257 | 70 |
| நாகாலாந்து | ... | — | — | — | — | — | — | — | — | — | — | — |
| ஒரிஸ்ஸா | ... | — | 7 | 22 | 61 | 291 | 239 | 89 | 61 | 128 | 710 | 501 |
| பஞ்சாப் | ... | 8 | 75 | 16 | 557 | 460 | 66 | 148 | 137 | 55 | 97 | 10 |
| இராஜஸ்தான் | ... | 18 | 25 | 4 | 15 | 42 | 11 | 127 | 417 | 113 | 1,142 | 780 |
| தமிழகம் | ... | 32 | 7 | 21 | 24 | 25 | 10 | 8 | 51 | 44 | 116 | 22 |
| உத்தரப் பிரதேசம் | ... | 128 | 144 | 76 | 84 | 76 | 70 | 38 | 32 | 26 | 292 | 277 |
| மேற்கு வங்காளம் | ... | 290 | 724 | 592 | 756 | 556 | 488 | 540 | 386 | 426 | 734 | 800 |
| மொத்தம் | ... | 866 | 1641 | 1018 | 1815 | 1984 | 1319 | 1352 | 1409 | 1542 | 7685 | 8272 |

## மாநில நபர்வாரி வளர்ச்சிக்கான மற்றும் வளர்ச்சிக்கல்லாத செலவு

| | 60–61 | 65–66 | 66–67 | 67–68 | 68–69 | 69–70 | 70–71 | 71–72 | 72–73 |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| I. வளர்ச்சிச் செலவு : | | | | | | | | | |
| 1. வருவாய்க் கணக்கில் | 16·88 | 32·29 | 33·70 | 38·05 | 41·52 | 46·31 | 48·67 | 56 97 | 55·26 |
| 2. மூலதனச் செலவு | 4 69 | 9·18 | 0·10 | 7·82 | 11·34 | 3 48 | 3 75 | 9·86 | 8 88 |
| II. வளர்ச்சிக்கல்லாத செலவு ; | | | | | | | | | |
| 1. வருவாய்க் கணக்கில் | 10·29 | 16·66 | 19·80 | 22·71 | 25·08 | 30 33 | 30·19 | 33·55 | 37·85 |
| 2. மூலதனச் செலவு | 0·38 | 0·01 | 0·02 | 0·14 | 0·13 | 1·27 | 0·02 | 0·08 | 0.06 |
| III. மொத்தச் செலவு : | | | | | | | | | |
| 1. வருவாய்க் கணக்கில் | 27·17 | 48·95 | 53·50 | 60·76 | 66·60 | 76·63 | 78·85 | 90 52 | 93 11 |
| 2. மூலதனச் செலவு | 5·06 | 9·20 | 0 12 | 7 95 | 11·47 | 4·74 | 3·77 | 9 94 | 8·94 |

மூலம் ; Tamilnadu An Economic Apprasial 1972. Table 18·7.

# 5. தமிழக மாநிலக் கடன்

கூட்டரசு நாடுகளில் பொருளாதார வளர்ச்சி மத்திய-மாநில அரசுகளின் இணை முயற்சியாகத் திகழ்கிறது. இந்தியாவில் ஏனைய கூட்டரசு நாடுகளில் இருப்பதைப் போல அரசியல் சட்டம் நிதி அதிகாரங்களையும், செலவுப் பொறுப்பினையும் மத்திய-மாநில அரசாங்கங்களிடையே பகிர்ந்து தந்துளது. மத்திய-மாநில அரசாங்கங்களின் செலவிற்கேற்ப நிதி அதிகாரங்களைப் பகிர்ந்து கொடுத்திருந்தால், நிதிப் பிரச்சினைகள் தோன்ற வழியில்லை. உண்மையில் அது ஒரு சிறந்த ஏற்பாடாக இருந்திருக்கும். ஆனால், இந்திய அரசியல் சட்டத்தில் வருமான வளர்ச்சிக்கு ஏற்ப நெகிழ்ச்சியுடைய வரிகளை மத்திய அரசாங்கத்திற்கு அளித்து, வருவாய் அதிகம் ஈட்டித்தராத வரிகளை மாநில அரசாங்கங்கள் வசம் அளிக்கப்பட்டுள்ளன. மத்திய அரசாங்கம் தனது வரி வாயில்கள் வழியாக நாட்டு வருமானத்தில் அதிகமான பங்கினைப் பெற இயலும். ஆனால், மாநிலங்களின் வருமானம் அதிக வளர்ச்சியின்றி இருப்பதால் மத்திய அரசாங்கம் தரும் கடனையும், வெளி அங்காடிக் கடனையும் நம்பியே நிதி நிர்வாகம் செய்ய வேண்டியிருக்கிறது. மாநிலங்களின் பணிகள் பெருஞ் செலவினைக் கொண்டவை, மட்டுமல்ல; அவை பொருளாதார வளர்ச்சிக் கேற்ப வளரும் தன்மையுடையவை. மத்திய அரசாங்கப் பணி நீண்ட காலத் திட்டம் அமைத்துப் பொருளாதார முன்னேற்றத் திற்கு அவசியமான சில மாற்றங்களை ஏற்படுத்துவது. ஆனால், மாநிலங்களின் பணியோ அத்திட்டத்தினால் ஏற்படும் பொருளா தார முன்னேற்றத்தால் எல்லாரும் நன்மையடையச் செய்வது.[1] மாநில அரசாங்கங்கள் பொருளாதார முன்னேற்றத்திற்கு தேவை யான சூழ்நிலை ஏற்படுத்துவது மட்டுமன்றி நாட்டின் பொருளா தார முன்னேற்ற முயற்சியில் மத்திய அரசோடு ஒரு கூட்டுப் பங்காளியாகத் தோற்றமளிக்கிறது.

[1] K. Venkataraman — State Finances of India. London, 1967.

கடந்த திட்டங்களில் மாநில அரசின் பங்கினைப் பின்வரும் அட்டவணை விளக்குகிறது.[1]

| திட்டம் | மொத்த அரசாங்கச் செலவு | மாநில அரசாங்கச் செலவு | மொத்தச் செலவில் செலவு மாநிலச் சதவிகிதம் |
|---|---|---|---|
| | | ரூ. கோடியில் | |
| முதல் திட்டம் | 1960 | 1427 | 73% |
| இரண்டாவது திட்டம் | 4600 | 1981 | 43% |
| மூன்றாவது திட்டம் | 8631 | 4155 | 48% |
| நான்காவது திட்டம் | 14,398 | 6066 | 41% |

கடந்த மூன்று ஐந்தாண்டுத் திட்ட காலத்திலும், மூன்று ஓராண்டுத் திட்ட காலத்திலும் மாநிலங்களின் செலவு உயர்ந்து கொண்டே செல்கிறது. இன்று மாநிலங்கள் மேற்கொள்ளும் பல்வகையான பணிகளில் முக்கியமானவை: போக்குவரத்து, நிர்வாகம், கல்வி போன்றவையாகும். மேலும், திட்டப் பணியே மத்திய- மாநில அரசின் கூட்டுப்பணியாக இருப்பதால் மாநிலங்களின் மூலதனச் செலவு உயர்ந்து கொண்டே செல்கிறது. இம் மூலதனச் செலவுப் பொறுப்புகளை மேற்கொள்ள மாநிலங்கள் மத்திய அரசிடம் கடன் வாங்கவேண்டிய அவசியம் ஏற்படுகிறது. இந்திய மாநிலக் கடன் பன்னாட்டுக் கடனைப்போல் பல ஒற்றுமைகளைக் கொண்டுள்ளது. வளர்ச்சியுறாத வருமானம் குறைந்த நாடுகள் திட்டமிட்ட முன்னேற்றம் அடைய விரும்பினால் அயல் நாட்டுக் கடனை எதிர்பார்க்கிறது. நமது நாட்டில் மாநிலங்களின் வரிவருவாய் மாநிலங்களின் செலவிற்கேற்ப வளரும் தன்மையினை உடையவையல்ல. மேலும் மாநில வரிகளில் பெரும்பாலானவை வருமான வளர்ச்சிக்கேற்ப நெகிழ்ச்சி கொண்டவையல்ல. நம் இந்திய அரசாங்கத் திட்டம் அமைக்க அயல் நாடுகளை எப்படி நம்பியிருக்கிறதோ, அதேபோல் மாநிலங்கள் மத்திய அரசின் உதவியை நம்பி இருக்கின்றன.[2]

[1] Government of India, III Five year plan. p. 88-89, IV plan, 1969.
[2] Patel I. G.—Introduction to B. K- Jha's Book on Bihar Financs.

## மாநிலங்களின் கடன் வளர்ச்சி

| மாநிலம் | | 1952 | 1957 | 1961 | 1966 | 1968 | தலாக்கடன் |
|---|---|---|---|---|---|---|---|
| | | | | ரூ. கோடியில் | | | |
| ஆந்திரா | ... | — | 125 | 228 | 439 | 613·26 | 145 56 |
| அஸ்ஸாம் | ... | 4 | 26 | 54 | 115 | 239·93 | 159 45 |
| பீகார் | ... | 12 | 76 | 187 | 418 | 620·47 | 110·83 |
| குஜராத் | ... | — | — | 114 | 259 | 306 64 | 119·53 |
| ஜம்மு & காஷ்மீர் | ... | 6 | 24 | 39 | 96 | 152·49 | 333·53 |
| மத்தியப் பிரதேசம் | ... | 23 | 57 | 145 | 347 | 465·89 | 118 03 |
| தமிழகம் | ... | 50 | 109 | 201 | 403 | 484·94 | 125 54 |
| மகாராஷ்டிரம் | ... | 56 | 189 | 265 | 503 | 650 83 | 134 24 |
| மைசூர் | ... | 21 | 75 | 138 | 227 | 386·47 | 135 91 |
| கேரளா | ... | 15 | 44 | 89 | 203 | 261·86 | 126 88 |
| ஒரிஸ்ஸா | ... | 20 | 91 | 160 | 225 | 413·63 | 197·07 |
| பஞ்சாப் | ... | 63 | 202 | 268 | 407 | 249·70 | 176 59 |
| இராஜஸ்தான் | ... | 15 | 64 | 158 | 328 | 500·27 | 197·39 |
| உத்தரப் பிரதேசம் | ... | 58 | 222 | 392 | 670 | 812·28 | 92·07 |
| மேற்கு வங்காளம் | ... | 43 | 190 | 310 | 527 | 590 91 | 136 24 |
| நாகாலாந்து | ... | — | — | — | — | 14 53 | 343 50 |
| ஹரியாணு | ... | — | — | — | — | 159 71 | 164·73 |

மாநிலங்களின் கடன் சராசரியாக 13 மடங்கு உயர்ந்துள்ளது. மாநிலங்களின் தலாக்கடன் (Percapita Debt) ஜம்மு & காஷ்மீரில் ரூ. 383·53 ஆகவும், நாகாலாந்தில் ரூ. 343·50 ஆகவும் உள்ளது. தமிழகத்தின் தலாக் கடன் 1968-ல் ரூ. 125·54 கோடி. 1950–51-ல் தமிழக மாநிலத்தின் மொத்தக் கடன் (Gross Debt) ரூ. 50·49 கோடி. 1968–69-ல் மொத்தக் கடன் 466 கோடி ரூபாய். 1956 முதல் 1969 வரை தமிழக மாநிலம் மத்திய அரசிடமிருந்து 439 முறை பல திட்டங்களுக்காக வெவ்வேறு வட்டி விகிதத்தில் கடன் பெற்றுள்ளது. 1951 முதல் 1969 வரை எல்லா மாநிலங்களின் வருமானம் ரூ. 396·4 கோடியிலிருந்து ரூ. 2,587·1 கோடியாக உயர்ந்தது; மாநிலங்கள் மத்திய அரசிடமிருந்து பெற்ற கடன் தொகை (Loans) ரூ. 94 கோடியிலிருந்து ரூ. 713·7 கோடியாக வளர்ந்துள்ளது. 1966-ல் மத்திய அரசிடமிருந்து பெற்ற கடன் மட்டும் மொத்தக் கடனில் 75 சதவீதமாகியது.[1]

இந்தியா சுதந்திரம் அடைந்த ஆகஸ்டு 15-ஆம் நாள் 1947-ல் மாநிலங்களின் மொத்தக் கடன் ரூ. 43·97 கோடியாகும். இருபத்தோர் ஆண்டுகள் கழித்து 1968 ஆகஸ்டுத் திங்கள் 15-ஆம் தேதி மாநிலங்களின் மொத்தக் கடன் ரூ. 5,195·55 கோடியாக உயர்ந்துள்ளது.[2]

மாநிலங்களின் மொத்தக் கடனை வெளி அங்காடிக் கடன், மத்திய அரசுக் கடன், ரிசர்வ் வங்கியிடமிருந்து பெறும் வழி-வகை முன்பணம் (Ways And Means Advances) சிறப்பு முன் பணக் கடன் (Special Advances) என்று பிரிக்கலாம். ஒவ்வொரு மாநில அரசும் ரிசர்வ் வங்கியிடம் முன்பணம் பெற ஒப்பந்தம் செய்துகொண்டுள்ளது. இது ஒரு குறுகிய காலக் கடனாகும். இந்த ஒப்பந்தப்படி மாநில அரசாங்கங்கள் ரிசர்வ் வங்கியில் ஓரளவு குறைந்த இருப்புப் பணம் வைத்திருக்கவேண்டும். முன்பணம் வாங்கவேண்டிய அவசியம் ஏற்பட்டால் மாநிலங்களின் இருப்புப் பணத்தைவிட மூன்று மடங்கு பணம் அதிகம் பெறலாம். இதைத் தவிரச் சில மாநிலங்களின் அவசரக் கால நிதிநிலைமையைப் போக்கச் சிறப்பு முன்பணமும் ரிசர்வ் வங்கியிடமிருந்து பெறலாம். இம்முறைகளில் மாநிலங்கள் ரிசர்வ் வங்கியிடம் கடனுதவி பெற ஒரு வரம்பு வரையறுக்கப்பட்டுள்ளது. அந்தக் கடன் வரம்பிற்கு மேல் மாநிலங்களுக்கு நிதி தேவைப்பட்டால் ரிசர்வ் வங்கியிடமிருந்து இருப்புக்கு மேல் பணம் எடுக்கலாம் (Over draw). தமிழக

[1] Reserve Bank of India Bulletin.
[2] The Hindu — Aug. 17, 1968 P. 7

மாநிலம் ரிசர்வ் வங்கியிடம் கொண்டுள்ள ஒப்பந்தப்படி வாரத்தில் ஒவ்வொரு வெள்ளிக்கிழமையும் ரூ. 40 இலட்சமும் மற்ற நாள்களில் ரூ. 35 இலட்சமும் இருப்புப் பணமாகக் கொண்டிருக்க வேண்டும். குறுகிய காலக் கடனாக ரூ. 80 இலட்சம் வரை ரிசர்வ் வங்கியிடம் கடன் பெறலாம். மேலும் சிறப்பு வழிவகை முன்பணமாக (Special ways and means advances) ரூ. 300 இலட்சம் வரை கடன் பெறலாம். இத்தொகைக்கு மேல் கடன் வாங்க வேண்டிய அவசியம் ஏற்பட்டால் ரிசர்வ் வங்கியிடமிருந்து இருப்புக்கு மேல் பணம் எடுக்க வழியுள்ளது. 1966–67-ல் தமிழக மாநில அரசு ரிசர்வ் வங்கியிடம் 40 முறை ரூ. 19·92 கோடி குறுகியகால முன் பணமும், சிறப்புப் பணமும் பெற்றது. இந்தக் கடனுக்குக் கொடுத்த வட்டி ரூ. 18·06 இலட்சம். இவைதவிர அதிகப்பற்று எடுக்கும் வசதியினைப் பயன்படுத்தி பல மாநிலங்கள் ரிசர்வ் வங்கியிடம் கடனுதவி பெற்றது. 1969 மார்ச்சு 10ஆம் தேதி சில மாநிலங்கள் ரிசர்வ் வங்கியிடம் வாங்கிய அதிகப்பற்று Overdrafts) விவரம் :

| | | ரூ. இலட்சம் |
|---|---|---|
| ஆந்திரம் | ... | 70 |
| அஸ்ஸாம் | ... | 84 |
| பீகார் | ... | 739 |
| கேரளா | ... | 643 |
| மைசூர் | ... | 1.037 |
| நாகாலாந்து | ... | 150 |
| ஒரிஸ்ஸா | ... | 537 |
| தமிழ்நாடு | ... | 2,368 |
| இராஜஸ்தான் | ... | 2,456 |

தமிழகக் கடனைப் பொறுத்தமட்டில் வெளிச் சந்தைக் கடன், மத்திய அரசுக் கடன், ரிசர்வ் வங்கியிடமிருந்து பெறும் வழிவகை முன்டைம் எல்லாமே உயர்ந்து வருகிறது. இன்று தமிழக அரசின் நிதிநிலை பாராட்டத்தக்க நிலையில் இல்லை என்றால் அதற்குக் காரணம் கடன் சுமையும், வளரும் வட்டிச் செலவுமேயாகும். 1946–47 ஆண்டு முதலே அன்றைய சென்னை மாநிலம் (ஆந்திரம் உள்பட) மத்திய அரசிடமும், வெளி அங்காடியிலும் கடன் வாங்கி இருந்தது. இந்தியாவில் முதல் ஐந்தாண்டுத் திட்டம் ஏற்பட்ட பின்னர் மாநில அரசின் கடன் உயர்ந்து கொண்டே வருகிறது. தமிழகக் கடன் வளர்ச்சியைப் பின்வரும் அட்டவணை தெளிவாக்குகிறது.

மாநிலங்களின் தீர்வு காணப்படாத கடன் 1966.ல்

ரூ. இலட்சத்தில்

| மாநிலம் | மத்திய அரசிடம் பெற்ற கடன் | நிலையான கடன் | மொத்தம் | கடனுக்கான வட்டிச் செலவு | மாநிலங்கள் கொடுத்துள்ள கடன் |
|---|---|---|---|---|---|
| ஆந்திரா | 338 | 80 | 439 | 17 | 163 |
| அஸ்ஸாம் | 99 | 6 | 115 | 7 | 52 |
| பீஹார் | 342 | 48 | 418 | 21 | 116 |
| குஜராத் | 192 | 54 | 259 | 18 | 91 |
| ஜம்மு & காஷ்மீர் | 88 | — | 96 | 3 | 8 |
| கேரளம் | 145 | 35 | 203 | 3 | 96 |
| மத்தியப் பிரதேசம் | 293 | 36 | 347 | 15 | 179 |
| தமிழ்நாடு | 272 | 95 | 403 | 17 | 214 |
| மகாராஷ்டிரம் | 335 | 115 | 503 | 26 | 170 |
| மைசூர் | 155 | 41 | 227 | 14 | 84 |
| ஒரிஸ்ஸா | 193 | 28 | 225 | 16 | 14 |
| பஞ்சாப் | 368 | 6 | 407 | 22 | 123 |
| இராஜஸ்தான் | 254 | 34 | 328 | 15 | 90 |
| உத்தரப் பிரதேசம் | 468 | 159 | 670 | 34 | 330 |
| மேற்கு வங்காளம் | 436 | 66 | 527 | 22 | 147 |
| மொத்தம் | 3978 | 806 | 5167 | 250 | 1881 |

| ஆண்டு | மின்சார வாரியம் உள் பட வெளி அங்காடிக் கடன். | மத்திய அரசுக் கடன் | மற்றையக் கடன்கள் | மொத்தம் |
|---|---|---|---|---|
| | | ரூ. இலட்சத்தில் | | |
| 1946–47 | 15·65 | 4·28 | — | 19·93 |
| 1950–51 | 19·50 | 13·71 | — | 33·21 |
| 1953–54 ஆந்திரமாநிலம் பிரிவதற்குமுன் | 34·50 | 59·36 | — | 93·86 |
| 1956–57 மொழிவாரி மாநிலப் பிரி-வுக்குமுன் | 37·36 | 63·02 | 0·26 | 100·64 |
| 1960–61 இரண்டாவது திட்டக்கடைசி ஆண்டு | 64·42 | 127·64 | 5·93 | 197·99 |
| 1961–62 | 75·04 | 144·96 | 5·73 | 225·73 |
| 1962–63 | 89·98 | 166·32 | 8·50 | 264·80 |
| 1963–64 | 91·72 | 204·69 | 11·11 | 307·52 |
| 1964–65 | 106·49 | 233·37 | 12·51 | 352·37 |
| 1965–66 | 124·35 | 259·90 | 13·80 | 398·05 |

ஆண்டு தோறும் மத்திய அரசு மாநிலங்களுக்குக் கடனாக அளிக்கும் தொகை ரூ. 250 கோடியிலிருந்து ரூ. 300 கோடி வரை இருக்கிறது. 1971–72ஆம் ஆண்டில் தமிழக அரசு எதிர்பார்க்கும் கடன்களின் மொத்தக் தொகை ரூ. 44.57 கோடியாகும்.[1] மாநில அரசாங்கங்கள் தேசியக் கூட்டுறவு வளர்ச்சிக் கழகத்திடமிருந்தும், இந்திய ரிசர்வ் வங்கியைச் சேர்ந்த தேசிய வேளாண்மைக் கடனுதவி மூலமும், அனைத்திந்தியக் கதர் கிராமத்

[1] கருணாநிதி-1971-72ஆம் ஆண்டு நிதிநிலை அறிக்கை-ப.9.

தொழில்கள் ஆணைக்குழுவிடமிருந்தும், இந்திய ஆயுள் காப்புறுதி நிறுவனத்திடமும், இந்திய ஸ்டேட் வங்கியிடமும் கடன் பெற்றுள்ளது. 1970 மார்ச் 31-ஆம் தேதியன்று தமிழக அரசு இந்த நிறுவனங்களிடம் பெற்ற கடன் விவரம் பின்வருமாறு:[1]

| | | ரூ. இலட்சம் |
|---|---|---|
| 1. | தேசியக் கூட்டுறவு வளர்ச்சி கழகத்திடமிருந்து பெற்ற கடன்கள் ... | 588·26 |
| 2. | இந்திய ரிசர்வ் வங்கியைச் சேர்ந்த தேசிய வேளாண்மைக் கடன் நிதியிலிருந்து ... | 285·61 |
| 3. | அனைத்திந்திய கதர்-கிராமத் தொழில்கள் ஆணைக்குழுவிடமிருந்து பெற்ற கடன்கள் ... | 0·07 |
| 4. | இந்திய ஆயுள் காப்புறுதி நிறுவனத்திடம் பெற்ற கடன்கள ... | 1,370·73 |
| 5. | இந்திய ஸ்டேட் வங்கியிடமிருந்து பெற்ற கடன்கள் ... | 2,836·00 |
| | | 5,080·67 |

மாநிலங்களில் கடன் பெருக மத்திய அரசாங்கமும் திட்டக் குழுவின் திட்ட அமைப்பு முறையுமே காரணம் என்று சில பொருளியல வல்லுநர்கள் எண்ணுகின்றனர். முதல் ஐந்தாண்டுத் திட்ட காலத்தில் (1951–56) மாநிலங்களின் மொத்தத் திட்டச் செலவு ரூ 6,897 கோடி, மத்திய அரசு அளித்த உதவி ரூ. 350 கோடி ரூ 230 கோடிக்கு மேல மாநில அரசாங்கங்கள் கடன் வாங்கித் திட்டத்தின் நிதியைத் திரட்டின. நாட்டின் பொருளாதார முன்னேற்றத்திற்கு மிகப் பெரிய திட்டம வகுக்க வேண்டும் என்ற பேரார்வத்தில மாநிலங்களுக்குக் கிட்டாத நிதி இலக்குகளை அடையத் திட்டக்குழு விரும்புகிறது. இதன் விளைவு மாநிலங்கள் வேண்டிய அளவு நிதி திரட்டுவது கடினமாகிறது.[2] தமிழக

[1] தமிழக அரசு — 1971–72ஆம் ஆண்டு வரவு–செலவு திட்ட வெள்ளை அறிக்கையின இணைப்புகள், ப. 18.

[2] 'Capital' — 4 th Aug. 1966. p. 241.

இரண்டாவது திட்டத்திற்காகத் தமிழக மாநிலம் செலவிட ஒதுக்கப்பட்ட தொகை ரூ. 152 கோடி. ஆனால், உண்மையில் 1957–61 ஆண்டுகளில் திட்டப் பணிக்காகத் தமிழகம் செய்த செலவு ரூ. 186 கோடியாகும். இந்த ஐந்தாண்டு காலத்தில் தமிழகம் தனது வரி வருவாயினைப் பெருக்கவில்லை; ஆனால், திட்டச் செலவு பெருகியதால் மத்திய அரசிடம் கடன் வாங்க வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டது.

மாநிலங்களின் செலவினங்களில் திட்டத்திற்கல்லாத முன்னேற்றத்திற்குமல்லாத செலவு (Non-paln, Non-Developmental Expenditure) மொத்தச் செலவில் அதிகத்தொகை கொண்டு உள்ளது. நாட்டில் இயற்கையால் ஏற்படும் பேரிடர், புயல், முதலியவற்றிற்கான நிவாரண வேலைக்கும், குடியேற்றத் திட்டத்திற்காகவும் (Rehabilitation Schemes) மாநில அரசு மத்திய அரசிடம் கடன் வாங்க வேண்டியிருக்கிறது. 1952–53-ல் தமிழக மாநிலத்தில் பஞ்சம் ஏற்பட்டதாலும், வறட்சிக்காலம் நீடித்தமையாலும் மக்கள் அல்லலுற்றனர். நிவாரண வேலைக்காக ரூ. 246 இலட்சம் மத்திய அரசிடம் இருபது ஆண்டுத் தவணையில் 4% வட்டியில் சென்னை மாநிலம் கடன் வாங்கியது. சென்னை மாநிலம் சேமித்து வைத்திருந்த காப்பிருப்பு நிதியான ரூ. 41 கோடி செலவழியவும், ஒரு தனியார் வங்கியிடம் ரூ. 1 கோடி கடன் பெற்றது. இவைத்தவிர அந்த ஆண்டில் ரிசர்வ் வங்கியிடமிருந்து வழிவகை முன்பணமாக ரூ. 17 கோடி பெற்றது[1] 1969 மார்ச்சு வரை இவ்வகைச் செலவு இனங்களுக்காக ரூ. 25·15 கோடி கடன் பெற்றது. இந்தியாவில் பல மாநிலங்கள் இதைப்போன்ற வெள்ளப் பெருக்கம், புயல் போன்ற பேரிடர் நிவாரண வேலைக்கு அதிகச் செலவு செய்துள்ளன. இவை வரவு–செலவு திட்டத்தில் இடம் பெறாத செலவாகும்; இவ்வகை எதிர்பாராத செலவுகளுக்காக மாநிலங்களுக்கு மத்திய அரசு கணிசமாகக் காப்பிருப்பு நிதியினை வழங்கினால் மாநிலக் கடன் ஓரளவு குறையும்.

மாநிலங்கள் செலவுத் தொகையில் அதிக அளவு, சமுதாய முன்னேற்றத் திட்டங்களுக்காகச் செலவிடப்படுகிறது. மாநிலங்களின் வரிகளால் வருமானம் அதிக வளர்ச்சியடையவில்லை; ஆனால், செலவோ உயர்ந்துகொண்டே செல்கிறது. 1959-ல் பாராளுமன்றத்தில் அமுலாக்கிய சட்டப்படி கூட்டு நிறுவன வரி (Corporation Tax) மாநிலங்களின் பகிர்வுத் திரட்டிலிருந்து (Divisible Pool) விலக்கப்பட்டது. இந்த வரி வருவாயினைப்

[1] Govt. of Madras — Finance Account 1952–53.

பகிர்வதால் 1959-க்கு முன்னர் மாநிலங்கள் ஓரளவு நிதி இதன் விளைவாகப் பெற்று வந்தன. ஆனால், 1959 முதல் இந்த வரி வருவாயும் குறைந்துவிட்டது. கடந்த பதினான்கு ஆண்டுகளில் கூட்டு நிறுவன வரியின் வருமானம் 600% உயர்ந்தது; ஆனால், பகிர்வுத் திரட்டில் மாநிலங்களுக்குக் கிடைத்த பங்கு 50 சதவிகிதமே உயர்ந்துள்ளது. இவ்வாறு செலவிற்கேற்ப வருமானம் வளர்ச்சியுறாததால் மாநில அரசாங்கங்கள் மத்திய அரசிடமோ வெளி அங்காடியிலோ கடன் வாங்க வேண்டிய அவசியம் ஏற்படுகிறது. 1957-ல் ஏற்பட்ட ஒப்பந்தப்படி சர்க்கரை, புகையிலை, துணி மீது விற்பனை வரி விதிக்கும் உரிமை மத்திய அரசாங்கத்திற்குக் கொடுக்கப்பட்டதால், மாநில அரசாங்கங்கள் இந்த முக்கிய வரி வருவாயினையும் இழந்தது.

மாநில அரசாங்கங்களில் மூலதனச் செலவுத் திட்டம் தொடங்கியது முதல் உயர்ந்து கொண்டே வருகிறது. மாநிலங்கள் கடன் வாங்குவது தவறில்லை; ஆனால், அந்தக் கடன் தொகையை வருமானம் ஈட்டக்கூடிய திட்டங்கள்மீது மூலதனம் செய்தால் மாநிலங்களின் கடன் சுமை குறையும். கடந்த சில ஆண்டுகளில் தமிழக மாநில அரசு மேற்கொண்ட மூலதனச் செலவின் விவரம் பின்வரும் அட்டவணையில் காணலாம்.

தமிழக மாநிலத்தின் பல வகையான மூலதனச் செலவுகளில் மின்சக்தித் திட்டங்களுக்கான செலவே வருவாய் ஈட்டித்தருவது. நீர்ப்பாசனத் திட்டங்களுக்குச் செய்த மூலதனச்செலவு மிக அதிகமாகும். பரம்பிக்குளம் அரியலாறு திட்டம் பல நீர்ப்பாசனத் திட்டங்களைவிடத் தனிச் சிறப்பினைக் கொண்டு, அதிக பயனைத் தரக்கூடியது. இதற்காகச் செலவிடக்கூடிய தொகை ரூ. 35·08 கோடியாகும். இப்படிப்பட்ட பல திட்டங்களின் மூலதனச் செலவினைக் குறைத்தல் அரிது. ஆனால், அத்திட்டங்களைச் செயல்படுத்த மத்திய அரசிடம் கடன் வாங்கவேண்டும்.

திட்டக்குழு பல்வேறு மாநிலங்களுக்குத் தாம் செயல்படுத்த வேண்டிய திட்டங்களையும், அவற்றைச் செயல்படுத்த வேண்டிய கால அளவையும் நிர்ணயிக்கிறது. அத்திட்டங்கள் வெற்றி அடைய வேண்டிய அளவு நிதி மாநிலங்களிடையே உள்ளதா என்பதை மத்திய அரசு திட்டக்குழு ஆராய்வதில்லை. மத்திய அரசு மாநிலங்களுக்குத் திட்டத்திற்காக, தேவைக்கேற்ற உதவி மானியம் வழங்காததால் மாநில அரசாங்கங்களில் சில கடன் வாங்கித் திட்டத்தைச் செயல்படுத்துகின்றன. மத்திய அரசு சில

| செலவின் நோக்கம் | முதல் திட்டம் | | இரண்டாவது திட்டம் | | மூன்றாவது திட்டம் |
|---|---|---|---|---|---|
| | ஆந்திரா பிரியுமுன் | ஆந்திரா பிரிந்தபின் | மாநிலங்கள் பிரிக்கப் படுவதற்கு முன் | மாநிலங்கள் பிரித்தபின் | |
| | ரூ. கோடியில் | | | | |
| 1. மின்சக்தி திட்ட மூலதனச் செலவு ... | 21·71 | 18·77 | 4·74 | 74·26 | 119·27 |
| 2. சிறு நீர்ப்பாசன பெரிய நீர்ப்பாசனத் திட்ட மூலதனச் செலவு ... | 22·93 | 12·02 | 3·00 | 20·62 | 44·98 |
| 3. கட்டிட, சாலை அமைப்பு மூலதனச் செலவு ... | 2·57 | 1·22 | 0·57 | 15·36 | 29·36 |
| 4. தொழில் வளர்ச்சிக்கான மூலதனச் செலவு ... | 0·36 | 0·38 | 0·20 | 4·38 | 5·78 |
| 5. மற்றைய பணிகளுக்கான மூலதனச் செலவு ... | 0·56 | 0·29 | 0·18 | 5 31 | 15·84 |
| 6. சாலைப் போக்குவரத்திற்கான மூலதனச் செலவு... | 0·16 | 0·66 | 0·53 | 2·09 | 5·27 |
| 7. வனத்துறைக்கான மூலதனச் செலவு ... | — | — | 0·05 | 0·93 | 2·75 |
| 8. பொதுச் சுகாதாரத்திற்கான மூலதனச் செலவு... | — | — | 0·14 | 10·31 | 12·58 |
| 9. ஜமீந்தார் ஒழிப்புக்குப் பின் இழப்பு நிதி ... | 3·26 | 0·50 | 0·07 | 2·93 | 0·37 |
| 10. வேளாண்மைத்துறை ஆராய்ச்சி மூலதனச் செலவு ... | — | — | — | 0.07 | 0 43 |

மாநிலங்களுக்குத் திட்டத்திற்காக ஒதுக்கியுள்ள தொகையினைக் காலதாமதமாக அளிப்பதால் உடனடித் தேவைக்கு ரிசர்வ் வங்கியிடம் அதிகப்பற்று (Overdraft) வாங்கித் திட்டச் செலவிற்காகப் பயன்படுத்துகிறது.

பொதுக்கடன் விளைவுகள் :

கடன் தருபவராகாதே; கடன் வாங்குபவராகாதே; ஏனென்றால் கடன், தொகையினை இழக்கச் செய்வதுமன்றி, நட்பினையும் இழக்கச் செய்யும்.

(ஷேக்ஸ்பியர்)

இன்று இந்தியாவில் மத்திய-மாநில அரசின் உறவுகள் தேய்வுறக் காரணமாக இருப்பதே இந்த மாநிலக் கடன் வளர்ச்சியாகும். 1961–62-ல் மத்திய அரசிடம் மாநில அரசாங்கங்கள் பெற்ற கடன் ரூ. 2,066 கோடியாகும். 1968–69-ல் இந்தக் கடன் தொகை ரூ 5,413 கோடியாக உயர்ந்துள்ளது. மாநில அரசாங்கங்கள் மத்திய அரசிடம் கடன் பெறுவது தவறில்லை: ஆனால், அந்தக் கடன் தொகை வருவாய் ஈட்டக்கூடிய திட்டங்கள் மீது செலவிடப்பட்டதா என்பதே பிரச்சினை. கடன் தொகையைக் கொண்டு ஆதாயமான திட்டங்கள் மீது மாநில அரசாங்கங்கள் செலவு செய்திருந்தால் கடனைத் தீர்க்கவும், வட்டி கட்டவும் வேண்டிய அளவு வருமானம் கிடைக்கும். திட்டகாலத்தில் அரசாங்கம் மேற்கொள்ளும் செலவுகளில் பல நேரடியாக வருமானம் ஈட்டித் தரக்கூடியவையல்ல. மாநில மூலதனச் செலவில் வருமானம் ஈட்டாச் செலவினங்கள் அதிகமாக இருப்பதால் கடனுக்கான வட்டித் தொகை உயர்ந்து கொண்டே செல்கிறது.

மாநிலங்களுக்கு மத்திய அரசு கொடுத்துதவும் கடன் 1 சதவீதம் முதல் 5 சதவீத வட்டியும், ஓர் ஆண்டு முதல் 40 ஆண்டு வரை தவணைக் காலமும் கொண்டுள்ளது. இரண்டாவது நிதிக்குழு தனது அறிக்கையில் வட்டி விகிதத்தில் உள்ள வேற்றுமைகளையும் தவணைக் காலத்தையும் மாநிலங்களுக்குப் பயன்தரும் வகையில் மாற்றி அமைக்க வேண்டும் என்று கருதியது. இப்போது மாநிலம் மத்திய அரசிடம் வாங்கிய கடனுக்குத் தரும் வட்டி உயர்ந்து கொண்டே செல்கிறது. மத்திய அரசாங்கக் கடனுக்குத் தரும் வட்டி 0 முதல் $6\frac{1}{2}$ சதவீதம் வரை இருக்கிறது. தமிழக அரசு மத்திய அரசிடம் வெவ்வேறு ஆண்டுகளில் கழிவடையும் பதினொரு வித கடன்களைப் பெற்றுள்ளது. 1951-ல் மாநில அரசின் கடனுக்காக வருமானத்தில் 1·82% செலவு செய்யப்

பட்டது. 1967-ல் மொத்த வருமானத்தில் 13·75% தமிழக மாநிலக் கடனுடைய வட்டிக்காகவே செலவிடப்பட்டது. அதாவது 1951-ல் தமிழக மாநிலம் வட்டிக்காகச் செய்த செலவு ரூ. 41 இலட்சம்; 1968–69-ல் இத்தொகை ரூ. 15 கோடியாக உயர்ந்தது. இவ்வாறு வட்டிச் செலவு பெருகுவதால் மாநில அரசாங்கங்கள் செய்ய வேண்டிய மற்ற முக்கியமான செலவுகளுக்கான தொகை குறைகிறது.

கடன் வாங்கிய அசல் தொகையை மத்திய அரசாங்கத்திற்குத் திருப்பிக் கொடுப்பது எப்படி என்பது மற்றொரு தலையாய பிரச்சினையாக மாநிலங்களுக்குத் தோன்றுகிறது. இந்திய மாநில அரசாங்கங்கள் எல்லாம் வரவுக்கேற்ற செலவு என்ற கொள்கையினைப் பின்பற்றியிருந்தால் கடன் பிரச்சினைகள் தோன்றியிருக்கா. ஆனால், அரசாங்கங்களுக்கு ஏற்படும் நிதி நெருக்கடியினைப் போக்க ஒரே வழி மத்திய அரசிடமோ, வெளி அங்காடியிலோ கடன் பெறுவதாகும். மாநில அரசாங்கங்களின் அதிகக் கடன் தொகையை மக்களிடமிருந்தே எழுப்பியிருந்தால் பலவித நன்மைகள் ஏற்பட்டிருக்கும். பொதுக் கடன் உடைமை மக்களிடையே பரவலாக இருந்தால் பல நன்மைகள் உண்டு. ஆனால், இந்தியாவில் மாநிலங்கள் பெருவாரியான கடன் மத்திய அரசிடமிருந்து பெறுவதால் கடன் சுமை அதிகமாகத் தோன்றுகிறது. மத்திய அரசு மாநில அரசாங்கங்களுக்குத் தடையின்றிக் கடன் தருவதாலேயே சில விரும்பத்தகாத திட்டங்களையும் மாநில அரசுகள் ஏற்று நடத்தும். தமிழக மாநில அரசு மத்திய அரசிடம் பெற்ற கடன் தொகையைப் பயன்தரக்கூடிய திட்டங்களுக்காகவே செலவிடுகிறது. அத் திட்டங்களிலிருந்து குறுகிய காலத்திலே வருவாய் கிடைக்காமையால் கடன் சுமை அதிகமாகிக் கொண்டே வருகிறது. தமிழகத்தின் கடன் தொகையைக் குறைக்க, மற்ற நாடுகளில் பின்பற்றப்படும் தேய்வீத வரி முறையைப் பின்பற்ற முடியாது. இந்தியாவில் மாநில வரிகள் பெரும்பாலும் மறைமுக வரிகளாகும். வரிகளை உயர்த்திக் கடனைக் கழிப்பது கடினம். செலவினைக் குறைப்பதே சிறந்த முறையாகும்.

தமிழக அரசு ஆண்டுதோறும் மத்திய அரசாங்கத்திற்குத் திருப்பித் தரும் அசல் தொகை அதிகமாக இருக்கிறது. பல ஆண்டுகளுக்கு முன் ஆந்திரா, கேரளம் தமிழகத்தோடு சேர்ந்து சென்னையாக விளங்கியபோது வாங்கிய கடன்களையும் நமது மாநில அரசு சென்ற இரண்டு ஆண்டுகளில் திருப்பிக் கொடுத்தது. 1967–68-ல் தமிழக அரசு ரூ. 29·41 கோடிக் கடன் தொகையை மத்திய அரசாங்கத்திற்குத் திருப்பிக் கொடுத்தது, 1968–69-ல்

திருப்பிக் கொடுத்த தொகை ரூ. 43·16 கோடியாகும்.[1] 1969–70-ல் தமிழக அரசு மத்திய அரசுக்குத் திருப்பிக் கொடுத்த கடன் தொகை ரூ. 48·49 கோடியாகும். இந்தக் கடன் 1952–53-ல் ஆந்திரப் பிரதேச இராயல சீமாவில் ஏற்பட்ட பஞ்ச நிவாரணத்திற்காக மத்திய அரசிடமிருந்து வாங்கப்பட்டது.[2] தமிழக மாநிலக் கடன் பிரச்சினையைப்பற்றி 1971–72 ஆண்டுக்கான நிதிநிலை அறிக்கையில் கலைஞர் முதல்வர் கூறியதாவது.[3]

'1971–72ஆம் ஆண்டில் மத்திய அரசிடமிருந்து இம் மாநிலத்திற்குக் கிடைக்கக்கூடும் என எதிர்பார்த்த கடன்களின் மொத்தத் தொகை ரூ. 44·57 கோடியாகும். இவ்வாண்டில் நாம் மத்திய அரசாங்கத்திற்காகத் திருப்பியளிக்க வேண்டிய கடன் தொகை ரூ. 43·72 கோடியாகும்.........மத்திய அரசுக்கு 1971–72-ல் நாம் திருப்பிச் செலுத்த வேண்டிய கடன் தவணையோடு, வட்டிப் பணத்தையும் கூட்டிப் பார்த்தால் கடன் தீர்ப்புக்காக நாம் மத்திய அரசுக்காக இவ்வாண்டில் செலுத்த வேண்டிய தொகை, மாநில அரசிடமிருந்து இவ்வாண்டிற்காக நாம் பெற இருக்கும் மொத்தக் கடன் தொகையைவிட ரூ. 16 கோடி அதிகமாக உள்ளது'.

1970 மாரச்சு 31-ஆம் தேதி நிலுவையாக உள்ள தமிழக மாநிலக் கடன்களில் பெரும்பாலானவை பஞ்சம், பேரிடர் போன்றவற்றிற்கான நிவாரண வேலை மேற்கொள்ளவே செலவிடப்பட்டது.

ரூ. இலட்சத்தில்

| | | |
|---|---|---|
| பஞ்சத்தணிப்பு வேலைகளுக்கான கடன்கள் | ... | 126·81 |
| புயல் இடர்த்தணிப்பு வேலைகளுக்கான கடன்கள் | ... | 27·58 |
| பஞ்சத்தணிப்பு நடவடிக்கைகளுக்கான கடன்கள் | ... | 1,112 50 |
| பின் தங்கிய வகுப்பினர் நலனுக்கான கடன்கள் | ... | 0·80 |
| பர்மாவிலிருந்து தாயகம் திரும்பி வரும் இந்தியர்களுக்கு உதவியையும், மறு வாழ்வையும் அளிப்பதற்கான நடவடிக்கைகளுக்கான கடன்கள் | ... | 340·37 |
| பொற்கொல்லர் மறு வாழ்விற்காகக் கடன்கள் | ... | 157·83 |

1 Annadurai, C. N. — Budget Report 1967.
2 Mathialagan, K. A. — Budget Report 1969.
3 கருணாநிதி — 1971-72ஆம் ஆண்டு நிதிநிலை அறிக்கை பக்கம் 9.

கடன் நிர்வாகம் :—மாநிலங்களின் பொதுக்கடனைப் பின்வருமாறு பாகுபாடு செய்யலாம்.



குடியேற்றத் திட்டத்தின் கீழ்க்கடன்கள் ... 0·07

நிலமில்லாத தொழிலாளர்களை மீண்டும்
குடியமர்த்துவதற்கான கடன்கள் ... 28·46

ஒன்பது வகையான மத்திய அரசுக் கடன் ஆக்க வளமற்ற கடன் வகையினைச் சேர்ந்தது. முப்பத்தாறு வகையான கடன்கள் வட்டி செலுத்தக் கூடிய கடனுகைத் தொழில் வளர்ச்சிக்கும். வேளாண்மை உற்பத்திக்காகவும் மத்திய அரசிடமிருந்து வாங்கப் பட்டுள்ளன. இவை தவிரக் கிராமங்களில் மின் ஆற்றலைப் பரப்பவும், குடிநீர் வசதி பெருக்கவும், தேசிய வளர்ச்சிப் பணித் திட்டங்களைச் செயல்படுத்தவும் கடன் வாங்கப்பட்டுள்ளது. 1969-ல் தமிழக அரசு மத்திய அரசிடம் 437 வகையான கடன் பெற்றுள்ளது. அதன் மீது விதிக்கப்பட்ட வட்டி 0 முதல் 6½ சதவீதம் வரையாகும். மத்திய அரசு கொடுத்த கடன்களின் தவணைக்காலம் ஓராண்டு முதல் நாற்பது ஆண்டுகள் வரை உண்டு. இரண்டாவது நிதிக்குழு தனது அறிக்கையில் மாநிலங்களுக்கு மத்திய அரசு கொடுத்துள்ள வட்டியினையும், காலத்தவணையையும் மாநிலங்களுக்குச் சாதகமாக மாற்றியமைக்க வேண்டும் என்ற கருத்தைத் தெரிவித்தது. இருபது ஆண்டு தவணையுடைய கடன் களுக்கு 3% வட்டியும், இருபது ஆண்டுகளுக்குக் குறைவான தவணையுடைய கடன்களுக்கு 2½% வட்டியாகவும் விதிக்க நிதிக் குழு ஆலோசனை தெரிவித்தது. ஆனால், இந்த ஆலோசனைகளை மத்திய அரசு நிராகரித்தது. பம்பாய், மேற்கு வங்காளம், சென்னை போன்ற மாநிலங்கள் 1956-ல் மத்திய அரசுக் கடன் சுமை பெருகுவதைக் கண்டு, மத்திய அரசு தான்பெறும் கடன்களுக்கு அளிக்கும் வட்டியைவிட, மாநிலங்களுக்குக் கொடுக்கும் கடன்களின் மேல் அதிக வட்டி விதிக்கிறது என்று கருதின. மத்திய அரசாங்கம் அளிக்கும் கடனை உதவி மானியமாக மாநிலங்களுக்கு வழங்கினால், இந்தக் கடன் பிரச்சினைக்கு ஓரளவு தீர்வு காணமுடியும். மாநிலங்கள் மூலதனச் செலவைக் குறைத்தால் கடன் பிரச்சினையை ஓரளவு தவிர்க்க முடியும் என்று சில நிதியியல் பொருளாதார வல்லுநர்கள் கூறுகின்றனர். ஆஸ்திரேலியாவில் மாநிலங்களுடைய கடனுக்குத் தீர்வு காணும் பொருட்டு ஆஸ்திரேலியக் கடன் குழு ஒன்று (Loan Council of Australia) ஏற்படுத்தப்பட்டது. இந்தியாவிலும் ஒரு கடன் குழு ஏற்படுத்தினால் மாநிலக் கடன் பிரச்சினைகளுக்குத் தீர்வு காண இயலும்.

மாநிலக் கடன் பிரச்சினைகளுக்குத் தீர்வு காணத் திரு. க. சந்தானம் அவர்கள் ஒரு கட்டுரையில்[1] பின்வரும்

[1] K. Santhanam —

கருத்தினைக் கூறியுள்ளார். 'மத்திய அரசு மாநில அரசாங்கங்களுக்கு நேரடியாகக் கடன் தருவதை நான் விரும்பவில்லை. மாநில அரசாங்கங்கள் நேராக மக்களிடமிருந்து கடன் வாங்குவது சாத்தியமானால், அப்படிச் செய்ய மாநிலங்களை ஊக்குவிக்க வேண்டும். அதற்கும் மேல் கடன் தேவைப்பட்டால் மாநிலங்கள் ரிசர்வ் வங்கியிடம், மத்திய அரசு நிர்ணயித்த அளவு வாங்கலாம். அதற்கு மத்திய அரசு பொறுப்புறுதி தரவேண்டும். இந்த மாநிலக் கடன் நிர்வாகத்தைக் கவனிக்க ரிசர்வ் வங்கியிலேயே ஒரு தனித் துறை ஏற்படுத்தி வணிகச் சார்பாகக் கடன் வழங்க வேண்டும். மாநிலங்களுக்குக் கொடுக்கப்பட்ட கடன் உற்பத்திப் பெருக்கத்திற்காக உபயோகப்படுத்தப்பட்டதா என்பதை அறிய, நிர்வாகிகளும், ஆலோசகர்களும் கொண்ட குழுவினை ஏற்படுத்த வேண்டும். மற்றும் இப்போதுள்ள கடன் தொகையில் ஓரளவு ரூ. 50 கோடி தலாக்கடனை மாநிலக் கடனின் கணக்கிலிருந்து கழித்துவிட வேண்டும்.

மாநில அரசாங்கங்கள் திட்டத்திற்கு அல்லாத செலவினைக் கடன்கொண்டே செலவு செய்கின்றன. ஆனால், சுவீடன் போன்ற நாடுகளில் ஆக்கவளமற்ற திட்டங்களுக்குக் கடன் வாங்கிச் செலவு செய்யப்படமாட்டாது. வருவாய்க் கணக்கிலேயே இத்தகைய செலவு செய்யப்படுகிறது. இந்தியாவில் மாநிலங்கள் ஆக்கவளமற்ற திட்டங்களுக்கு வருவாய்க் கணக்கிலேயே ஒதுக்கீடு செய்ய வேண்டும் என்ற கொள்கையைப் பின்பற்றினால் இத்தகைய ஆக்கவளமற்ற திட்டச் செலவு குறையும். மாநில அரசாங்கங்கள் தமது செலவினைக் குறைக்கச் செலவு குறைப்புத் திட்டங்களைக் (Expenditure Control Schemes) கொணர்தல் நலம். திட்ட நிபுணர்களும், பொருளியல் வல்லுநர்களும் கொண்ட ஒரு செலவுக் குறைப்புக் குழு (Expenditure Control Commission)[1] அமைத்து, மாநிலச் செலவினைக் குறைக்கப் புதிய திட்டங்களை வகுத்துச் செயல்படுத்தினால் உதவியாக இருக்கும். இக்குழுவிற்கு மாநிலங்களின் முக்கிய செலவினங்களைத் தனிப்படுத்தி, அதற்குச் செய்யக்கூடிய செலவுத் தொகையையும் நிர்ணயிக்க அதிகாரம் அளிக்க வேண்டும்.

பொது நிதியியலில் பொதுக்கடனைக் குறைக்கப் பின்வரும் முறைகளைக் காணலாம். மாநில அரசாங்கங்கள் தாம் கொண்டுள்ள கடனைத் திருப்பித்தர இவ்வழிகளில் சில பொருந்துமா என்பதை ஆராய்வோம்.

[1] V. Shanmugasundaram —

மறுநிதியாக்கம் (Refunding) :

தவணை முடிந்த கடன் பத்திரங்களை ஈடு செய்வதற்காகப் புதிய கடன் பத்திரங்களை வெளியிடுவதே மறுநிதியாக்கம் (Refunding) என்று கூறுகிறோம். நடைமுறையில் உள்ள வட்டி விகிதங்கள் சாதகமானதாக இருக்கும்போது இப்படிப் பழைய கடன்கள் மறுநிதியாக்கம் செய்யப்படுகின்றன. பல மாநிலங்கள் பண அங்காடியில் கடன் வாங்கியிருந்தால் மேற்கூறிய முறையில் அக் கடனுடைய சுமையைக் குறைக்கலாம்.

மாற்றம் (Conversion) :

அரசாங்கக் கருவூலம் சில குறிப்பிட்ட நன்மைகளை அடைவதற்காகத் தற்போதைய கடன்களைத் தவணை முடிவதற்கு முன்பே மேற்கொள்ளுகின்ற ஒரு சிறப்பு வகை மறுநிதியாக்கமே மாற்றம் (Conversion) எனப்படுகிறது. பழைய கடனைப் புதிய கடனாக மாற்றப் பல காரணங்கள் உண்டு.

பழைய கடனைத்தரக் கடனை மாற்ற முயலும், அல்லது நடப்பு வட்டி விகிதம் குறைந்து காணப்பட்டால் அதிக வட்டியில் வாங்கப்பட்டக் கடன் குறைந்த வட்டிக்கடனாக மாற்றப்படும்.

கடன் கழிவு நிதி :

நிதியாக்கப்பட்ட கடனைத் திருப்பித்தர ஒதுக்கப்படும் நிதிக் கடன் கழிவு நிதி, கடன் கழிவு நிதிக்கான தொகை அரசாங்கப் பொது வருவாயில் இருந்து ஆண்டுதோறும் முறையாக ஓரளவு ஒதுக்கிச் செய்யப்படுகிறது. கூட்டரசு நாடுகளில் கடன் கழிவு நிதி ஏற்படுத்தி மாநில அரசாங்கங்கள் கடன் தொகையைக் குறைக்கின்றன. அமெரிக்காவில் 1972-ல் முதலில் திரு. அலெக்சாண்டர் ஹாமில்டனின் முயற்சியால் இது தோற்றுவிக்கப் பட்டது. இந்தியாவில் தமிழக மாநிலத்தில் 1938–39-க்கு முன்னரே கடன் கழிவு நிதி ஒன்றினை வருவாய்க் கணக்கில் செலவீடு செய்தனர்[1].

வரிசைக் கருவூல பாண்டுக் கழிவுமுறை (Serial Bond Redemption :

கருவூல பாண்டுகளின் கடனைத் திருப்பித் தரச் சில அரசாங்கங்கள் ஒவ்வோர் ஆண்டும் வரிசைப்படுத்தப்பட்டுள்ள பாண்டுகளில் ஓரளவினைப் பணமாகத் திருப்பித் தரும். மாநில அரசாங்கங்கள் கருவூல நோட்டுகள், கருவூல பாண்டுகள் மூலம்

[1] 1971–72-ஆம் ஆண்டு வரவு-செலவுத் திட்டவெள்ளை அறிக்கையின் இணைப்புகள், p. 5.

| ஆண்டு | கடன குறைப்புத் தொகை ஒதுக்கம். |
|---|---|
| 1938–39 | 5·13 |
| | (ரூ. இலட்சத்தில்) |
| 1962–63 | 106·57 |
| 1963–64 | 123·90 |
| 1964–65 | 125·96 |
| 1965–66 | 143·47 |
| 1966–67 | 688·86 |
| 1967–68 | 772·40 |
| 1968–69 | 854·72 |
| 1969–70 | 967·86 |
| 1970–71 (திருத்த மதிப்பீடு) | 967·82 |
| 1971–72 (மதிப்பீடு) | 1,027·85 |

எழுப்பிய கடனை இம் முறையில் கழிக்கலாம். அரசாங்கக் கடன் தாள்களை அரசாங்கமே வாங்குவது அரசாங்கக் கடனைக் கழிப்பதில் மற்றொரு முறையாகும் (Buying up Loans). அரசாங்கத்திடம் உபரி வருமானம் ஏற்படும்போது அந்த உபரித் தொகையைக் கொண்டு அரசாங்கம் முன்பு வெளியிட்ட கடன்களை மீட்க உபயோகப்படுத்தும். போர்க்காலத்திற்குப் பின் சில நாடுகளில் போரினால் அரசாங்கம் வாங்கிய கடனைத் தவிர்க்கப் போரின் பண வீக்கத்தால் அதிக இலாபமடைந்த வணிகர் மீது தலைவரி (Capital levy) விதிப்பதுண்டு. இந்த வரிவருவாய் அரசாங்கக் கடனைத் திருப்பித்தரவே உபயோகப்படுத்தப்படும்.

தமிழக மாநிலம் பல்வேறு கடன் கழிவு முறைகளில் ஒன்றாகக் கடன் கழிவு நிதி ஏற்படுத்தியுள்ளது. நமது அரசாங்கத்தின் வெளிச் சந்தைக் கடனும், கருவூல பாண்டுக் கடனும் மொத்தக் கடனில் சிறிய சதவீதமேயாகும். நமது மாநிலக்கடன் சுமையைக் குறைக்க மத்திய அரசு ஆவன செய்தல் வேண்டும். இன்று மாநிதி லதன்னுட்சிக்கு முற்பட்ட கடன் ரூ. 91·59 இலட்சமாகும்.

இந்தக் கடன் நிலுவையாக இருக்கிறது. இத்தகைய பழைய கடன்களை மத்திய அரசு கணக்கிலிருந்து நீக்குதல் அவசியம். இன்று தமிழக அரசாங்கத்திற்குக் கடன் பிரச்சினை தலையாய பிரச்சினையாக இருக்கக் காரணம் அதன் வருவாய் செலவுக்கேற்ப வளரும் தன்மையைக் கொண்டது அன்று. அமெரிக்கக் கூட்டாட்சியிலும் மத்திய-மாநில நிதி உறவுகளில் கடன் பிரச்சினை முக்கிய பிரச்சினையாக இருக்கிறது. அமெரிக்காவில் மாநிலக் கடன் பிரச்சினைக்குத் தீர்வுகாண செரால்டு கோம் (Gerald Colm), எல்ச்னர் (Helzner) என்பவர்கள் கூறிய கருத்து இந்தியச் சூழ்நிலைக்கு மிகவும் பொருந்தும்.[1]

தமிழகக் கடன் வளர்ச்சி

| ஆண்டு | மொத்த வருமானம் | மொத்தக் கடன் | கடன் செலவு | மொத்த வருமானத்தில் கடன் செலவு |
|---|---|---|---|---|
| 1951–52 | 58·38 | 50 49 | 0 08 | 1 04 |
| 1952–53 | 58 42 | 84·05 | 1·09 | 1·08 |
| 1953–54 | 63·79 | 105 33 | 0·22 | 0·89 |
| 1954–55 | 43·32 | 116·97 | 1·06 | 2·47 |
| 1955–56 | 52 09 | 113·46 | 0·04 | 1·82 |
| 1956–57 | 56 22 | 127·91 | 0·52 | 2·05 |
| 1957–58 | 62 56 | 144·98 | 2·02 | 3·65 |
| 1958–59 | 69·95 | 147 27 | 5·19 | 7·42 |
| 1959–60 | 81·10 | 179·31 | 5·99 | 7·39 |
| 1960–61 | 92·03 | 202·04 | 8 11 | 8 82 |
| 1961–62 | 92·17 | 230·09 | 5 86 | 6·36 |
| 1962–63 | 117 96 | 264·88 | 10·01 | 8·56 |
| 1963–64 | 134·76 | 302·77 | 12·05 | 9·28 |
| 1964–65 | 153·88 | 350·52 | 14·17 | 9·21 |
| 1965–66 | 172·79 | 416·52 | 17·37 | 10 04 |
| 1966–67 | 194·55 | 448·92 | 26·75 | 13 75 |

[1] Gerald colm & Helzner — Financial needs and resources over the next decade at all levels of Government NBER-public financier princeton, 1965. p. 20. 21.

1. மத்திய அரசாங்கத்தின் வரி அதிகாரங்களைக் குறைத்தோ, ஒழித்தோ, மாநில அரசாங்கங்களுக்குப் புதிய வரி அதிகாரங்களைத் தரவேண்டும்.

2. மத்திய-மாநில அரசாங்கங்களின் பணிகளை மாற்றி யமைக்க வேண்டும்.

3. வரி அதிகாரங்களில் திருத்தம்.

4. கூடுதலான உதவி மானியங்கள்.

5. மாநில அரசாங்கக் கடனுக்கு மத்திய அரசின் ஆதரவு.

6. நகர புதுப்பிப்புப் போன்ற பணிகளுக்கு மத்திய-மாநில இயக்கம்.

| 1961 | 1966 | சராசரி ஆண்டு வளர்ச்சி 1961–66 | 1967 | 1968 | 68–69 | மூன்று ஆண்டு சராசரி வளர்ச்சி |
|---|---|---|---|---|---|---|
| 493 | 824 | 11·2 | 907 | 974 | 1,019 | 7·4 |
| (18·0) | (15·0) | | (14·8) | (14·6) | (14·5) | |
| 42 | 195 | 56·5 | 81 | 44 | 46 | 33·2 |
| (1·5) | (3·5) | | (1.3) | (0·7) | (0.6) | |
| 2,016 | 4,095 | 15·2 | 4,721 | 5,153 | 5,413 | 9·8 |
| (73·7) | (74·4) | (76·9) | (76·9) | (77·0) | | |
| 51 | 156 | 24·7 | 170 | 189 | 203 | 9·2 |
| (1·9) | (2·8) | | (2.8) | (2.8) | (2·9) | |
| 135 | 232 | 11·5 | 261 | 306 | 351 | 14·6 |
| (4·9) | (4·2) | | (4·2) | (4·6) | (5·0) | |
| 2,737 | 5,502 | 15·00 | 6,140 | 6,666 | 7,032 | 8·6 |
| (100) | (110) | | (100) | (100) | (100) | |

கடன் நிலையைக் காட்டும் பட்டியல் (1) வெளிச்சந்தையிலிருந்து பெற்ற கடன்கள்

| வெளியிட்ட காலம் | கடன் விவரம் | வெளியிட்ட மொத்தத் தொகை | 1953-ம் ஆண்டு செப்டம்பர் 30-ஆம் தேதியில் நிலுவையாக உள்ள கடன் | 1956-ம் ஆண்டு அக்டோபர் 31-ஆம் தேதியில் நிலுவையாக உள்ள கடன் | 1970-ஆம் ஆண்டு மார்ச் 31-ஆம் தேதி நிலுவையாக உள்ள கடன். |
|---|---|---|---|---|---|
| அ : 1953ஆம் ஆண்டு அக்டோபர் 1ஆம் தேதிக்குமுன் பெற்ற கடன்கள். | | | | | |
| | | ரூ. இலட்சத்தில் | | | |
| செப்டம்பர் 1937ஆம் ஆண்டும் செப்டம்பர் 1940ஆம் ஆண்டும் | 1952-ஆம் ஆண்டு 3 சதவீதக் கடன்-முதல், இரண்டு வெளியீடுகள். ... | 233·54 | 0·80 | 0·28 | 0·08 |
| செப்டம்பர் 1938 | 1953ஆம் ஆண்டு 3% கடன் ... | 151·29 | 15·20 | 0·48 | 0·10 |
| ஜூன் 1939 | 1959ஆம் ஆண்டு 3% கடன் ... | 150 00 | 123·96 | 123·96 | 0·19 |
| செப்டம்பர் 1943 | 1956ஆம் ஆண்டு 3% கடன் ... | 125·10 | 125·10 | 3·12 | 0·06 |
| ஆகஸ்டு 1944 | 1958ஆம் ஆண்டு 3% கடன் ... | 110·00 | 107·95 | 107·92 | 0·13 |
| செப்டம்பர் 1945 | 1960ஆம் ஆண்டு 3% கடன் ... | 300·00 | 278·44 | 278·44 | 0·05 |
| செப்டம்பர் 1946 | 1961ஆம் ஆண்டு $2\frac{3}{4}$% கடன் ... | 409·30 | 381·77 | 381·77 | 0·05 |
| ஜூலை 1950 | 1960ஆம் ஆண்டு 3% திட்ட வளர்ச்சிக் கடன் பத்திரங்கள் ... | 439 75 | 438·25 | 438·25 | 0 25 |
| செப்டம்பர் 1951 | 1962ஆம் ஆண்டு $3\frac{1}{2}$% கடன் ... | 301·49 | 301·49 | 301·49 | 0·12 |
| ஆகஸ்டு 1952 | 1964ஆம் ஆண்டு 4% கடன் ... | 524·81 | 524·81 | 524·81 | 3·96 |
| ஜூலை 1953 | 1963ஆம் ஆண்டு 4% கடன் ... | 1,033·71 | 1,033·71 | 1,033·71 | 6·38 |
| | மொத்தம்-அ | 3,778·99 | 3,331·48 | 3,194·23 | 11·32 |

ஆ; 1953-ஆம் ஆண்டு அக்டோபர் 1-ஆம் தேதி முதல் 1956-ம் ஆண்டு அக்டோபர் 31-ம் தேதிவரை பெற்ற கடன்கள்.

| வெளியிட்டகாலம் | கடன் விவரம் | வெளியிட்ட மொத்தத்தொகை | 1956ஆம் ஆண்டு அக்டோபர் 31ஆம் தேதியில் நிலுவையாக உள்ள கடன் | 1970ஆம் ஆண்டு மார்ச் 31-ம் தேதியில் நிலுவையாக உள்ள கடன் |
|---|---|---|---|---|
| | | ரூ. இலட்சத்தில் | | |
| ஆகஸ்டு 1955 | 1967ஆம் ஆண்டு 4% கடன் | 1,047·17 | 1,047·17 | 10·70 |
| செப்டம்பர் 1956 | 1968ஆம் ஆண்டு 4% கடன் | 1,383·56 | 1,383·56 | 19·95 |
| | மொத்தம் – ஆ. | 2,430·73 | 2,430·73 | 30·74 |

## இ : 1956ஆம் ஆண்டு நவம்பர் 1ஆம் தேதிக்குப் பிறகு பெற்ற கடன்கள்

| வெளியிட்ட காலம் | | கடன் விவரம் | வெளியிட்ட மொத்தத் தொகை | 1956ஆம் ஆண்டு அக்டோபர் 31ஆம் தேதியில் நிலுவையாக உள்ள கடன் | 1970ஆம் ஆண்டு மார்ச்சு 31ஆம் தேதியில் நிலுவையாக உள்ள கடன் |
|---|---|---|---|---|---|
| | | | ரூ. இலட்சத்தில் | | |
| ஜூலை | 1958 | 1970ஆம் ஆண்டு 4¼% கடன் | 555·57 | — | 555·57 |
| ஆகஸ்டு | 1959 | 1971ஆம் ஆண்டு 4% கடன் | 872·75 | — | 872·75 |
| ஆகஸ்டு | 1960 | 1969ஆம் ஆண்டு 4% கடன் | 1,220·72 | — | 135·24 |
| செப்டம்பர் | 1961 | 1972ஆம் ஆண்டு 4¼% கடன் | 1,044·00 | — | 1,044·00 |
| ஆகஸ்டு | 1962 | 1974ஆம் ஆண்டு 4½% கடன் | 1,326·03 | — | 1,326·03 |
| ஆகஸ்டு | 1964 | 1976ஆம் ஆண்டு 4¾% கடன் | 1,433·13 | — | 1,433·13 |
| ஆகஸ்டு | 1965 | 1977ஆம் ஆண்டு 5½% கடன் | 1,445·10 | — | 1,445 10 |
| செப்டம்பர் | 1966 | 1978ஆம் ஆண்டு 5½% கடன் | 1,327·33 | — | 1,327·33 |
| மார்ச் | 1967 | 4% தமிழ்நாடு நில உச்ச வரம்பு இழப்பீட்டுப் பத்திரங்கள் | 104·01 | — | — |
| செப்டம்பர் | 1967 | 1979ஆம் ஆண்டு ¾% கடன் | 1,803·96 | — | 1,803·96 |
| செப்டம்பர் | 1968 | 1980ஆம் ஆண்டு 5¾% கடன் | 1,976·29 | — | 1,976·29 |
| | | 1981ஆம் ஆண்டு 5¾% கடன் | 2,194·68 | — | 2,194 68 |
| ஜூலை | 1970 | 1982-ஆம் ஆண்டு 5¾% கடன் | 1,820·07 | — | — |
| | | மொத்தம் | 17,123·64 | | 14,114.08 |

## (II) திரும்பப் பெறமுடியாத சிறப்புக் கடன்கள்

| | | மொத்தத்தொகை ரூ. இலட்சத்தில் |
|---|---|---|
| (1) | 1796–1807ஆம் ஆண்டுகளுக்கிடையில் வெளியிடப்பட்ட 8% கடன்களில் நான்கு பத்திரங்கள் ... | 1,33,000 |
| (2) | 1795–1817ஆம் ஆண்டுகளுக்கிடையில் வெளியிடப் பட்ட 6% கடன்களில் இரண்டு பத்திரங்கள் ... | 10,500 |
| (3) | 1817ஆம் ஆண்டில் பெறப்பட்ட 6% வட்டி வீதத்தை உடைய வைப்புத் தொகை ... | 41,770 |
| (4) | 4% வட்டி வீதத்தை உடைய ஒரு வைப்புத் தொகை (இப்போது இத் தொகை சென்னை ஸ்டான்லி மருத்துவ மனைக்கு அறக்கட்டளையாக வைக்கப் பட்டிருக்கிறது ... | 66,878 |
| | மொத்தம் (ii) ... | 2.52,148 அல்லது ரூ. 2·52 இலட்சம் |

### சுருக்கம்

வெளிச் சந்தையில் இருந்து பெறும் கடன்களும் திரும்பப் பெற முடியாத சிறப்பு கடன்களும்

| | | ரூ. இலட்சத்தில் |
|---|---|---|
| (1) | 1953ஆம் ஆண்டு செப்டம்பர் 30ஆம் தேதிக்கு முன்பு மக்களிடமிருந்து பெற்ற கடனில் நிலுவையாக உள்ள நமது பங்கு ... | 11·32 |
| (2) | 1953ஆம் ஆண்டு அக்டோபர் 1ஆம் தேதிக்குப் பிறகும், 1956ஆம் ஆண்டு அக்டோபர் 31ஆம் தேதிக்கு முன்பும் மக்களிடமிருந்து பெற்ற கடனில் நிலுவையாக உள்ள நமது பங்கு ... | 30·74 |
| (3) | 1956ஆம் ஆண்டு நவம்பர் மாதம் 1ஆம் தேதிக்குப் பிறகு எழுப்பப்பட்ட கடன்கள் ... | 14,114·08 |
| (4) | வெளிச் சந்தைக் கடன் வகையில், 1970ஆம் ஆண்டு மார்ச் 31ஆம் தேதியில் மொத்தப் பொறுப்பு ... | 14,156·14 |

| | மொத்த தொகை ரூ. இலட்சத்தில் |
|---|---|
| (5) மக்கள் தொகை விதாச்சாரத்தில் திருப்பப் பெறமுடியாத கடன்கள் குறித்து நமது பங்கு ... | 1·29 |
| (6) வெளிச் சந்தைக் கடன்கள், திரும்பப் பெற முடியாத சிறப்புக் கடன்கள், இவை காரணம் 1970 மார்ச் 31-ஆம் தேதியன்று மொத்தப் பொறுப்பு ... | 14,157·43 |

மத்திய அரசினரிடமிருந்தும் தன்னாட்சி உரிமையுடைய நிறுவனங்களிடமிருந்தும் பெற்ற கடன்களில் 1970 மார்ச் 31ஆம் தேதியன்று நிலுவையாக உள்ள கடன்களைக் காட்டும் அறிக்கை : (1956 நவம்பர் 1ஆம் தேதிக்கு முன்புள்ள கால அளவுக்கான புள்ளி விவரங்கள், மக்கள் தொகை வீதாச்சாரப்படி சீரமைத்த தமிழ் நாட்டின் தாற்காலிகப் பங்கைக் குறிக்கிறது :)

(அ. தமிழ்நாடு அரசு பெற்றுள்ள கடன்கள் :)

| | 1970 மார்ச்சு 31ஆம் தேதியன்றிருந்த நிலுவையாக உள்ள கடன்களில் தமிழ் நாட்டின் பங்கு ரூ. இலட்சத்தில் |
|---|---|
| மாநிலத் தன்னாட்சிக்கு முற்பட்ட மொத்தக் கடன் ... | 91·59 |
| 1947 ஆகஸ்டு 15ஆம் தேதியிலிருந்து 1952 செப்டம்பர் திங்கள் 30ஆம் தேதி வரையில் பெற்ற கடன்கள் ... | 1,038·17 |
| 1953 அக்டோபர் 1ஆம் தேதியிலிருந்து 1956 அக்டோபர் 31ஆம் தேதி வரையில் பெற்ற கடன் ... | 317·76 |
| 1956 நவம்பர் 1ஆம் தேதியிலிருந்து 1970 மார்ச் 31ஆம் தேதி வரையில் பெற்ற கடன்கள் ... | 31,677·18 |
| மொத்தம் அ. | 33,124·70 |

(ஆ) முன்னாள் திருவாங்கூர்–கொச்சி அரசாங்கம் பெற்ற கடன்கள்

| | | 1956 நவம்பர் 1ஆம் தேதிக்கு முன்பு முன்னாள் திருவாங்கூர் கொச்சி மாநில அரசாங்கம் எழுப்பிய கடன்களில் நிலுவையாக உள்ள கடனில் தமிழ் நாட்டின் பங்கு (ரூ. இலட்சத்தில்) |
|---|---|---|
| மாநிலத் தன்னாட்சிக்கு முற்பட்ட கடன் | ... | 1·24 |
| 1947 ஆகஸ்டு 15ஆம் தேதி முதல் 1956 அக்டோபர் 31ம் தேதிவரையில் பெற்ற கடன்கள் | ... | 5·50 |
| மொத்தம் | ... | 6·74 |

(இ) சுயேச்சைஅதிகார சபைகளிடமிருந்து பெற்ற கடன்களில் செல்லாகாமலுள்ள கடன்கள் (1970 மார்ச் 31ம் தேதியன்றிருந்தபடி)

| | | (ரூ. இலட்சத்தில்) |
|---|---|---|
| தேசியக் கூட்டுறவு வளர்ச்சிக் கழகத்திடமிருந்து பெற்ற கடன்கள் | ... | 588·26 |
| இந்திய ரிசர்வ் வங்கியைச் சேர்ந்த தேசிய வேளாண்மைக் கடன் (நீண்ட கால விவகார) நிதியிலிருந்து கடன்கள் | ... | 285·61 |
| அனைத்து இந்தியக் கதர்–கிராமத் தொழில்கள் ஆணைக் குழுவிடமிருந்து பெற்ற கடன்கள் | ... | 0·07 |
| இந்திய ஆயுள் காப்புறுதி நிறுவனத்திடமிருந்து பெற்ற கடன்கள் | ... | 1,370·73 |
| இந்திய ஸ்டேட் வங்கியிடமிருந்து கடன்கள் | | 2,836·00 |
| மொத்தம் இ | ... | 5,080·67 |
| பெரு மொத்தம் (அ+ஆ+இ) | ... | 38,212·11 |

பல்வேறு திட்டங்களுக்காக மத்திய அரசினரிடமிருந்து பெற்ற கடன்கள், 1970 மார்ச் 31ஆம் தேதியன்றுள்ளபடி நிலுவையாக உள்ள கடன்கள் இவை பற்றிய சுருக்கம்.

| தொடர் எண், | கடன் பற்றிய விவரம் | 1970 மார்ச் 31ஆம் தேதியன்றிருந்த நிலுவையாக உள்ள கடன்கள். |
|---|---|---|
| | கடன்கள் | ரூ. இலட்சத்தில் |
| 1. | மாநிலத் தன்னாட்சிக்கு மூற்பட்ட கடன்.... | 91 59 |
| 2. | கொச்சித் துறைமுக வேலைக்களுக்கான கடன்கள். ... | 1·24 |
| 3. | கைத்தறி, கதர்த் தொழில் வளர்ச்சிக் கான கடன்கள். ... | 319·65 |
| 4. | விடுதிக் கட்டடங்கள் கட்டுவதற்கான கடன்கள். ... | 112·72 |
| 5. | உதவித் தொகையுடன் நிறைவேற்றப் படும் தொழிலாளர் வீட்டு வசதித் திட்டத்திற்கான (தோட்டத் தொழி லாளர் வீட்டு வசதி உட்பட) கடன்கள். ... | 133·00 |
| 6. | மின் சக்தி வசதிகள் விரிவுக்கான கடன்கள் | 235·80 |
| 7. | சிறு சேமிப்பு வசூல்களைப் பங்கிடும் திட்டத்தின் கீழ்க் கடன்கள். ... | 3,919·00 |
| 8. | சிறுரகத் தொழில்கள் வளர்ச்சிக்கான கடன்கள். ... | 801·20 |
| 9. | அதிக உணவு உற்பத்தித் திட்டத்தின் கீழ்க் கடன்கள். ... | 447·48 |
| 10. | சமுதாய வளர்ச்சித் திட்டத்தின் கீழ்க் கடன்கள். ... | 646·98 |
| 11. | தேசிய வளர்ச்சிப் பணித் திட்டத்தின் கீழ்க் கடன்கள். ... | 1·83 |
| 12. | தொழில் நுட்பக் கூட்டுறவு உதவித் திட்டத்தின் கீழ் வழங்கப்பட்ட பொருள்கள், சாதனங்கள் விலை காரண- | |

| தொடர் எண், கடன் பற்றிய விவரம் | 1970 மார்ச் 31ஆம் தேதியன்றிருந்த நிலுவையாக உள்ள கடன்கள் |
|---|---|
| மாகக் கடன்கள்—சமுதாய வளர்ச்சித் திட்டம், கிராம மின்சார வசதித் திட்டம், குழாய்க் கிணறுத் திட்டம் ... | 50·79 |
| 13. காட்டுவள, மண்வளப் பாதுகாப்புத் திட்டங்களுக்கான கடன்கள். ... | 443·04 |
| 14. நெசவாளர் கூட்டுறவுச் சங்கங்களினுல் குடியிருப்புகள் கட்டப்படும் பொருட்டுக்கடன்கள் ... | 10·15 |
| 15. குறைந்த வருமானத் தொகுதியினருக்கான வீட்டு வசதித் திட்டத்தின் கீழ்க் கடன்கள். ... | 379·17 |
| 16. தேசிய நீர் வழங்கல்—சுகாதாரத் திட்டங்களின் கீழ்க் கடன்கள். ... | 162·13 |
| 17. பாசனம், மின் சக்தி முதலியவை போன்ற பல்வகை மேம்பாட்டுக் காரியங்களுக்கான கடன்கள். ... | 9,729·91 |
| 18. பாசனத் திட்டங்களுக்காகும் செலவிற்கு நிதியளிப்பதற்காகக் கடன்கள். | 79·11 |
| 19. பற்றுக்குறைப் பகுதிகளில் நிலையான மேம்பாடுகள் செய்யும் திட்டத்துக்காகக் கடன்கள் ... | 321·76 |
| 20. காவல் துறை வீட்டு வசதித் திட்டங்களுக்காகும் மூலதனச் செலவுக்காக நிதிஅளிக்கும் பொருட்டுக் கடன்கள். ... | 312·82 |
| 21. கூட்டுறவு வளர்ச்சிக்காகக் கடன்கள் (கூட்டுறவுச் சங்கங்களின் பங்கு மூலதனத்தில் பங்கு கொள்வதற்கான கடன்கள் உட்பட) ... | 37·51 |
| 22. சிறிய துறைமுகங்கள் வளர்ச்சிக்கான கடன்கள். | 126·81 |

| தொடர் எண். | கடன் பற்றிய விவரம். | 1970 மார்ச் 31ஆம் தேதியன்றிருந்த நிலுவையாக உள்ள கடன்கள் |
|---|---|---|
| | | ரூ. இலட்சம் |
| 23. | பஞ்சத் தணிப்பு வேலைகளுக்கான கடன்கள் ... | 27·58 |
| 24. | புயல் இடர்த் தணிப்பு வேலைகளுக்கான கடன்கள். | 427·51 |
| 25. | குடிசைப் பகுதி மேம்பாட்டுத் திட்டத்திற்கான கடன்கள். ... | 242·54 |
| 26. | கைப்பணிகள் வளர்ச்சிக்கான கடன்கள்... | 5·90 |
| 27. | பட்டுத் தொழில் வளர்ச்சிக்கான கடன்கள் ... | 3·13 |
| 28. | தரமான விதைகளைப் பெருக்கி வழங்குவதற்கான திட்டத்தின் கீழ்க்கடன்கள்.... | 0·91 |
| 29. | கயிறு தயாரிப்புத் தொழில் வளர்ச்சிக்கான கடன்கள் ... | 4·07 |
| 30· | குடியேற்றத் திட்டத்தின் கீழ்க் கடன்கள் ... | 0·67 |
| 31· | மத்திய அரசினர் ஊக்குவிக்கும், மத்திய அரசினரின் உதவி பெறும் மருத்துவப் பொதுச் சுகாதாரத் திட்டங்களுக்கான கடன்கள் ... | 1,818·13 |
| | மேம்பாட்டுத் திட்டங்களுக்கான (வேளாண்மை முதலியன) கடன்கள் ... | 2,667·43 |
| | திட்டங்களுக்கான கடன்கள் ... | 59·15 |
| 34. | ஒருங்கிணைந்த சென்னை மாநிலத்திற்கு வழங்கிய வழி-வகை முன் பணம் கடனாகக் கருதப்படுகிற வகையில் ... | 1,010·60 |
| 35. | கொழும்புத் திட்டத்தின் கீழ் குந்தா திட்டத்திற்காக வழங்கப்பட்ட | |

| தொடர் எண் | கடன் பற்றிய விவரம் | | 1970 மார்ச் 31ஆம் தேதியன்றிருந்த நிலுவையாக உள்ள கடன்கள். |
|---|---|---|---|
| | | | ரூ. இலட்சம் |
| | பொருள்கள்—சாதனங்கள் விலை குறித்த கடன்கள் | | — |
| 36. | பெரிய, நடுத்தரத் தொழில்கள் வளர்ச்சிக்கான கடன்கள் | ... | 1·95 |
| 37· | கிராம வீட்டு வசதித் திட்டங்களுக்கான கடன்கள் | ... | 33·64 |
| 38· | பதப்படுத்தும் –பாதுகாக்கும் யந்திரங்களை நிறுவுவதற்கான கடன்கள் | ... | 0·03 |
| 39. | மெட்ரிக் முறை எடைகள் அளவைகளை மேற்கொள்ளுவதற்கான கடன்கள் | ... | 3·69 |
| 40· | வீடுகட்டும் காரியங்களுக்காக அனைத் திந்திய அதிகாரிகளுக்குக் கடன்கள் | ... | 21·97 |
| 41. | சென்னைப் பால் வழங்கு திட்டத்திற்கான கடன்கள்–நியூஜிலாந்து உதவி | ... | 4·07 |
| 42. | கால்நடை வளர்ப்பு, பால்பண்ணை, மீனவளம் ஆகிய திட்டங்களுக்கான கடன்கள் | ... | 343·85 |
| 43. | நிலமில்லாத தொழிலாளர்களை மீண்டும் குடியமர்த்துவதற்கான கடன்கள் | ... | 28·46 |
| 44. | கிராம மக்களுக்கு வேலை வாய்ப்பளிக்க வேலைத்திட்டங்களுக்குக் கடன்கள் வழங்குதல் | ... | 129 58 |
| 45. | கிராமங்களுக்கு மின்சார வசதிக்கான கடன்கள் | ... | 4,090·07 |
| 46. | பொது மக்களிடமிருந்து எழுப்பிய கடன்களிலிருந்து கடன்கள் வழங்குதல் | ... | 1,300·00 |
| 47. | பொற்கொல்லர்கள் மறுவாழ்விற்கான கடன்கள் | ... | 157·83 |

| தொடர் எண், | கடன் பற்றிய விவரம் | 1970 மார்ச் 31ஆம் தேதியன்றிருந்த நிலுவையாக உள்ள கடன்கள். |
|---|---|---|
| | | ரூ. இலட்சம் |
| 48. | பாரத் சேவக் சமாஜத்திற்காக மேசை, நாற்காலி போன்ற பொருள்களை தயாரிப்பதற்குக் கடன்கள் ... | 0·02 |
| 49. | தேசிய கடன்–உபகாரச் சம்பளத் திட்டத்தின் கீழ்க்கடன்கள் ... | 199·27 |
| 50. | கிராமதான–பூதானப் பகுதிகளில் கூட்டுறவுச் சங்கங்களுக்குக் கடன்கள் வழங்குதல் ... | 8·98 |
| 51. | கிராமத் தொழில்களின் மும்முர வளர்ச்சிக்கான கடன்கள் ... | 53·27 |
| 52. | சிறப்புவளர்ச்சித் திட்டத்திற்கான கடன்கள் (விரைவுத் திட்டம்) ... | 144·49 |
| 53. | பர்மாவிலிருந்து தாயகம் திரும்பி வரும் இந்தியர்களுக்கு உதவியையும், மறு வாழ்வையும் அளிப்பதற்கான நடவடிக்கைகள் ... | 340·37 |
| 54. | நில அடைமான வங்கியின் கடன் பத்திரங்களை வாங்க முன்பணம் ... | 335·52 |
| 55. | பயன் துய்ப்போர் கூட்டுறவுப் பண்டகசாலைகளின் விரைவுத் திட்டத்திற்கெனக் கடன்கள் ... | 100·20 |
| 56. | மாநிலங்களுக்கிடையில் பற்று வரவுக்கான கடன் வழங்கு திட்டம் ... | 73·37 |
| 57. | பஞ்சத் தணிப்பு நடவடிக்கைகளுக்கான கடன்கள் ... | 1,112·50 |
| 58. | பின் தங்கிய வகுப்பினர் நலனுக்காக கடன்கள் ... | 0·80 |
| 59. | முக்கியத்துவம் பெற்ற மாநிலச் சாலைகள் ... | 16·20 |
| | பெரு மொத்தம் ... | 33,131·34 |

| | கணக்குகள் 1966–67 | கணக்குகள் 1967–68 | கணக்குகள் 1968–69 | கணக்குகள் 1970–66 | 1970–71 வரவுசெலவுத் திட்ட மதிப்பீடு | 1971–72 திருத்த மதிப்பீடு | 1972–73 வரவு செலவு திட்ட மதிப்பீடு |
|---|---|---|---|---|---|---|---|
| | ஆ : கடன் கரைப்பு நிதி | | | | | | |
| | | | ரூ. இலட்சத்தில் | | | | |
| பொதுமக்களிடமிருந்து எழுப்பிய கடன்களின் கடன் தேய்மான நிதிக்கு உதவித் தொகை ... | 148·12 | 155·26 | 165·44 | 176·78 | 201·36 (இ) | 201·35 | 215·55 |
| பொதுக்கடன் கரைப்புநிதிக்கு உதவித் தொகை. ... | 534·99 | 608·95 | 689·27 | 680·35 | 766·50 (ஈ) | 766·47 | 812·30 |
| இந்திய ஆயுள் காப்புறுதி நிறுவனத்தின் கடன்களுக்கான கடன் கரைப்பு நிதிக்குத் தொகை வழங்கல் ... | 5·75 | 8·19 | — | — | — | — | — |
| மொத்தம்—ஆ | 688·86 | 772·40 | 854·71 | 857·13 | 967·86 | 967·82 | 1,027·85 |
| பெரு மொத்தம்–கடன் செலவுகள் (நிகரம்) | —2,675·39 | 3,055·95 | 3,326·31 | 3,724·25 | 4,041·39 | 4,115·24 | 4,358.26 |

குறிப்பு :—(அ) 1969ஆம் ஆண்டு செப்டெம்பர் மாதம் எழுப்பிய புதிய கடன் மீது ஒரு முழு ஆண்டிற்கான வட்டிக்கு நிதி ஒதுக்கம் செய்துள்ளதால் மதிப்பீடு அதிகரித்துள்ளது.

(ஆ) ரிசர்வ் வங்கியிலிருந்து பெறக்கூடிய குறுகிய காலக் கடன்களுக்கான வட்டிச் செலவு குறித்து ஒதுக்கிய மொத்தத் தொகை.

(இ) 1969-70-ல் கிடைத்த கடன்களுக்காகக் கொடுக்கத்தக்க கூடுதல் வட்டி இந்த அதிகரிப்புக்குக் காரணமாகும்.

(ஈ) வெளிச் சந்தைக் கடனை முழுவதும் கரைப்பதற்காக நிதி ஒதுக்கம் செய்யப்பட்டுள்ளது.

## கடனுக்குரிய வட்டி முதலிய செலவுகள் 1965-66 முதல் 1971-72 வரை

| | 1966-67 கணக்குகள் | 1967-68 கணக்குகள் | 1968-69 கணக்குகள் | -70 கணக்குகள் | 1970-71 வரவு செலவுத் திட்ட மதிப்பீடு | 1970-71 இருத்த மதிப்பீடு | 1971-72 வரவு செலவுத் திட்ட மதிப்பீடு |
|---|---|---|---|---|---|---|---|
| அ. வட்டி | | | | ரூ. இலட்சத்தில் | | | |
| வெளிச்சந்தைக் கடன்களுக் கான வட்டி நிகரம் ... | 455·10 | 517·44 | 580·76 | 712·84 | 773·58 (அ) | 774·21 | 856·45 |
| கடனில் தள்ளுபடி ... | 19·87 | 36·17 | 39·41 | 11·36 | 11·50 | — | — |
| இந்திய ரிசர்வ் வங்கி கொடுத்த வழிவகை முன் பணத்தின் மீது வட்டி ... | 33·14 | 29·70 | 40·43 | 64·81 | 61·69 (ஆ) | 80·00 | 80·00 |
| புதிய கடன் எழுப்புதல் முதயலிவற்றிற்கான செலவு... | 2·53 | 3·06 | 17·65 | 4·26 | 4·15 | 4·16 | 4·41 |

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| இந்திய அரசு கொடுத்த் கடன்களுக்கான வட்டி ... | 1,225·50 | 1,426·61 | 1,474·54 | 1.537·18 | 1,423·69 (இ) | 1,623·91 | 1,656·49 |
| தன்னாட்சி உரிமை பெற்ற நிறுவனங்களிடமிருந்து பெற்ற கடன்களுக்கான வட்டி ... | 120·59 | 130·54 | 149·24 | 292·65 | 431·50 | 317·37 | 274·08 |
| வருங்கால வைப்பு நிதிக்கான வட்டி ... | 83·34 | 90·33 | 111·55 | 131·25 | 132·66 | 157·65 | 176·27 |
| தேய்மான சேமநிதி, ஏனைய வட்டி பெறும் வைப்புத் தொகைகளுக்கான வட்டி... | 46·46 | 49·70 | 58·02 | 112·77 | 234·07 | 190·12 | 282·71 |
| மொத்தம் அ. | 1,986·53 | 2,283·55 | 2,471·60 | 2,867·12 | 3,073·53 | 3,147·42 | 3,330·41 |

வளரும் தமிழகக் கடன் வட்டி
(1961—'66)

ரூ. கோடியில்



## வளரும் தமிழகக் கடன்
## 1955 முதல் 1966 வரை



# 6. மைய மாநில நிதி உறவுகள்

கூட்டரசு நாடாகிய இந்தியாவில் இந்திய நிதிக்குழு மத்திய மாநில நிதி உறவுகளைப் பயனடையும் வகையில் மாற்றியமைக்கும் தனிச் சிறப்பும் அதிகாரமும் பெற்றுள்ளது. மத்திய-மாநில அரசாங்கங்களுக்கிடையே தோன்றும் நிதிப்பிரச்சினைகளுக்கு நேர்மையான முறையில் தீர்வு காணும் பணியே இந்த நிதிக் குழுவின் முக்கிய பணியாகும். மத்திய அரசின் நிதியையும் மாநில அரசின் நிதியையும் கட்டுப்படுத்தவும் உபயோகமான முறையில் ஒருங்கிணைக்கவும் இக்குழு செயல்படுகின்றது. மற்ற எந்தக் கூட்டரசிலும் அரசியல் சட்டத்தில் இடம் பெற்ற நிதிக் குழுவினைக் காண்பது அரிது. இந்திய நிதிக்குழு நிதிக் கோட்பாட்டிற்கும் அதன் இயங்கு முறைக்கும் உதவும் வகையில் அமைக்கப்பட்ட தனிச்சிறப்பு வாய்ந்த படைப்பு என்று கூறலாம். இந்திய நிதிக் குழு ஆஸ்திரேலிய காமன்வெல்த் மானியக் குழுவைப் போல் தோன்றினாலும் இவ்விரண்டு குழுக்களுக் கிடையே பல வேறுபாடுகள் உண்டு. ஆஸ்திரேலிய மானியக்குழு இந்திய நிதிக்குழுவின் மறுவடிவம் என்று சிலர் கூறுவர். ஆனால், ஆஸ்திரேலிய மானியக்குழு தாற்காலிகமாகப் பெரு மந்தம் ஏற்பட்டபோது அமைக்கப்பட்டது. அரசியல் சட்டத்தில் அதன் அமைப்பைப்பற்றியோ அதன் பணியைப்பற்றியோ குறிப்பிடப் படவில்லை. ஆஸ்திரேலிய மானியக்குழுவின் ஒரு முக்கிய பணி மேற்கு ஆஸ்திரேலியா, தென் ஆஸ்திரேலியா, டாஸ்மேனியா போன்ற பின்தங்கிய மாநிலங்களுக்குச் சிறப்பு உதவி மானியம் வழங்குவதாகும். சிலசமயம் இக்குழு இந்த மாநிலங்களுக்கு ஒருமை வரிச் சட்டம் 6 வது பிரிவுப்படி சிறப்பு மானியங்கள் வழங்கவும் சிபாரிசு செய்தது. ஆனால், இப்பணி இக்குழுவின் அதிகாரத்தையோ திறனையோ உயர்த்தவில்லை. ஏனெனில், இத்தகைய சிறப்புப்பணிகளுக்கு அடிபடையான கோட்பாடு ஒன்றே. திரு H. P. பிரவுன் கூறியது போல இக்குழுவிடம் உதவி

மானியங்களுக்கும் ஒருமை வரிச்சட்டப்படி சிறப்பு மானியங்கள் வழங்குவதற்குமான சிபாரிசுகளைத் தவிர வேறு எந்த விதமான பரிவுரையும் கோரப்படவில்லை.[1] ஆனால், இந்திய நிதிக்குழுவின் பணிகள் மத்திய-மாநில நிதி உறவுகளைப் பலவகைகளில் கட்டுப் படுத்துகின்றது. 1940-ல் கனடாவில் மத்திய-மாநில அரசியல்) குழு (Royal Commission on Dominion Provincial relations) 1940-ல் ஒரு நிதிக்குழுவினை உருவாக்க ஆலோசனை கூறியது. ஆனால், இந்தச் சிபாரிசு செயல்படுத்தப்படவில்லை.

இந்திய அரசியல் சட்டத்தில் மத்திய மாநிலப் பணிகளையும், நிதி அதிகாரங்களையும் மிக விரிவாகவே பகிர்ந்தளித்தும், மத்திய மாநில சச்சரவுகளுக்குத் தீர்வுகாண ஒரு நிதிக்குழு அவசியம் என்று அரசியல் சட்டம் இயற்றினோர் விரும்பினர். கூட்டரசு நாடுகளில் மாநில அரசுகளின் பணிகளுக்கேற்ப வரி வாயில்களைப் பகிர்தல் கடினம். மேலும், இந்தியாவில் சமுதாயப் பொதுப்பணி வளர்ச்சி மாநில அரசின் பொறுப்பாகும். அரசியல் சட்டம் இயற்றினோர் இத்தகைய ஏற்பாட்டினால் மாநிலங்களின் வருவாய் செலவிற்கேற்பக் குறைவாகவே இருக்கும் என்று எண்ணி மத்திய அரசு வரிகளின் மொத்த வருவாயில் ஓரளவு மாநிலங்களுக்கு உதவி மானியமாகவும் வரி வருவாய் பகிர்தல் மூலமும் நிதி உதவி அளிக்க எண்ணினர்.

அரசியல் சட்டத்தில் சில முக்கிய வரிகளின் வருவாயினை மத்திய அரசு மாநில அரசுகளோடு கட்டாயமாகப் பகிர வேண்டு மென்றும், சில வரிகள் மத்திய அரசின் விருப்பத்திற்கேற்ப மாநிலங்களோடு பகிரவும் திட்டமிடப்பட்டது. மாநிலங்கள் மத்திய அரசின் கட்டுப்பாட்டிலிருந்து தனியே இயங்கப் பகிர்வுத் திரட்டில் பங்கும், உதவி மானியங்களும் அளிக்கவே நிதிக்குழு அமைக்கப்பட்டது. இந்திய அரசியல் சட்டம் அமுலாக்கப்பட்ட இரண்டாண்டுகளுக்குப் பின் குடியரசுத் தலைவர், அரசியல் சட்டத்தின் 280-வது பிரிவின்படி ஒரு நிதிக்குழு அமைக்கவும் பின்னர் ஐந்தாண்டுகளுக்கு ஒருமுறை அத்தகைய நிதிக்குழு அமைக்கவும் அரசியல் சட்டத்தில் அதிகாரம் வழங்கப்பட்டுள்ளது. இத்தகைய நிதிக்குழு அரசாங்கத் துறையிலை அனுபவமிக்க ஒருவரைத் தலைவராகக் கொண்டு 4 அங்கத்தினர்கள் கொண்ட குழுவாகும். நிதிக்குழு அங்கத்தினர்கள் பின்கண்ட தகுதி கொண்டவர்களாக இருத்தல் அவசியம்.

[1] Brown, H. P— Some aspects of Federal state Financial relations in 'Federalism'.

1. நீதிபதியாகப் பணியாற்றியவர்களும் அல்லது அத் தகுதி உடையவர்களும்,
2. அரசாங்க நிதிக் கணக்கிலும் நிதியியலிலும் தேர்ச்சி பெற்றவர்களும்,
3. நிதி நிர்வாகத்திலும் பொது நிர்வாகத்திலும் அதிக அனுபவம் பெற்றவர்களும்,
4. பொருளியல் வல்லுநர்களும்.

இந்திய நிதிக் குழுவின் முக்கிய பணிகள் அரசியல் சட்டத்தில் 280-வது பிரிவில் குறிப்பிடப்பட்டுள்ளன.

அ. மத்திய மாநில அரசுகளுக்கிடையே பகிரக்கூடிய வரிகளைப் பகிர்ந்தளித்தல்,

ஆ. இந்திய அரசின் மொத்த வருமானத் தொகையில் இருந்து மாநிலங்களுக்கு வழங்கப்படும் உதவி மானியங்களுக்கான அடிப்படைக் கோட்பாடுகளை (Basic principal of distribution) நிர்ணயித்தல்,

இ. இந்தியக் குடியரசின் ஆலோசனைக்கிணங்க மாநில அரசாங்கங்களின் நிதி நிலையினை உயர்த்துவது பற்றி ஆராயவும், இந்திய நிதி ஆணைக்குழு அமைக்கப்படுகிறது.

இந்தியக் குடியரசு 1951 முதல் ஐந்து நிதிக்குழுக்களை அமைத்துள்ளது. இந்திய நிதிக்குழு தன் பணிகளைச் செயல்படுத்துவதில் தனக்கே உரிய பாணியில் ஒவ்வொரு மாநிலங்களுக்கும் சென்று அமைச்சர்களையும், திட்டக்குழு அங்கத்தினர்களையும், தொழில், வாணிபத்துறை உறுப்பினர்களையும் சந்தித்து, அவர்களுடைய கருத்துக்களை ஆய்ந்த பின்னரே குடியரசுத் தலைவருக்குப் பரிவுரை செய்கிறது. இந்திய நிதிக் குழு குடியரசுத் தலைவருக்குப் பரிவுரைகளை அளிக்கலாமே தவிரக் குடியரசுத் தலைவர் நிதிக் குழுவின் பரிவுரைகளைக் கட்டாயமாக ஏற்றுக் கொள்ள வேண்டியதில்லை. ஒரு கூட்டரசு நாட்டில் இத்தகைய அதிகாரங்கள் கொண்ட ஒரு நிதிக் குழுவினை ஏற்படுத்தி அதன் பரிவுரைகளைக் குடியரசுத் தலைவர் நிராகரிக்க அதிகாரம் கொடுப்பதால் அக் குழுவின் பணியினால் எந்தவித நன்மையும் இருக்காது என்று அரசியற் புனர்சபை அங்கத்தினர்கள் எண்ணினர். திரு. பண்டிட் இருதயநாத் குன்சுரு நிதிக் குழுவின் பரிவுரைகள் அவசர காலத்தைத் தவிரமற்றயைகாலங்களில் அரசாங்கம் ஏற்கும் என்று

எதிர்பார்த்தார்.[1] Dr. B. N. ராவ் எந்த அமைச்சரவையும் குடியரசுத் தலைவருக்கு நிதிக்குழு சிபாரிசுகளை எதிர்க்க ஆலோசனை வழங்கக்கூடாது என்று விரும்பினர்.[2]

கடந்த 20 ஆண்டுகளில் 5 நிதிக் குழுக்கள் அமைக்கப்பட்டன. ஆனல், இருமுறை மட்டும் நிதிக் குழுவின் பரிவுரையை அரசாங்கம் ஏற்றுக் கொள்ளவில்லை. இரண்டாவது நிதிக்குழு (1957) அளித்த பல சிபாரிசுகளில் ஒன்று மாநிலங்களின் மத்திய அரசுக் கடனைத் தொகுதியாக்கவும், வட்டி வீதத்தை மாற்றி அமைக்கவும் விரும்பியது. ஆனல், இந்தச் சிபாரிசை மத்திய அரசு ஏற்றுச் செயல்படுத்தவில்லை. மூன்ருவது நிதிக்குழு மாநிலத் திட்டங் களுக்காக வரி வருவாய்க் கணக்கில் 75 சதவீதம் மத்திய அரசு அளிக்க வேண்டும் என்று ஆலோசனை கூறியது. ஆனல், இக்கருத்தை எதிர்த்த மூன்ருவது நிதிக்குழு அங்கத்தினர் திரு. சமத் விருப்பப்படி மத்திய அரசாங்கம் திட்டத்திற்கு உதவி மானியம் அளிப்பது அவசியமில்லை என்று எண்ணியது. மற்றப் பரிவுரைகளை எல்லாம் மத்திய அரசாங்கம் எந்த மாறுதலும் இன்றி ஏற்றுக்கொண்டது.

நிதிக்குழுவின் பரிவுரைகள் மூன்று வகையான முறைகளில் நிறைவேற்றப்படுகின்றன.

1. குடியரசுத் தலைவர் ஆணைமேல் நிறைவேற்றப்படுவது.

2. சட்ட நிறைவேற்றுத் துறையால் செயல்படுத்தப் படுபவை.

3. மக்கள் சபைச் சட்டம் மூலம் நிறைவேற்றப்படுபவை.

மூன்ருவது நிதிக்குழு உதவி மானியத்தைப் பற்றி அரசியல் சட்டப்பிரிவு 270 படி அளித்த பரிவுரைகள் முதலாவது முறையில் குடியரசுத் தலைவர் ஆணைமேல் நிறைவேற்றப்படுகின்றன. மத்திய ஆயத்தீர்வை, சொத்துவரி முதலிய வரிகளை மாநிலங்களிடையே பகிர்தல் பற்றிய பரிவுரைகள் இரண்டாவது முறையில் நிறை வேற்றப் படுகின்றன.

கூடுதல் ஆயத்தீர்வை பகிர்தல் மூன்ருவது முறைப்படி நாடாளுமன்றத்தால் நிறைவேற்றப்படுகிறது.

1951க்குப் பிறகு அமைக்கப்பட்ட ஐந்து நிதிக்குழுக்கள் 1952, 1957, 1961, 1965, 1969-ல் அறிக்கைகளைச் சமர்ப்பித்தது.

[1] Pandit Hirudaynath Kunzru — 'Constituent Assembly'.
[2] B. N. Rao. CAo Vol IX P. 258 — P. 384.

வருமான வரி வருமானத்தில் மாநிலங்களுக்குப் பகிர்ந்து தரப் படும் தொகை 50 சதத்தில் இருந்து 75 சதத்துக்கு உயர்த்தப் பட்டது. மத்திய அரசு ஆயத்தீர்வை 1952-ல் முதல் நிதிக்குழு அறிக்கைப்படி மூன்று பொருள்கள்மீது விதிக்கப்படும் வருவாயில் 40 சதம் மாநிலங்களுக்குப் பகிரப்பட்டது. 1967-ல் எல்லாப் பொருள்கள்மீது விதிக்கப்படும் மத்திய அரசு ஆயத்தீர்வை வருவாய் மாநிலங்களுக்குப் பிரித்துத் தரப்படுகிறது. இதைத் தவிர அரசியல் சட்டத்தில் பிரிவு 275-ன் படி மத்திய அரசு மாநிலங் களுக்கு அளிக்கும் உதவி மானியத் தொகை 33·9 கோடியிலிருந்து 458·3 கோடியாக 1852 முதல் 1969 ஆண்டுகளில் உயர்ந் துள்ளது.

மாநிலங்கள் மத்திய அரசிடம் பெறும் நிதி உதவி உயர்ந்து கொண்டேயுள்ளது. மேலும், மாநிலங்கள் திட்ட நிதித் தேவைக்கு மத்திய அரசினை நம்ப வேண்டியுள்ளது. மாநிலங்கள் மத்திய அரசின் நிதி உதவியை நாடியிருப்பதால் தன்னாட்சி உரிமையை ஓரளவு இழக்கும் நிலை ஏற்பட்டுள்ளது. மாநிலங் களின் பொருளாதார வளர்ச்சிக்கு இன்றியமையாததாக நிதித் துறையில் பலமான, நிலையான, மத்திய அரசு அவசியம். ஆனால், நிதிக்குழு தனது பரிவுரைகளில் மாநிலங்களின் பொறுப்பினை உணர்ந்து பொருளாதார வளர்ச்சிக்கும் சமுதாயப் பணிகளை மேற் கொள்ளவும் ஏற்றவாறு உதவி வருகின்றது. மாநிலங்களின் வருவாய் வளர்ச்சி போதிய அளவு இல்லாமல் இருப்பதை நிதிக் குழு நன்கு உணர்ந்துள்ளது.

1951-ல் திரு. நியோஜி தலைமையில் முதல் நிதிக்குழு அமைக் கப்பட்டது. பின் தங்கிய மாநிலங்களுக்கு அதிக உதவி புரியும் நோக்கத்தோடு முதல் நிதிக்குழு தனது பணியைத் தொடங்கியது. எல்லா மாநிலங்களிடையேயும் ஒரே தரமான முன்னேற்றம் அடைவது அரிதாயினும் எந்த மாநிலமும் பொருளாதார வளர்ச்சியில் பின் தங்கியிருத்தல் நலமன்று என முதல் நிதிக்குழு எண்ணிற்று. அதற்கேற்ப உதவி மானியங்கள் வழங்குவதிலும் ஆயத்தீர்வையை மாநிலங்களிடையே பகிர்வதிலும் பின் தங்கிய மாநிலங்களுக்கு உதவும் வகையில் ஓர் அடிப்படை விதியை மேற் கொண்டது.

தமிழக அரசு நிதிக்குழுவிற்குச் சமர்ப்பித்த அறிக்கையில் நிதி வழங்கும் முறையில் சில மாற்றங்கள் ஏற்படுத்த வேண்டியுள்ளது. வருமானவரி பகிர்வுத் திரட்டில் மாநிலங்களுக்கு 60 சதவீதம் வழங்கவும் ஆயத்தீர்வை வருமானத்தில் 50 சதவீதம் வழங்கவும்

## முதலாவது நிதிக்குழு பரிவுரைச் சுருக்கம்

| தலைப்பு | பகிர்வுத் திரட்டில் மாநிலங்களின் பங்கு | பகிரும் முறை | மொத்த அளவு |
|---|---|---|---|
| 1. அரசியல் சட்டப்பிரிவு 269 படி வருமான வரிப் பகிர்வு ... | 55% | 80% மக்கள் தொகை<br>20% வசூல் தொகை | 218 கோடி |
| 2. ஆயத்தீர்வை (3 பொருள்களின் ஆயத்தீர்வை வருமானத்தில்) ... | 40% | மக்கள் தொகை அடிப்படையில் | 27 கோடி |
| 3. திட்டத்திலில்லாத உதவி மானியம் (அரசியல் சட்டப்பிரிவு 275 படி) | | 1. வரவு-செலவு திட்டப் பற்றுக்குறை<br>2. வரி முயற்சி<br>3. மாநிலத்தின் பின்தங்கிய நிலை<br>4. எதிர்பாராத செலவு<br>5. செலவு குறைப்புத் திட்டங்கள்<br>6. நாட்டு முக்கியத்துவம் வாய்ந்த திட்டங்களுக்கு ஊக்கமளித்தல். | |

நிதிக்குழுவிற்கு வேண்டுகோள் விடுத்தது. 1953-ல் ஆந்திர மாநிலம் பிரிந்தமையால் வரிவருமானம் குறைந்தது. நிதிக்குழு வழங்கிய நிதி மாநில நிதிப்பிரச்சினைகளுக்குத் தீர்வு காணப்போதவில்லை.

திரு. க. சந்தானம் தலைமையில் அமைக்கப்பட்ட இரண்டாவது நிதிக்குழு மாநிலங்களின் கடன் சுமையைக் குறைக்கும் நோக்கத்தோடு பணியைத் தொடங்கியது.

மாநிலங்களின் செலவிற்கேற்ப அவற்றின் வருமானம் இருத்தல் நலம்[1] என்று இக்குழு கருதியது. மேலும் இந்தியக் கூட்டரசில் ஏற்பட்டுள்ள நிதிப்பிரச்சினைகளுக்குத் தீர்வு காண அரசியல் சட்டத்தில் மாற்றங்கள் ஏற்படுத்துவதின் அவசியத்தையும் இக்குழு சிபாரிசு செய்தது.[2]

இரண்டாவது நிதிக்குழு மாநிலங்களுக்கு வரிகள் பகிர்தல் மூலம் 851·77 கோடியும் உதவி மானியம் வழியாக 197·20 கோடியும் அளித்தது. இரண்டாவது நிதிக் குழுவின் முக்கிய பரிவுரைகள் பின்வருமாறு.

தமிழக அரசு சமர்ப்பித்த வேண்டுகோளில் வருமானவரி பகிர்வுத் திரட்டில் 60 சதமும் ஆயத்தீர்வைத் திரட்டில் 50 சதமும் மாநிலங்களுக்கு வழங்கக் கோரிக்கை விடுத்தது. ஆயத்தீர்வை பகிர்வுத் திரட்டில் எல்லாப் பொருள்களின் ஆயத்தீர்வை வருமானத்தைச் சேர்க்கத் தமிழக அரசு விரும்பியது.

மத்திய அரசு ஊழியர்களுக்கும், மாநில அரசு ஊழியர்களுக்கும் ஊதியத்தில் உள்ள ஏற்றத் தாழ்வுகளை ஒழிக்க நிதிக்குழு உதவ வேண்டும் என்று இரண்டாவது நிதிக் குழுவிடம் கோரிக்கை விடுக்கப்பட்டது. கடை நிலை ஊழியர்களது ஊதியத்தை எடுத்துக் காட்டாகக் கொண்டால் 1956-ல் மத்திய அரசு ஊழியர் ரூ. 80-ம் மாநில அரசு ஊழியர் ரூ. 43-ம் ஊதியமாகப் பெறுகின்றனர். தமிழக அரசு ஊழியரது ஊதியத்தை மத்திய அரசு ஊழியரது ஊதியத்திற்குச் சமமாக்க ரூ. 2 கோடி அவசியம். அதனை நிதிக்குழு வழங்க வேண்டும் என்று நிதிக்குழுவிடம் கோரியது. தமிழக அரசு மற்ற மாநிலங்களைப் போல் இரண்டாவது நிதிக் குழுவின் பணிக்காலத்தில் பல நிதிப் பிரச்சினைகளைக் கொண்டிருந்தது. அதில் தலையாய பிரச்சினைகளாகக் கடன்

[1] Report of II Finance commission p. 34.
[2] Report of II Finance commisson p. 72.

இரண்டாவது நிதிக்குழு பரிவுரைச் சுருக்கம்

| தலைப்பு | பகிர்வுத்திரட்டில் மாநிலங்களின் பங்கு | பகிரும் முறை | மொத்த அளவு |
|---|---|---|---|
| | | | ரூ. கோடி |
| வருமானவரி ( உள்பட ) | 60% | 90% மக்கள் தொகை | 375 |
| | | 90% மக்கள் தொகை | |
| ஆயத்தீர்வை | 25% | 90% மக்கள் தொகை | 153 |
| | | 10% மற்றவை | |
| உதவி மானியம் | — | முதல் நிதிக்குழு அடிப்படையில் | 197·20 |
| **மூன்றாவது நிதிக்குழு பரிவுரைச் சுருக்கம்** | | | |
| வருமானவரி | $66\frac{2}{3}$% | 80% மக்கள் தொகை | 555 |
| (நிறுவன வரி தவிர) | | 20 வசூல் தொகை | |
| ஆயத்தீர்வை 35 பொருள்களின் மீது | | 20% பல நோக்கங்கள் | 394 |
| விதிக்கப்படும்ஆயத் தீர்வை) | | | |
| தவி மானியங்கள் | — | முதல் நிதிகுழு அடிப்படையில் | 197 |

சுமையும், வட்டிச் செலவும் தோன்றியது. இரண்டாவது நிதிக் குழு மாநிலக் கடனைத் தொகுதியாக்கி வட்டி வீதத்தைக் குறைக்க ஓர் வேண்டுகோள் விடுத்தது. ஆனால், மத்திய அரசு இந்தச் சிபாரிசை ஏற்றுக் கொள்ளவில்லை.

மூன்றாவது நிதிக்குழு:—

திரு. சந்தா தலைமையில் அமைக்கப்பட்ட மூன்றாவது நிதி ஆணைக்குழு, மூன்றாவது திட்ட காலத்தில் மாநிலங்களின் நிதி நிலைக்கேற்பப் பரிவுரை வழங்கியது. நிதிக்குழுவின் அதிகாரங்களை அதிகமாக்கினால் மாநிலங்களின் தேவைகளுக்குத் தீர்வுகாண முடியும் என இக்குழு எண்ணியது. மூன்றாவது திட்டகாலத்தில் மாநிலங்கள் தமது மூலதனச் செலவு உயரும் என்று எண்ணி அதிக நிதி உதவி கோரினர். ஆனால், உண்மையில் பல மாநிலங்கள் தாம் பெற்று வந்த உதவி நிதித்தொகை இந்த மூன்றாவது நிதிக் குழு ஆண்டில் குறைந்தது. 1959ஆம் ஆண்டில் அமுலாக்கப்பட்ட நிதிச் சட்டப்படி நிறுவன வருமானவரி மாநிலங்களின் வருமானப் பகிர்வுத்திரட்டில் சேராது. நிறுவன வருமானவரி வருமானம் மத்திய அரசாங்கத்தை மட்டுமே சாரும். இந்தச் சட்டத்தால் அதிகம் பாதிக்கப்பட்ட மாநிலங்கள் பஞ்சாப், மகாராஷ்டிரம், மேற்குவங்காளம், தமிழகம், மைசூர் போன்ற தனியார் துறை நிறுவனங்கள் பல மிகுந்துள்ள மாநிலங்களாகும். மூன்றாவது நிதிக்குழுவின் பரிவுரைகள் முன் பக்கத்தில் உள்ளன.

தமிழக அரசு சமர்ப்பித்த வேண்டுகோளில் வருமான வரி பகிர்வுத் திரட்டில், மாநிலங்களின் பங்காக 75% ஒதுக்கவும், ஆயத்தீர்வை பகிர்வுத் திரட்டில் எல்லாப் பொருள்களின் மீது விதிக்கப்படும் ஆயத்தீர்வை வசூலினைச் சேர்க்கவும் அதில் 25 சதவீதம் மாநிலங்களுக்குப் பகிர்ந்தளிக்கவும் வேண்டியது. மூன்றாவது நிதிக்குழுவின் சிபாரிசுகளால் மாநிலங்கள் எதிர்பார்த்த அளவு நிதி உதவி பெறவில்லை.

நான்காவது நிதிக் குழு

திரு. பி. வி. இராஜமன்னார் தலைமையில் அமைக்கப்பட்ட நான்காவது நிதிக்குழு தனது அறிக்கையை 1965 ஆகஸ்டுத் திங்களில் சமர்ப்பித்தது. மற்றைய நிதிக்குழுக்களைப் போலவே இக்குழுவும் வருமான வரிப் பகிர்வு முறையையும் தொகையையும் மத்திய அரசு உதவி மானியங்கள் வழங்கும் முறையையும், ஆயத்தீர்வை பகிர்தலைப் பற்றியும் பரிவுரை வழங்க அமைக்கப் பட்டது. நான்காவது நிதிக்குழுவின் முக்கிய பரிவுரைகள் பின்வருமாறு :

நான்காவது நிதிக்குழு பரிவுரைச் சுருக்கம்

| தலைப்பு | பகிர்வுத் திரட்டில் மாநிலங்களின் பங்கு | பகிரும் முறை | தொகை |
|---|---|---|---|
| | | | ரூ. கோடி |
| வருமானவரி | 75% | 80% மக்கள் தொகை | |
| (நிறுவனவரி தவிர) | | 20% வசூல் தொகை | — |
| ஆயத்தீர்வை | 20% | 80% மக்கள் தொகை | |
| எல்லாப் பொருள்களின் ஆயத்தீர்வை) | | 20% பின்தங்கிய நிலை | — |
| உதவி மானியங்கள் | — | முதல் நிதிக் கொள்கைப்படி | 609 |
| ஐந்தாவது நிதிக்குழு பரிவுரைச் சுருக்கம் | | | |
| வருமானவரி | 75% | 80% மக்கள் தொகை | |
| | | 20% வசூல் தொகை | |
| ஆயத்தீர்வை | 20% | 80% மக்கள் தொகை | |
| எல்லாப் பொருள்களின் தீர்வையும்) | | 20% பலவித அடிப்படைகள் | |
| உதவி மானியம் | — | முதல் நிதிக்குழு அடிப்படையில் | |

தமிழக அரசு தனது வேண்டுகோளில் வருமான வரிப் பகிர்வில் 75%-ம் ஆயத்தீர்வைப் பகிர்வில் 40 சதவீதமும் மாநிலங்களுக்குப் பங்கிடக் கோரிக்கை விடுத்தது. மத்திய-மாநில ஊழியர் ஊதியத்தைச் சமப்படுத்த மத்திய அரசு நிதி உதவ நிதிக்குழு சிபாரிசு செய்யுமாறு வேண்டப்பட்டது.

ஐந்தாவது நிதிக்குழு :

1968 செப்டம்பர் மாதம் திரு. மகாவீர் தியாகி தலைமையில் ஐந்தாவது நிதிக்குழு அமைக்கப்பட்டது. மாநில அரசாங்கத்தின் அதிக பற்றுகளைக் (Overdrafts) குறைக்கவும் மாநில அரசாங்கங்களின் வரி வருவாயினைப் பெருக்கவும் புதிய வரிகள் பற்றி ஆராயவும் இக் குழுவிற்கு ஆணை பிறப்பிக்கப்பட்டது. மாநிலங்களின் தேவைகளைத் தீர ஆராய்ந்து இக்குழு மாநிலங்கள் அதிக உதவி பெறும் வகையில் மத்திய அரசிற்குப் பரிவுரை செய்துள்ளது.

கடந்த மூன்று ஐந்தாண்டுத் திட்ட காலத்திலும் மாநிலங்களின் தேவைக்கேற்ப வருவாய் உயரவில்லை. ஐந்து நிதிக் குழுக்களும் மாநிலங்களின் வருவாயினைப் பெருக்க முயன்றன. இரண்டாவது நிதிக்குழு பரிவுரையில் மாநிலங்களின் நிதிப் பிரச்சினைகளுக்குத் தீர்வுகாண அரசியல் சட்டத்தில் சில மாற்றங்கள் செய்யவேண்டும் என்று எண்ணியது.[1] மூன்றாவது நிதிக்குழு அதன் அறிக்கையில் மாநிலங்கள் தமது தன்னாட்சி உரிமையை இழப்பதாகக் கருதுகின்றன என்பதை வெளிப்படுத்தியது.[2] நான்காவது நிதிக்குழுத் தலைவரும் மத்திய–மாநில உறவுகளை அரசியல் சட்டத்தில் மறு பரிசீலனை (Review) செய்ய வேண்டும் என்று கருதினார்.[3]

மத்திய மாநில நிதிப் போக்கு :

மத்திய அரசு வருமானம் மாநில அரசு வருமானத்தைவிட நெகிழ்ச்சி மிக்கதாகும். மத்திய அரசு வருவாய் 1952–53-ல் ரூ. 545·7 கோடியில் இருந்து 1965–66 ரூ. 2182·7 கோடியாக உயர்ந்தது. மாநிலங்களின் வருமானம் 1952–53-ல் ரூ. 432·5 கோடியாகும். இது 1965–66-ல் 1755·3 கோடியாக உயர்ந்தது. நடுவண அரசின் வருவாய் சராசரி 31 சதம் ஆண்டுதோறும் உயர்ந்துள்ளது. மாநில அரசின் வருவாய் ஆண்டுதோறும் 22 சதம் உயர்ந்துள்ளது. 1952 முதல் 1965 வரை நடுவண

[1] Report of the Finance Commission (Delhi, 1957) p. 71-72.
[2] Report of the Finance Commission (Delhi, 1961) p. 36.
[3] Report of the Finance Commission (Delhi, 1965) p. 92-96.

அரசின் செலவு ஆண்டுதோறும் சராசரி 5 சதம் என்ற விகிதத்தில் உயர்ந்துள்ளது. ஆனால், மாநிலங்களின் செலவோ ஆண்டு தோறும் 4½ சதவீதத்திற்கு உயர்ந்துள்ளது. சமூக நலசேவை மாநில அரசின் பணியாக இருப்பதால் மாநில அரசின் செலவு அதிகரித்துக் கொண்டிருக்கின்றது. இந்த நிலையில் நிதிக்குழு பரிவுரைகளால் மாநிலங்களுக்குக் கிடைத்த நிதி அதன் தேவைக்கேற்ப உதவியாக இருந்ததா? நிதிக்குழு பகிர்வுத் திரட்டை மாநிலங்களிடையே பகிர்வதில் மேற்சொன்ன கொள்கை பின் தங்கிய மாநிலங்களுக்கு எந்த அளவு அனுகூலமாக இருந்தது என்பதை அறிதல் அவசியம்.

கடந்த ஐந்து நிதி ஆணை குழுக்களின் பரிந்துரைகளை நோக்கும்போது மத்திய-மாநில நிதிப் பிணக்குகளுக்குக் காரணம் தென்படுகிறது. முதல் நிதி ஆணைக் குழுவின் பரிந்துரைகளை மற்றையவைகளும் பின்பற்றின. உண்மையில் திரு. ஆட்டோ நியமியர் கூறிய கருத்துக்களையே இவ்வைந்து நிதிக் குழுக்களும் பின்பற்றின என்றால் அது மிகையன்று.[1] இந்தியாவில் நிதி ஆணைக்குழு பின்தங்கிய மாநிலங்களின் வளர்ச்சிக்காக உதவ முன் வரவேண்டும். பின்தங்கிய மாநிலங்களில் மக்கள் தொகை அதிகம். ஆனால், இயற்கைக் கனிவளமோ குறைவு. ஒரு மாநிலத்தின் வளர்ச்சியை மக்கள் தொகையைக் கொண்டு கணித்தல் கடினம். ஆனால், இந்திய நிதிக்குழு நிதிப் பங்கீட்டிற்கு மாநில மக்கள் தொகையை ஓர் அளவையாகக் கொள்கின்றது. தற்போது வருமான வரியில் மாநிலங்களின் பங்கு 75% இத்தொகை மக்கள் தொகை அடிப்படையில் 80%-ம் வசூல் தொகையில் 20%-ம் எனக் கணக்கிடப்பட்டு அளிக்கப்படுகின்றது. மக்கள் தொகை அடிப்படையில் நிதிப் பங்கீடு செய்வதால் மக்கள் தொகை அதிகமுள்ள மாநிலம் அதிக நிதி பெறும்.

இக் கொள்கை நாட்டின் மக்கள் குறைப்புக் கொள்கைகளுக்கு முரணுயுள்ளது என்பது தெளிவு. பின் தங்கிய மாநிலங்களுக்கு மக்கள் தொகை அடிப்படையில் நிதிப்பங்கீடு செய்வதால் அம்மாநிலங்களில் மக்கள் தொகைக் குறைப்புக்கு அமோக ஆதரவு கிட்டவில்லை. இச்சிக்கலை நீக்க நிதி ஆணைக்குழு ஒரு புதிய அடிப்படையில் மாநிலங்களுக்கு வருமானவரி பகிர்வுத் திரட்டினை பிரித்துத்தர வழி வகுத்தல் அவசியம். வருமானவரிப் பகிர்வுத் திரட்டிலிருந்து நிறுவனங்களின் வருமானவரி நீக்கப்பட்டுள்ளது. இதனால், மாநிலங்களுக்குப் பிரித்தளிக்கப்படும் தொகையும்

[1] Chidambaram, S—'Economic Federalism in india', M. Litt Manuscript Thesis Madras 1969, university of madras, p. 101.

குறைவாக இருக்கிறது. நிறுவன வரி வருமானம் 1950–51-ல் ரூ. 40·49 கோடியானது 1968–69-ல் 810% (அ) ரூ. 322 கோடியாக உயர்ந்துள்ளது. ஆனால், மாநிலங்களுக்குப் பகிர்ந்தளிக்கப்பட்ட வருமான வரித் தொகை 310 சதவீதமே உயர்ந்தது. மாநிலங்களின் நிதி நிலையினைச் சரியாக்க நிறுவன வரியையும் பகிர்வுத் திரட்டில் சேர்த்தல் அவசியம்.

மத்திய ஆயத்தீர்வை:—

இந்திய அரசியல் சட்டத்தின்படி மத்திய அரசு வசூலிக்கும் சில வரிகளை, மாநிலங்களோடு பகிர்ந்து கொள்ளவேண்டியது அத்தியாவசியமானது. சில வரிகளை மத்திய அரசு தன் விருப்பத்திற்கேற்ப மாநிலங்களுக்குப் பிரித்து வழங்கலும் முக்கியமானது.

அரசியல் சட்டத்தில் 272வது பிரிவின் கீழ் மத்திய ஆயத்தீர்வையை மைய அரசு வசூலித்து மாநிலங்களோடு பங்கிட்டுக் கொள்கின்றது. முதல் நிதிக்குழு மூன்று பொருள்களின் ஆயத்தீர்வையை மாநிலங்களுக்குப் பிரித்துத்தரப் பரிந்துரைத்துள்ளது. இன்று எல்லாப் பொருள்களின் மீதும் விதிக்கப்படும் மத்திய ஆயத்தீர்வையில் மாநிலங்களுக்கும் பங்கு உண்டு. இத்தொகை அம்மாநிலத்தின் பின்தங்கிய நிலையையும் மக்கள் தொகையையும் கணக்கில் கொண்டு 80 சதமும் இதர அம்சங்களின் மூலம் 20 சதமும் பரிந்துரை செய்யப்படுகின்றது. இப்படி மத்திய ஆயத்தீர்வை பங்கீட்டில் மக்கள் தொகைக்கு அதிக முக்கியத்துவம் கொடுத்தல் சரியன்று என்று பல பொருளியல் வல்லுநர்கள் கருத்துத் தெரிவித்துள்ளனர். மேற்கூறிய அடிப்படையில் மத்திய ஆயத்தீர்வையைப்பிரித்துத் தரக் காரணமே பல்வகைப் பொருள்களின் நுகர்ச்சித் திறன் பற்றித் தேவையான புள்ளி விவரங்கள் இல்லாமையே ஆகும்.

மக்கள் தொகை அடிப்படையில் 80% தருவதால் மக்கள் தொகை அதிகமுள்ள மாநிலம் அதிக நிதி பெறுகின்றது. ஆனால், மத்தியத் தீர்வை உடைய பொருள்களுக்கு தொழில் வளம் மிக்க மாநிலங்களில்தான் தேவையுள்ளது. தொழில் வளமிக்க மாநிலங்களில் நகர் மயமாக்குவதால் பிரச்சினைகள் அதிகமாகியுள்ளன. இதனால் மத்தியத் தீர்வை பங்கிடும் அடிப்படையில் மாற்றங்கள் தேவைப்படுகின்றன. இப்போது 80%மக்கள் தொகை அடிப்படையிலும் 20% நகர்ப்புற மக்கள் தொகை அடிப்படையிலும் பகிர்ந்தால் தொழில் வளம் நிறைந்த மாநிலங்கள் பலன் பெறும்.

உதவி மானியங்கள் :

கூட்டாட்சி நாடுகள் பலவற்றில், மாநிலங்களின் நிதித் தேவைகளுக்குத் தீர்வு காண மத்திய அரசு உதவி மானியங்கள் வழங்குகின்றது. பல மாநிலங்கள் உதவி மானியங்களை ஒரு வரி இல்லாத வருமானமாகக் கருதுகின்றன. பொருளாதார வளர்ச்சி யில்லாத மாநிலங்களின் வரி வருமானம் குறைவாக இருப்பதால் வளர்ச்சி நடவடிக்கை மேற்கொள்ளவும் மேம்படுத்தவும், மத்திய அரசு உதவி மானியங்களை வழங்குகிறது.

உதவி மானியங்களை இரு கூறுகப் பகுக்கலாம்.

(1) கட்டுப்பாட்டோடு கூடிய உதவி மானியம் (Conditional grant)

(2) கட்டுப்பாடற்ற உதவி மானியம் (Unconditional grant).

கட்டுப்பாடு சார்ந்த உதவிமானியம் அவற்றை ஒரு குறிப் பிட்ட வளர்ச்சித் திட்டங்களுக்குத்தான் பயன்படுத்த வேண்டும் என்ற கட்டுப்பாட்டோடு கூடியது. கட்டுப்பாடற்ற உதவி மானியம் மாநிலங்களின் பொதுவான முன்னேற்றம் கருதி வழங்கப்படுகிறது. மாநிலங்கள் இந்த உதவி மானியத்தைப் பலவித வளர்ச்சிப் பணிகளில் செலவிடலாம்.

இந்தியாவில் மத்திய அரசு வழங்கும் உதவி மானியங்கள் மேற்கூறிய இரண்டு வகைகளைச் சார்ந்தவை. திட்ட உதவி மானியங்களையும் பொது உதவி மானியங்களையும் மைய அரசு மாநிலங்களுக்கு அளிக்கின்றது. மத்திய அரசிடமிருந்து பெறும் உதவி மானியங்களைக் கீழ்க்கண்டவாறு தொகுக்கலாம்.

சட்ட பூர்வமான உதவி மானியங்கள் :—

1. அரசியலமைப்பின் 275 வது பிரிவின்படி உதவிமானியம்.
2. அரசியலமைப்பின் 273 வது பிரிவின்படி உதவிமானியம்.
3. அரசியலமைப்பின் 278 வது பிரிவின்படி உதவிமானியம்.
4. மாநில மறு சீரமைப்புச் சட்டம் 74வது பிரிவின்படி உதவி மானியம்.
5. காவல் துறைக்கு உதவி மானியம்.
6. வேளாண்மை, பால்பண்ணை, கிராமிய முன்னேற்றத் திட்ட உதவி மானியம்.

7. வன, வளப் பெருக்க உதவி மானியம்.
8. சமுதாய அபிவிருத்தித் திட்டங்களுக்கான உதவி மானியம்.
9. கல்வி. ஆராய்ச்சித்துறைக்கு உதவிமானியம்.
10. மருத்துவ, பொதுச்சுகாதார, பொதுத் திட்டங்களுக்கு உதவி மானியம்.
11. பின் தங்கிய வகுப்பினரது சேம நலத்திற்கான உதவி மானியம்.
12. சிறு தொழில் முன்னேற்றத் திட்டங்களுக்கு உதவி மானியம்.
13. துயர் துடைப்பு, மறுவாழ்வு அளிக்கும் திட்டங்களுக்கு உதவி மானியம்.
14. தொழிலாளர்களுக்கும் வேலை வாய்ப்புத் திட்டங்களுக்கும் உதவி மானியம்.
15. தங்கம் ஈட்டுத் தொகை பெறுவதற்காக உதவிமானியம்.
16. தேசியப் பேரிடர்க்கான உதவிமானியம்.
17. குறைந்த ஊதியம் பெறுவோர்க்கு ஊதியம் உயர்த்த அளிக்கும் உதவி மானியங்கள்.
18. வருமானவரிப் பகிர்வில் நிறுவன வரியினை நீக்கியதால் ஏற்பட்ட இழப்பை ஈடு செய்ய உதவி மானியம்.
19. இரயில் பயணிக் கட்டணங்கள் மீது வரிகளுக்குப் பதிலாக மானியங்கள்.
20. நாட்டின் எல்லைப்புற மாநிலங்களின் முன்னேற்றத்திற்காக வழங்கும் உதவி மானியங்கள்.
21. மற்றவை.

மூலதனக் கணக்கில் உதவி மானியங்கள்

1. தலக் கழகங்கள் முன்னேற்றப்பணி,
2. தொழிலாளர் வீட்டு வசதி, குடிசைப்பகுதி ஒழிப்பு,
3. மாநிலங்களுக்கிடையே சாலைப் போக்கு வரத்திற்கு,
4. மத்திய சாலை நிதியிலிருந்து உதவித்தொகைகள்,
5. தேசியக் குடிநீர் வசதித் திட்டங்கள்,
6. மற்றவை.

மேற்கூறிய பல விதமான உதவி மானியங்களில், நிதி ஆணைக் குழு கட்டுப்பாடற்ற உதவி மானியங்களை, இந்திய அரசியல் சட்டப் பிரிவு 275-ன்படி மாநிலங்களுக்கு வழங்கும் முறையினை மத்திய அரசாங்கத்திற்குப் பரிவுரை வழங்க அதிகாரமுண்டு. இந்தியத் திட்டக்குழு உதவிமானியங்கள் சிலவற்றினைக் குறிப்பிட்ட சில திட்டங்களுக்கென அரசியல் சட்டம் 282வது பிரிவின்படி வழங்குகின்றது.

மாநிலங்களுக்குக் கிடைக்கும் உதவி மானியங்களில் அதிகமான தொகை நிதி ஆணைக் குழுவின் பரிவுரைப்படி கிடைக்கிறது. முதல் ஐந்தாண்டுத் திட்ட காலத்தில் அமைக்கப்பட்ட முதல் நிதி ஆணைக்குழு கட்டுப்பாடற்ற உதவிமானியம் வழங்கும் நோக்கத்தையும் அடிப்படைத் தத்துவத்தையும் சிறப்பான முறையில் தெளிவாக்கியுள்ளது.

திரு. நியோஜி தலைமையில் அமைக்கப்பட்ட முதல் ஆணைக்குழு மற்ற இணைப்பாட்சி நாடுகளில் உதவி மானியங்கள் வழங்கும் முறையை அறிந்து இந்தியாவில் மத்திய அரசு அரசியல் சட்டப் பிரிவு 275-ன்படி மாநிலங்களுக்கு வழங்கும் உதவி மானியங்களைப் பின்வரும் அடிப்படையில் அளிக்க வேண்டும் என்று இயம்பியது.

1. வரவு-செலவு திட்டப் பற்றுக்குறையும் தேவையும்,
2. வரி முயற்சி,
3. செலவுக் குறைப்புத் திட்டங்கள்,
4. பின்தங்கிய நிலையினால் தரத்தில் குறைந்த பொது நலப்பணி,
5. பிரிவினை போன்ற தேசியப் பிரச்சினைகளால் ஏற்படும் விளைவுகள்,
6. நாட்டு முக்கியத்துவம் வாய்ந்த திட்டங்களுக்கு ஊக்கமளித்தல்.

முதல் நிதி ஆணைக்குழு இயற்றிய இந்த அடிப்படையிலேயே மற்ற நிதி ஆணைக் குழுக்களும் உதவி மானியங்களை வழங்கி வருகின்றன.

நடைமுறையில் உதவி மானியங்கள் வழங்குவதில் மேற்கூறிய அடிப்படைக் கருத்துக்களை நிதி ஆணைக்குழு பின்பற்றவில்லை. 1951–56-ல் இராஜஸ்தான், திருவாங்கூர்–கொச்சின், பஞ்சாப் ஆகியவை அதிகமான வரி முயற்சியை மேற்கொண்டிருந்தும்

குறைந்த அளவு உதவி மானியமே கிடைக்கப் பெற்றன. வரி முயற்சிக்கும் உதவி மானியங்கள் வழங்குவதற்கும் எந்தவிதமான உறவும் இடையாது.

உண்மையில் அதிகமான உதவிமானியம் வரவு-செலவு திட்டப் பற்றுக்குறைக்கேற்பப் பகிர்ந்தளிக்கப்படுகின்றது. 1957–62-ல் மாநிலங்கள் அதிக வரி முயற்சி மேற்கொள்ளவில்லை. மேற்கு வங்காளம், ஆந்திரப்பிரதேசம் போன்றவை எந்த விதமான வரி முயற்சியும் மேற்கொள்ளவில்லை. ஆனால், அதிகமான உதவி மானியங்களை பெற்றுள்ளன. எடுத்துக்காட்டாக மேற்குவங்காளம் ஆந்திரப் பிரதேசம் போன்றவை 8 முதல் 12 கோடி வரை உதவி மானியமாகப் பெற்றுள்ளன. வரவு–செலவு திட்டப் பற்றுக் குறையை ஓர் அளவாகக் கொண்டு உதவி மானியங்கள் அளிப்பது சிறந்த முறையன்று. வளர்ச்சியுறாத மாநிலங்கள் சில வரவு-செலவு திட்டத்தில் உபரி காண்பித்தமையால் உதவிமானியங்கள் பெற இயலவில்லை.

இந்திய இணைப்பாட்சியில் திட்டக் குழுவும், நிதி ஆணைக் குழுவும் மாநிலங்களுக்கு உதவி மானியங்கள் வழங்குகின்றன. நிதி ஆணைக்குழு மாநிலங்களின் நிதிப் பற்றுக்குறைக்கேற்ப உதவி மானியங்கள் வழங்குவதால் மாநில அரசுகள் வரவு செலவு திட்டத்தில் பற்றுக்குறை காண்பித்து அதிக மானியங்கள் பெற முயலுகின்றன. மத்திய திட்டக்குழு அளிக்கும் உதவி மானியங் களைப் பெற மாநிலங்கள் அதிக வரி முயற்சியை மேற்கொள்ளப் போவதாக உறுதியளிக்கின்றன. ஏனென்றால், அதிகமான வரி திரட்டும் மாநிலங்களுக்குத் திட்டக்குழு அதிக உதவி மானியங்கள் வழங்குகின்றன. டாக்டர் ஹேன்சன்[1] ஆராய்ச்சிப்படி சில மாநிலங்கள் திட்டக் குழுவிற்கு அதிகமான வரி வருமானம் திரட்ட உறுதியளித்தன. பின்னர் நிதி ஆணைக் குழுவிற்கு வரவு செலவு திட்டத்தில் பற்றுக்குறை காண்பித்து இரண்டு குழுக் களிடமும் உதவி மானியங்கள் பெற்றுள்ளன.

பீஹார் திட்டக் குழுவிற்கு மூன்றாவது திட்ட காலத்தில் 41 கோடி கூடுதல் வரி மூலம் திரட்ட உறுதியளித்தது. ஆனால், மூன்றாவது ஆணைக் குழுவிற்குச் சமர்ப்பித்த அறிக்கையில் பீஹார் அரசாங்கம் மேற்கூறிய அளவு நிதி திரட்ட முடியாது என்று மறுத்தது.

இந்த இரண்டு குழுக்களும், மாநிலங்களுக்கு உதவி மானியங் கள் வழங்குவதால் பல பிரச்சினைகள் தோன்றியுள்ளன. மேலும்,

[1] Dr. Hanson — 'the process of planning oxford 1965'.

உதவி மானியங்கள் வழங்கும் அடிப்படை நோக்கமே பின்தங்கிய மாநிலங்களை நல்ல முன்னேற்றம் அடையச் செய்வதே ஆகும்.

வளர்ச்சியுறாத மாநிலங்களின் வரி வருவாய் மிகக் குறைவு ஆனால், அவற்றின் செலவினமோ மிக அதிகம். நிதி ஆணைக்குழு இந்த வளர்ச்சியுறாத மாநிலங்களின் தேவைகளுக்குத் தீர்வு காணும் வகையில் அதிகமான உதவி மானியம் வழங்க முன்வர வேண்டும். இம்மாநிலங்களில் மக்கள் பெறும் சமுதாய நலத் திட்ட உதவி மற்ற வளர்ச்சியடைந்த மாநிலங்களில் உள்ளதைப் போல அமையவேண்டும்.

உதவிமானியங்களை இரண்டு வகையாகப் பிரிக்கலாம்:—

1. வளர்ச்சி பெருக்கும் உதவி மானியங்கள் (Developmental grants)
2. பின்தங்கிய மாநிலங்களில் மக்கள் வாழ்க்கைத்தரம் சம நிலைபெற உதவிமானியம் (Equalisation grants).

மேற்கூறிய இரண்டுவகை உதவிமானியங்களில் நிதி ஆணைக் குழு பின்தங்கிய மாநிலங்களில் உள்ள பொருளாதார சமுதாய ஏற்றத்தாழ்வுகளை ஒழிக்க முயலவேண்டும். திட்டக்குழு வழங்கும் உதவி மானியங்கள் மாநிலங்களிடையே வளர்ச்சி பெருக்கும் தன்மையுடையனவாக இருத்தல் அவசியம். வளர்ச்சிக்காகக் கொடுக்கப்படும் உதவி மானியங்கள் வளர்ச்சிக்கு ஏற்ற சூழ்நிலை உடைய மாநிலங்களில் வேகமான முன்னேற்றம் அடைய உதவும்.

ஆஸ்திரேலியா கூட்டாட்சியில் பின்தங்கிய மாநிலங்களாகிய டாஸ்மேனியா, தென் ஆஸ்திரேலியா, மேற்கு ஆஸ்திரேலியா முதலியவற்றில் ஒரே தரமான சமுதாயப் பணிகளை மேற் கொள்ளவே காமன்வெல்த் உதவிமானியக்குழு முயல்கின்றது.

இணைப்பாட்சி நாடுகளில் மாநிலங்களுக்கிடையே உறையும் பொருளாதார ஏற்றத் தாழ்வுகள் இணைப்பாட்சி அமைப்பிற்கே ஊறு விளைவிக்கும். இந்தியாவில் சில பின்தங்கிய மாநிலங்கள் முன்னேறாததற்குக் காரணம் நிதி ஆணைக் குழுவின் உதவி மானியங்கள் இம்மாநிலங்களின் தேவைக்கேற்ப உயரவில்லை என்பதே ஆகும். எடுத்துக் காட்டாக 1961-ல் பீஹார் நிதி ஆணைக் குழுவிடம் பெற்ற தலா உதவி மானியம் (Per capita grant) ரூ. 0·9, 1969–70-ல் இத் தொகை ரூ. 0·6 ஆகக் குறைந் துள்ளது. நிதி ஆணைக் குழு வழங்கும் உதவி மானியங்கள்

வளர்வீத முறையில் பின்தங்கிய மாநிலங்கள் அதிக தொகை பெற வழி வகுத்தல் அவசியம். மாநிலங்களின் மக்கள் தொகை, தலா வரி முயற்சி (Per capita tax effort) தலா வருமானம் (Per–capita income), தலா வளர்ச்சி செலவு (Per capita expenditure) போன்ற காரணிகளை அடிப்படையாகக் கொண்டு நிதி ஆணைக் குழு உதவி மானியங்களை வழங்கவேண்டும்.

இந்திய இணைப்பாட்சியில் பல மைய-மாநில ப்பிணக்குகளில் ஒன்று மைய மாநில ஊழியர் ஊதியத்தைச் சமநிலைப் படுத்துவதில் தோன்றும் பிரச்சினையாகும். சமதர்ம சமுதாயம் ஏற்பட வேண்டுவது முக்கியம். எனவே, ஏற்றத்தாழ்வுகள் களைந்தெறியப் படவேண்டும். ஆனால், சமதர்ம சமுதாயம் விரும்பும் இந்தியாவில் மைய மாநில அரசு ஊழியர்களுக்கிடையே உள்ள ஊதிய ஏற்றத்தாழ்வு மிகுதி. மைய அரசு ஊழியர் மாநில அரசு ஊழியர்களைவிட அதிக ஊதியம் பெறுகின்றனர்.

தமிழக அரசு கடந்த பல நிதி ஆணைக் குழுக்களுக்குச் சமர்ப் பித்த கோரிக்கைகளுள் ஒன்று மத்திய மாநில ஊழியர்களுடைய ஊதியத்திடையே காணும் ஏற்றத் தாழ்வுகளை அகற்றுதல். பின்வரும் கோரிக்கைகளையும் தெரிவித்துள்ளது. ஒரு சேம நல நாட்டு அமைப்பில் மாநில ஊழியரது உதவி மத்திய அரசு ஊழியரது உதவியைப்போல் இன்றியமையாதது. திட்டம் செயல்படுத்தப்படுவதில் மாநில அரசும் மைய அரசைப்போலவே அக்கறையும் ஆர்வமும் கொண்டுள்ளது. மாநில ஊழியர்கள் மன நிறைவுடன் பணிபுரிதல் அவசியம். இதற்கு மைய மாநில ஊழியர்களுக்கிடையேயுள்ள ஊதிய உயர்வு தாழ்வுகள் ஒழிக்கப் படவேண்டும்.

தமிழக அரசு வாழ்க்கைச் செலவு உயர்வுக்கு ஏற்பப் பஞ்சப் படியை உயர்த்திவிடுகின்றது. மத்திய அரசு மத்திய ஊதியக் குழுவின் (Pay commission) பரிந்துரைகளை ஏற்றுக் கொண்டு செயல்படுத்தும்போது மாநில அரசுகளும் அவ்வாறே உயர்த்த வேண்டியுள்ளது. 1965-ல் மாநில அரசு தம் ஊழியர்களுக்கு மாநில ஊதியக்குழு பரிந்துரையின்படி ஊதியங்களை உயர்த்திற்று. இதற்கான மொத்தச் செலவு ரூ. 5 கோடி. ஆனால், பலவித மாநில அரசுகள் மைய அரசின் ஊழியர்களது ஊதிய அளவுக்கு உயர்த்த முடியவில்லை. மத்திய அரசு மேன்மேலும் உயர்த்திற்று. மாநில அரசும் ஊதியத்தை உயர்த்தவேண்டிய நிர்ப்பந்தத்திற் குள்ளானது. தமிழக அரசு இரண்டாவது ஊதியக் குழுவின் பரிந்துரைகளை 1970, அக்டோபர் 2-ந் தேதியிலிருந்து செயல்

படுத்துவதால் 22 கோடி புதிய செலவை ஏற்க வேண்டியுள்ளது. மத்திய-மாநில ஊழியர் ஊதிய உயர்வால் ஏற்படும் விளைவுகளை ஆராய்வோம்.

1971-72 வரவு-செலவு திட்டத்தை சமர்ப்பிக்கையில் முதல்வர் டாக்டர் கலைஞர் செப்பிய கருத்துப் பின்வருமாறு.

'மத்திய அரசு தன் ஊழியர்களுக்கு வாழ்க்கைச் செலவினம் உயர்வதற்கேற்ப ஊதிய உயர்வு அளிக்க முன் வருவதை நான் வரவேற்கும் அதே நேரத்தில் மாநில அரசின் அலுவலர்களுக்கும் அம்மாதிரியான ஊதிய உயர்வு அளிக்கப்பட வேண்டிய கடமைப்பாடும் ஏற்படுகிறது என்பதை மறந்துவிடக்கூடாது. மத்திய அரசு தன் அலுவலர்களுக்கு ஊதிய உயர்வு அளிக்கும் போது மாநில அரசினருக்கு அதனால் ஏற்படக்கூடிய கூடுதல் சுமையையும் நாட்டத்திற் கொண்டு அதற்கு ஆவன செய்திட வேண்டும். மாநில அரசில் குறைந்த ஊதியம் வாங்கும் ஊழியர்களுக்கு, விலைவாசியின் உயர்வுக்கு நிகராக அளிக்கப்படும் ஊதிய உயர்வினால் ஏற்படும் செலவில் ஒரு கணிசமான பகுதியையாவது மத்திய அரசு ஏற்று மானியம் அளிக்கும் திட்டம் ஒன்றை விரைவில் உருவாக்க வேண்டும். தேசிய அளவில் ஊதியம்-ஆதாயம்-விலைவாசி இவை மூன்றும் இணைந்த ஒரு கொள்கையை உருவாக்க வேண்டிய தேவையை அண்மையில் ஆளுநர் அவர்கள் தம்முடைய பேருரையில் குறிப்பிட்டுள்ளார். அக்கருத்தை நானும் வலியுறுத்திக் கூறவிரும்புகின்றேன். அவ்வாறான சீரிய கொள்கை ஒன்று செயலுக்கு வரும் வண்ணம் உருவாக்கப் பட்டால்தான் நாட்டின் பொருளாதார நிலையை அச்சுறுத்தி வரும் விலையேற்றத்தைத் தடுத்து நிறுத்தி கட்டுப்படுத்த முடியும்'. [1]

பேராசிரியர் வியர் கூற்றுப்படி கூட்டரசு நாடுகளில் பொது அரசும் மற்ற வட்டார அரசுகள் ஒவ்வொன்றும் தம் சொந்த பொறுப்பின் கீழ் தனிப்பட்ட அலுவல்களை ஏற்று நிறைவேற்றுவதற்குப் போதிய நிதி வாயில்களைக் கொண்டிருத்தல் வேண்டும். [2] மாநிலங்கள் தமது பணியைச் செவ்வனே ஆற்றப் போதிய அளவு நிதி தேவை. நடைமுறையில் நமது அரசியல் சட்டத்தில் பகிர்ந்துள்ள வரி வாயில்களை நோக்குங்கால் மாநிலங்கள் மைய அரசினையே அதிகம் நம்பி வாழவேண்டிய நிலை ஏற்பட்டுள்ளது. இத்தகைய நிலை ஏற்படக் காரணங்கள் பல. தமிழக மாநில அரசு

[1] Karunanidhi, Dr. M—'Budget speech 1971-72 March 25, 1971', P. 6.
[2] Wheare, V.E.—'Federal governments' p. 93.

வெளியிட்டுள்ள மைய மாநில உறவு ஆய்வுக்குழு அறிக்கையில் மாநில அரசின் நிதிநிலே மோசமாக இருக்கக் காரணங்களைப் பின்வருமாறு விவரித்துள்ளது.

(1) மாநிலங்களுக்குக் கிடைக்கக் கூடிய நிதிகளைத் திரட்டுவதில் உள்ள வாயில்கள் மீள் திறமற்றதாகவும் பற்றாக் குறையாகவும் உள்ளன.

(2) மாநிலங்களுக்கு ஒதுக்கியுள்ள அலுவல்கள் விரிவடைந்து வரும் பொறுப்புக்களை கொண்டவையாகும். குறிப்பாகப் பேரார் வத்துடன் வளங்கெழுதிட்டங்கள் தீட்டப்படுகின்ற சந்தர்ப்பங் களில் செலவு பெருகி வரத்தான் செய்யும்.

(3) தேசிய நிதித்திட்டம் தயாரிப்பதற்கு முக்கியமான வாயில்கள் அயல் நாட்டு உதவியும், பற்றாக்குறை வரவு செலவு திட்டமும் ஆகும். இவையிரண்டும் மைய அரசைப் பலப் படுத்துமே தவிர மாநில அரசுகளை பலப்படுத்தாது.

இந்திய நிர்வாகச் சீரமைப்பு ஆணைக்குழு (Administrative reforms Committee) மத்திய மாநில உறவு பற்றிச் சமர்ப்பித்த அறிக்கையும் பின்வரும் கருத்தைத் தெரிவித்துள்ளது.

'மைய அரசையே பெருமளவிற்கு நம்பியிருப்பதால் மாநிலங் களின் பொறுப்பின்மை வளரவும், திறமையற்ற நிர்வாகம் ஏற்படவும் வழி உண்டாகிறது. மாநிலங்களைக் காட்டிலும் மத்திய அரசு அதிக நிதி அதிகாரம் கொண்டு இருப்பதால் மத்திய அரசு அலுவலர்களுக்குத் தங்களுக்குத் தான் எல்லாம் தெரியும் என்ற எண்ணம் ஏற்படுகிறது. மேலும், அவர்கள் மாநிலங்களின் கருத்துக்களைக் கேட்பதில்லை. எனவே, நிதி குறித்து மாநிலங்கள் மத்திய அரசை நம்பியிருக்கும் நிலை குறைந்த அளவாக்கப் பட வேண்டும்.[1]

இக்குழு மாநிலங்களின் நிதி வாயில்களைக் கூட்டவும் மத்திய அரசின் பங்கீட்டு வரிகள் பட்டியலில் மேலும் சில மைய வரிகளைச் சேர்க்கவும் சிபாரிசு செய்துள்ளது.

இப்போது கொடுப்பதை விட வரிகளில் அதிக நிதி ஒதுக்கம் மாநிலங்களுக்குக் கிடைக்கச் செய்யவேண்டும். இதனால் நடை முறையில் நாளாவட்டத்தில் 275 வது உறுப்பின் படி அளிக்கப் படுகிற உதவி மானியங்களின் தேவை முழுவதும் அற்றோ குறைந்தோ விடலாம்.

[1] Report of the Admn. Reforms Commission Delhi Vol p. 32.

இதற்காக

(அ) நிதி ஒதுக்க அடிப்படை விரிவடைய வேண்டும்.

(ஆ) பங்கீட்டுவரிகளில் மாநிலத்தின் பங்கு போதிய அளவுக்கு உயர்மட்டத்தில் நிச்சயிக்கப் படவேண்டும்.

II இந்திய அரசியலமைப்புச் சட்டத்தில் 269 வது உறுப்பில் சொல்லியுள்ள ஒப்படை வரிகளை (Assgined Taxs) முழு அளவுக்குப் பயன்படுத்தவேண்டும்.

III மாநிலங்களுக்குச் சம்பந்தப்பட்ட மைய வரிகளைப் பொறுத்தமட்டில் அவற்றிற்குள்ள உரிமை நலன்களைப் பாது காத்துக்கொள்ள வேண்டும். தங்களுக்குள்ள பொதுப் பிரச்சினைகளை ஏற்றுத் தீர்வு காண்பதற்கு வசதியாக மைய மாநில அரசுகளுக்கிடையே கலந்து ஆலோசனைகளை நடத்துவதற்கு நிறுவன அமைப்பு ஏற்படுத்தப்படவேண்டும். 1969 ஆம் ஆண்டு ஆகஸ்டுத் திங்கள் 19 ஆம் நாள் திரு. இராஜமன்னரைத் தலைவராகக் கொண்டு, Dr. A. இலட்சுமணசாமி முதலியார் அவர்களையும் திரு. B. சந்திராரெட்டி அவர்களையும் உறுப்பினராகக் கொண்டு அமைக்கப்பட்ட மூவர் குழு ஒன்று மைய மாநில உறவுகளை நன்கு ஆய்ந்து வழங்கிய பரிந்துரையில் நிதிபற்றிய உறவுகளின் சாரம் பின்வருமாறு.

நிதி பற்றிய உறவுகள்:—

கூட்டுரிமவரி (கார்ப்பரேஷன்வரி) ஏற்றுமதித் தீர்வைகள் உள்படச் சுங்க வரிகள் மற்றும் சொத்தின் மூலதன மதிப்பின் மீது வரி — பின்வருவனவற்றை, மைய அரசினும் மாநிலங்களினும் பகிர்ந்து கொள்ளத்தக்க பகிர்வு நிதித்திரட்டில் சேர்ப்பதன் மூலம் மாநிலங்களுக்கு வருவாய் வழங்கும் ஆதாரத்தை விரிவு படுத்த வேண்டும்.

(அ) கூட்டுரிமவரி (கார்ப்ரேஷன்வரி)

(ஆ) சுங்கவரிகள் மற்றும் ஏற்றுமதித் தீர்வைகள்.

(இ) சொத்துக்களின் மூலதன மதிப்பின் மீதான வரி.

ஆயத்தீர்வைகள்:—

மைய அரசின் விருப்பத்திற்குட்பட்டுப் பகிர்ந்தளிக்கத் தக்கதாயுள்ள சிறப்பு வகை, முறைவகை அல்லது பிறவகையான எல்லா ஆயத்தீர்வைகளும் மேல்வரிகளும் மைய அரசும் மாநில அரசுகளும் கட்டாயமாகப் பகிர்ந்து கொள்ளக் கூடியனவாகச் செய்யப்படவேண்டும்.

மாநிலங்களின் இசைவுடன் மட்டுமே கூடுதல் ஆயத் தீர்வைகள் தொடர்ந்திருக்கவேண்டும்.

கூடுதல் ஆயத்தீர்வைகள் நீக்கப்பட்டு அவற்றிற்குப் பதிலாக மாநிலங்கள் விற்பனை வரியை விதிக்குமிடத்தும் வரி விதிப்பு வீதம் சம்பந்தப்பட்ட வரையிலும் அது விதிக்கப்பட வேண்டிய கட்டத்தைப் பொறுத்தவரையிலும், 1956ஆம் ஆண்டு மைய விற்பனை வரிச் சட்டத்தின் (மையச சட்டம் 74/1956) 14, 15வது பிரிவுகளின்படி விற்பனை வரி விதிப்பதற்குத் தற்போது விதிக்கப் பட்டுள்ள கட்டுப்பாடுகள் முழுமையாக நீக்கப்படவேண்டும்.

286-வது உறுப்பின் (3)வது பகுப்பின் கீழ், நாடாளு மன்றத் திற்குரிய அதிகாரத்தை மாநிலங்களுடன் கலந்தறியாமல் பயன் படுத்தக்கூடாது.

மைய அரசால் விதித்து வசூலிக்கப்பட்டு ஆனால், 269வது உறுப்பின்கீழ் மாநிலங்களுக்கு ஒப்படைக்கப்பட்ட வரிகள்:— இந்த வரிகள் ஒவ்வொன்றும் வசூல் பொறுப்பு மாநிலங்களுக்கு விடப்பட்டாலும் மைய அரசால் விதிக்கப்படவேண்டும்.

வருமான வரி மீது மேல் வரி :

மாநிலங்களுக்குப் பகிர்ந்தளிக்கப்படும் வகையில் மேல் வரி வருமான வரியின் அடிப்படை வீதத்துடன் இணைக்கப்பட வேண்டும்.

எதிர் காலத்தில், கணிசமான பெரும்பான்மை மாநிலங் களின் இசைவுடன் அல்லாமல் மேல் வரி எதுவும் விதிக்கப்படக் கூடாது.

மின்சக்தி பயன்படுத்தல் அல்லது விற்பனை செய்தல்மீது வரி விதிப்பதற்கு மாநிலங்களுக்குள்ள அதிகாரத்தின் மீதான கட்டுப் பாடுகள் 287வது உறுப்பு நீக்கப்படவேண்டும்.

மானியங்கள் :

திட்டப் பணிச் செலவிற்கும் திட்டச் சார்பற்ற பணிச் செலவிற்கும் மாநில அரசுகளுக்கு மைய அரசு அளிக்கும் மானியங்கள், நிதி ஆணைக்குழு அல்லது அது போன்ற சட்டப் படிக்கான அமைப்புப் போன்ற தன்னிச்சையானதும் நடுநிலைமை யானதுமான அமைப்பின் பரிந்துரையின் மீது மட்டுமே அளிக்கப் படவேண்டும்.

நிதி ஆணைக்குழு :

நிதி ஆணைக்குழுவின் பரிந்துரைகள் இரண்டு தரப்பினரையும் அதாவது மைய அரசையும் மாநில அரசுகளையும் கட்டுப்படுத்துவதாயிருக்க வேண்டுமென்று அரசமைப்புச் சட்டத்தில் வெளிப்படையாய் வகை செய்யப்படவேண்டும்.

நிதி ஆணைக்குழு நிலையான அமைப்பாக இருக்கவேண்டும் அதற்கென்று தனியாகச் செயலகம் இருக்க வேண்டும்.

திட்ட ஆணைக்குழுவின் ஓர் உறுப்பினர் நிதி ஆணைக்குழுவின் உறுப்பினராக நியமிக்கப்படலாம்.

மாநிலங்களின் கடன்களும் கடன்பட்டிருத்தலும்

மாநிலங்கள் கடன் பட்டிருத்தல் சம்பந்தப்பட்ட முழுப் பிரச்சினையையும் ஆராய நிபுணர்கள் குழு ஒன்று அமைக்கப்படலாம். அமைக்கப்படவிருக்கும் குழு, கடன்களுக்காக மாநில அரசுகள் மைய அரசுக்கு அனுப்பும் விண்ணப்பங்கள் மீது நடவடிக்கை மேற்கொள்ளும் பொருட்டு ஆஸ்திரேலியக் கடன் மன்றம் போன்ற ஓர் ஆள்வையை அல்லது உலக வங்கியையொத்த வளர்ச்சி வங்கியை அமைக்கும் சாத்தியக்கூற்றினை ஆராயலாம்.

நிவாரண நிதி :

இயற்கைக் கோளாறுகளினால் ஏற்படும் துயர்களிலிருந்து நிவாரணம் பெற ஒவ்வொரு மாநிலத்திற்கும் நிதி இருக்கவேண்டும் இந்த நிதி செம்மைப்படுத்தும் நடவடிக்கைகளுக்கும் பயன்படுத்தப்படலாம்.

# 7. திட்டமும் மத்திய மாநில நிதி உறவும்

பொருளாதாரச் சமுதாய முன்னேற்றத்தை அடைய விரும்பும் குடியாட்சி நாடுகளுள் பாரதம் முன்னோடியாகத் திகழ்கின்றது. மேலும், கூட்டாட்சி நாடாகிய இந்தியாவில் முதன் முதலாக தீட்டப்பட்ட திட்டம் மைய மாநில அரசுகள் ஒத்துழைப்புடன் செயல்படுத்தப்பட்டு வருகின்றது. இந்தியாவில் 1935 அரசியல் சட்டத்தில் திட்டமிடுதல் பற்றி எந்தக் குறிப்பும் காணப் படவில்லை. 1951க்குப் பிறகு அமுலுக்கு வந்த அரசியல் சட்டத்தில் 'பொருளாதாரச் சமுதாயத் திட்டமிடுதல்' என்ற தலைப்பின்கீழ் திட்டம் மத்திய–மாநில அரசாங்கங்களின் அதிகாரமாகக் கருதப்படுகின்றது. இந்நாட்டின் திட்டத்தைத் திட்டமிடுதலுக்கான பொறுப்புத் திட்ட ஆணைக் குழுவிடம் (Planning commission) ஒப்படைக்கப்பட்டுள்ளது. அரசியல் சட்டத்தில் இடம் பெறாத இந்தத் திட்ட ஆணைக்குழு 1950 மார்ச் 15-ந்தேதி கூடிய மத்திய அமைச்சரவை விருப்பத்திற்கிணங்க அமைக்கப் பட்டுள்ளது. இக்குழுவில் உறுப்பினர்கள் யார்? எத்தனை பேர்? என்ன தகுதி? என்பன போன்ற வினாக்களுக்கு விடை இல்லை. இக்குழு நியமிக்கப்பட்டபோது நிரந்தரத் தன்மை அற்றது என எண்ணப்பட்டது. ஆனால், கடந்த 21 ஆண்டுகளில் திட்ட ஆணைக்குழு நிதி ஆணைக்குழுவைவிட அதிகமான அதிகாரம் பெற்றுச் செயல்பட்டு வருகின்றது.

இன்று நமது நாட்டின் பொருளாதார வளர்ச்சியில் திட்ட ஆணைக்குழு ஒரு தனிச் சிறப்பான பங்கு பெற்றுள்ளது. நாட்டின் வளத்தை இயன்ற வரையில் பயன்படுத்தி விரைவான பொருளாதார வளர்ச்சி அடையவும், அரசியல் சட்டத்திலே வரையறுக்கப் பட்டுள்ள முக்கிய இலக்குகளை மக்கள் எய்த வழி வகுக்கவும் திட்ட ஆணைக்குழு ஏற்படுத்தப்பட்டுள்ளது.

திட்ட ஆணைக்குழு ஏற்படுத்திய திட்டங்கள் இந்தியாவில் பொருளாதாரச் சமுதாய முன்னேற்றம் அடைய மிக உதவியாக

இருப்பினும் மத்திய–மாநில நிதி உறவுகளிலே தோன்றும் பல சிக்கல்களுக்கும் திட்டக் குழுவே காரணமாகும். மைய அரசு மாநில அரசுகளைத் திட்ட ஆணைக்குழு மூலம் கட்டுப்படுத்து கின்றது. 'பொருளாதார வளர்ச்சிக்காகவும், நிதி உதவிக் காகவும் மைய அரசை ஒற்றையாட்சி அரசாகச் செய்துவிட்டது திட்டமிடுதல் என்ற கொள்கை'[1]. நிர்வாகச் சீரமைப்பு ஆணைக்குழு இந்திய இணைப்பாட்சியில் திட்டத்தினுல் ஏற்பட்ட விளைவுகளைக் கீழ்க்கண்டவாறு வலியுறுத்தியுள்ளது.

மைய அரசின் அதிகாரப் பட்டியல், மாநில அரசின் அதிகாரப் பட்டியல், பொது அதிகாரப் பட்டியல் என்று பரந்து நின்ற நிர்வாக முறையைத் திட்டமிடுதலானது திட்டப்பகுதி, திட்டத்திற்கப்பாற்பட்ட பகுதியென்று இரண்டு செயல்படுத்துங் கூறுகளாகப் பிரித்துவிட்டது. திட்டமிடுதலின் பின் விளைவுகளும், கட்டாயங்களும் திட்ட உலகில் இந்த மூன்று பகுதிக் கூறுகளையும் ஒன்ருக்கி ஒரு முகம் படைத்த பாலமாக்கி மாநில அரசின் அதிகாரப் பட்டியல்களுக்காகவும் பொது அதிகாரப் பட்டியல் களுக்காகவும் மாநிலங்களில் செயல்படுத்தப்பட்டாலும் இது மைய அரசின் கட்டுப்பாட்டிற்கே உரியதாகிவிட்டது.[2] திட்டமிடுங் கொள்கை இணைப்பாட்சியை ஒதுக்கிவிட்டு ஒற்றை யாட்சி முறையை நடைமுறையில் ஏற்படுத்தியுள்ளது, என்று திரு. க. சந்தானம் 1959-ல் ஆற்றிய சொற்பொழிவொன்றில் கூறியுள்ளார்.

மாநிலத் திட்டங்களைச் செயல்படுத்த மத்திய அரசு நிதியுதவி அளிக்கின்றது. நிதி ஆணைக்குழு ஒவ்வொரு மாநிலத்திற்கும் ஐந்தாண்டுகளில் வழங்கவேண்டிய நிதியுதவியை நிர்ணயிக் கின்றது. திட்டங்களை உருவாக்குவதில் முதலில் திட்ட ஆணைக் குழுவும் பிரதிநிதிகளும் கூடி ஆலோசனை செய்த பிறகு, மாநிலத் திட்டங்களின் அளவு இறுதியாக்கப்படுகின்றது. திட்ட ஆணைக்குழு தீட்டும் ஐந்தாண்டுத் திட்டத்திற்கேற்ப மாநிலங்கள் பல துறைகளுக்கான திட்டங்களையும் இலக்குகளையும் வகுக்க வேண்டும்.

ஆனுல், இந்த மாநிலத் திட்டத்தைச் செயல்படுத்த மைய அரசு பதிவு 282–ன் கீழ் வழங்கும் உதவி மானியங்களையே நம்பி யிருக்கின்றது. எனவே, திட்டமிடுதலுக்கான நடைமுறையும் திட்ட ஆணைக் குழுவின் நடவடிக்கைகளும் பொதுவாக மாநிலத்

[1] தமிழக அரசு-மைய மாநில ஆய்வுக்குழு அறிக்கை பக்கம் 142.
[2] தமிழக அரசு-மைய மாநில ஆய்வுக்குழு அறிக்கை பக்கம் 142.

தன்னாட்சிக்கும் குறிப்பாக அரசியலமைப்புச் சட்டத்தில் மாநிலங் களுக்கெனத் தனியே ஒதுக்கப்பட்ட அதிகார எல்லைகளுக்கும் வேண்டத்தகாத விளைவை உண்டாக்குகின்றன என்பதைத் தெளிவாக அறியலாம்.[1]

திட்ட ஆணைக்குழுவின் பரிந்துரையின்படி மைய அரசு மாநிலங்களுக்கு 282வது அரசியல் சட்டப் பிரிவுப்படி வழங்கப் பட்ட உதவி மானியத் தொகை அதிகமாக வளர்ந்துள்ளது. மாநிலங்கள் திட்டத்தைச் செயல்படுத்த மத்திய அரசிடம் பெற்ற கடன் தொகையும் கூடியுள்ளது. 1950-51-ல் திட்டத்திற்காகப் பெற்ற திட்டக் கடன் தொகையும் உதவி மானியத் தொகையும் மாநிலங்களின் மொத்த மாநில நிதியில் 24·8 சதமாக உயர்ந் துள்ளது. மாநிலங்கள் திட்டத்தைச் செயல்படுத்தப் பெரும் பாலும் மத்திய அரசு வழங்கும் கடனையும், உதவி மானியத் தொகையையும் நம்பியுள்ளது.

திட்டத்தினால் மாநில நிதி எந்த அளவு பாதிக்கப்படுகிறது என்பது மாநிலத் திட்டத்தின் அளவைப் பொறுத்து உள்ளது. திட்டச் செலவு மாநிலங்களின் பல வகைச் செலவுகளில் ஒன்றாகும். வரவு செலவு திட்டத்தில் திட்டச் செலவு வருமானச் செலவிலும் மூலதனச் செலவிலும் காணப்படுகிறது. திரு. க. வெங்கட ராமன் இயற்றிய ''இந்திய மாநிலங்களின் நிதி'' என்ற நூலில் திட்டச் செலவினைத் தெளிவாக விளக்கியுள்ளார்.

குறிப்பு

வளர்ச்சிக்கல்லாத செலவு என்பது வரி வசூல் செலவு, கடன் கழிப்பு, நிர்வாகச் செலவு, பஞ்ச நிவாரணச் செலவு என்பன போன்றவை. வளர்ச்சிக்கான செலவு என்பது கல்வி, மருத்துவம் மக்கள் நலம், வேளாண்மை, கால்நடை, கூட்டுறவு, பாசனம், மின்சக்தித் திட்டங்கள் பொதுப் பணி, தொழிற்சாலைகள் முதலிய வற்றிற்கான செலவு.

மாநிலங்கள் திட்டத்திற்குச் செலவிடும் தொகை என்பது மாநில அரசாங்கம் வளர்ச்சிப் பணிக்காக மேற்கொள்ளும் பல வகைச் செலவையே குறிப்பிடுகின்றது. திட்டத்தில் இடம்பெறாத ஆனால், வளர்ச்சிப் பணிக்கான செலவு திட்டத்திற்கல்லாத வளர்ச்சிச் செலவு என்று குறிப்பிடப்படுகின்றது. திட்டப்பணியை செயலாக்க மேற்கொள்ளும் நிர்வாகச் செலவு, பொறுப்பில்

[1] தமிழக அரசு மைய மாநில உறவு ஆய்வுக்குழு அறிக்கை பக்கம் 143—1 4




இ + ஊ = திட்டச் செலவு

ஆ + இ + ஈ + ஊ + எ = வளர்ச்சிக்கான செலவு

அ + ஆ + ............ எ = மொத்தச் செலவு

ஒப்படைக்கப்பட்ட செலவு என்ற பகுதியில் இடம்பெறும். திட்டங்களைச் செயலாக்குவது மைய மாநில அரசுகளின் ஒருங் கிணைந்த பொறுப்பாகக் கருதப்படுகிறது. மாநிலங்களில் வரி வருவாய் குறைவாக இருப்பதால் பற்பல வளர்ச்சிப் பணிகளை மேற்கொள்ள முடியாமல் போகிறது. மேலும் மாநிலங்கள் திட்டத்தை வரி வருவாயை நம்பியே உருவாக்க முடியாது. மத்திய அரசு நிதி உதவியினால்தான் மாநிலங்கள் திட்டங்களைச் செயல்படுத்த முடியும். என்ற நிலை இப்போது நிலவுகின்றது. மாநிலங்கள் தமது வருவாய் கொண்டு தாமே திட்டம் வகுக்கலாம் என்ற வழக்கம் இருந்தால் முன்னேற்றமடையாத பின் தங்கிய மாநிலங்கள் பின்தங்கிய நிலையிலேயே இருக்கும். இந்தக் காரணத் தால் தான் மத்திய அரசு நிதி உதவியுடன் மாநில அரசாங்கங்கள் திட்டத்தினைச் செயலாக்குகின்றது. கடந்த ஐந்தாண்டுத் திட்டங்களில் மைய அரசும் மாநில அரசும் செய்த செலவு பின்வருமாறு :

| முன்னேற்றத் திட்டங்கள் | முதல் ஐந்தாண்டுத் திட்டம் | | இரண்டாம் திட்டம் | | மூன்றும் திட்டம் | |
|---|---|---|---|---|---|---|
| | மாநில அரசு | மைய அரசு | மாநில அரசு | மைய அரசு | மாநில அரசு | மைய அரசு |
| | ரூ. கோடியில் | | | | | |
| வேளாண்மைத் திட்டங்கள் | 165— | 76 | 246— | 24 | 637 — | 78 |
| சமுதாய வளர்ச்சிக் கூட்டுறவு | — — | 110 | 225— | 22 | 338 — | 20 |
| பாசனம் வெள்ளத் தடுப்பு, மின்சக்தி | 292 — | 266 | 345— | 75 | 647 — | 6 |
| தொழிற்சாலைகள் | 26 — | 147 | 98— | 975 | 196—1,753 | |
| போக்குவரத்து | 77 — | 409 | 163—1,118 | | 291—1,786 | |
| சமூகப்பணி | 223 -- | 106 | 438— | 274 | 848 — | 484 |
| மற்றத் திட்டங்கள் | 11 — | 127 | 48— | 51 | 67 — | 41 |
| மொத்தம் | 796— | 1,241 | 1,982—2,557 | | 4,155—4,264 | |

திட்டங்களைச் செயல் படுத்துவதில் மைய அரசும் மாநில அரசும் ஒற்றுமையோடு ஒன்றியியங்க வேண்டும் என்பதில் ஐயப் பாடில்லை. திட்டத்தின் உருவே மைய மாநில அரசுகளின் வருவாயைப் பொறுத்துள்ளது. இத்தகைய திட்டத்தை அமைப் பதில் இரு அரசுகளும் திட்டப்பிரச்சினைகளையும் அவற்றைச் செயல் படுத்துவதால் ஏற்படும் இடர்களைப் பற்றியும் தீர ஆராய்கின்றது. மாநிலப் பிரதிநிதிகள் கொண்ட சில ஆய்வுக்குழுக்கள் மூலம் முக்கிய முன்னேற்றத் தலைப்புகளும் அதற்காகக் கூடிய செலவு பற்றியும் முடிவெடுக்கப்படுகின்றது. மாநிலங்களும் சில ஆய்வுக் குழுக்கள் மூலம் மாநிலங்களின் தலையாய பிரச்சினைகள் யாவை? அப்பிரச்சினைகளுக்குத் தீர்வுகாண மேற்கொள்ள வேண்டிய செலவு என்ன என்பதைத் துருவி ஆராய்கின்றன. திட்ட ஆணைக் குழு நாட்டின் திட்டத்தை வகுப்பது பற்றியும் அதைச் செய லாக்குவது பற்றியும் விரிவான ஆய்வு மேற் கொள்ளுகின்றது. இவ்வாறு திட்டத்தின் அளவையும் முக்கிய அலகுகளையும், மொத்தச் செலவையும் நிர்ணயித்த பின்னர் ஆண்டுதோறும் மேற் கொள்ளப்படும் திட்டச் செலவைப்பற்றி முடிவெடுக் கின்றது.

மாநிலங்களின் ஓராண்டுத் திட்டங்கள் கடந்த ஆண்டு செலவுப்படி மாநிலக்குழுக்களின் ஆலோசனைக் கிணங்கவே அமைக்கப்படுகின்றன.

மாநிலங்கள் திட்டத்தின் அளவைப் பலவிதமான காரணிகள் கொண்டு நிர்ணயிக்கின்றன. மாநிலத்தின் திட்ட அளவு அதன் பொதுத் தேவைகளையும் பொதுப் பிரச்சினைகளையும், கடந்த கால முன்னேற்றத்தையும் பொறுத்துள்ளது. ஒரு மாநிலத்தின் தேவைகள் என்ன என்பதை மாநிலத்தின் மக்கள் தொகை, மொத்தப் பரப்பளவு, வரவு செலவு திட்ட நிலை. சாலைகள், பள்ளிகள், மருத்துவமனைகள், கடந்த திட்டத்தின் வெற்றி, பொதுப்பணி நிர்வாகம், போன்ற பல காரணிகளைக் கொண்டு அறியலாம். சில மாநிலங்களில் வருவாய் குறைவாக இருப்பதால் திட்டத்தின் அளவைக் குறைக்கக்கூடாது. ஆனால், சில மாநிலங்கள் வருவாயைப் பெருக்கும் திறமை பெற்றிருந்தால் அதற்கேற்ப ஓர் பெரிய திட்டத்தை அமைக்க முற்படலாம்[1]. திட்டத்தின் அளவு மத்திய அரசு வழங்கும் உதவி மானியத்தைப் பொறுத்துள்ளது.

மாநிலங்கள் பல, திட்ட ஆணைக்குழு வழங்கும் உதவி மானியத்தையும் மத்திய அரசு கொடுக்கும் கடனையும் நம்பியே

[1] Govt of India — Third Five year plan, p. 60.

திட்டங்களை உருவாக்குகின்றன. இதனால் முன்னேற்றமடைய விரும்பும் பேராவல் கொண்ட மாநிலங்களின் ஆவல் வெற்றியடையாமல் போவதற்குக் காரணம் போதிய வருமானம் இல்லாமையும் மத்திய அரசின் கெடுபிடியான கொள்கையும் ஆகும்.

மத்திய அரசு மாநிலங்களுக்குத் திட்டப் பணிக்காக வழங்கும் உதவியை இருவகையாகப் பிரிக்கலாம்.

1. மைய அரசால் முழுமையாக உதவி செய்யப்பட்டு மைய அரசால் செயல்படுத்தப்படும் திட்டங்கள்,
2. மாநில அரசு திட்டத்தைச் செயல்படுத்த மைய அரசு உதவும் திட்டங்கள் அமெரிக்காவில் மத்திய அரசு மாநிலங்களுக்கு இவ்வகை உதவியைப் பேரளவில் தருகின்றது.

மாநிலங்களின் திட்ட அளவு மத்திய அரசின் உதவி மானியங்களையும் மாநில அரசின் புதிய வரிகள் பெறும் வருவாயையும் பொறுத்துள்ளது.

மத்திய அரசு தரும் நிதியுதவி மாநிலங்களின் பலவிதத் திட்டங்களைச் செயலாக்கும் வகையில் பரவலாகக் கொடுக்கப்படுகின்றது. ஆண்டுதோறும் திட்ட ஆணைக்குழுவும், மாநில அரசுகளும் ஒன்றுகூடிப் பல திட்டங்களையும் அதற்கான செலவினையும் தீர்மானிக்கின்றன. மைய அரசு வழங்கும் உதவி முழுவதும் கடனாக இருக்கலாம் அல்லது உதவி மானியமாகவும் இருக்கலாம். மாநில அரசு திட்டத்தைச் செயல்படுத்தத் திட்ட ஆணைக்குழு அளிக்கும் உதவி மானியம் மாதந்தோறும் அளிக்கப்படுகின்றது. இத்தகைய உதவி மானியங்கள் ஒரே சீராக இல்லாமல் மாறுபடும் தன்மையைக் கொண்டவை. மத்திய அரசின் உதவியோடு மாநிலங்கள் இத்தகைய திட்டங்களைச் செயலாக்குகின்றன. இத்திட்டங்களைத் தேர்ந்தெடுப்பதில் மத்திய அரசு பெரும்பாலும் பல மாநிலங்களுக்குப் பயன் தரக்கூடிய திட்டங்களையே மேற்கொள்ள முன்வருகின்றது.

திட்டங்களைச் செயல்படுத்துவதில் மாநில அரசுகளுக்குப் பல சிக்கல்கள் தோன்றுகின்றன.

மைய உதவி பெற்ற திட்டங்களைச் செயலாக்குவதில் மாநிலங்களின் பங்கைச் செலவிட வேண்டிய அளவு நிதி வருவாய் இன்றிச் சில மாநிலங்கள் தம்முடைய பொறுப்பைச் செயலுருவாக்க முடியாமல் போகின்றது. இதனால் இத்திட்டங்களைக் குறிப்பிட்ட

காலத்தில் முடிக்க இயலாமல் கால தாமதத்தில்தான் செயலுரு வாக்க முடிகின்றது. ஆண்டுதோறும் இத்தகைய உதவி மூன்று மாதங்களுக்கு ஒரு முறை மாநிலச் செலவிற்கேற்ப வழங்கப் படுவதால் பல மாநிலங்களின் திட்டங்களைக் குறுகிய காலத்தில் செயல்படுத்த முடிவதில்லை. மேலும், மத்திய அரசு வழங்கும் நிதி உதவி ஒரே நிலையாக இல்லாமல் ஆண்டு தோறும் மாறு கின்றது. இதனால் மாநிலங்களின் திட்ட அளவும் மத்திய அரசு வழங்கும் நிதி உதவிக்கேற்ப வேறுபடுகின்றது. Dr. B. V. இராஜ மன்னார் குழு இப்பிரச்சினைகளைப் பற்றி எடுத்துரைத்துள்ளது.'

'1969-70 முதல் செயல்படத் தொடங்கியுள்ள புதுத் திட்டப்படி, தேசிய வளர்ச்சி மன்றம் நிர்ணயித்துள்ள அடிப் படையில் மாநிலங்களுக்கு மைய அரசு திட்ட உதவி செய்யும். இவ்வுதவி, மானியங்களாகவும், கடன்களாகவும், மொத்த மாகவும் கொடுக்கப்படும். குறிப்பிட்ட திட்டங்களுக்குத்தான் செலவிட வேண்டுமென்ற கட்டாயம் இல்லை. எனினும், கல்வி, வேளாண்மை போன்ற துறைகளைச் சேர்ந்த பெருந் திட்டங் களாயின் மைய அரசின் ஒப்புதலைப் பெற வேண்டும். மாநிலங்கள் தத்தம் திட்டங்களை உருவாக்குவதிலும் செயல் படுத்துவதிலும் தன்னிச்சையாய்ச் செயல்பட வேண்டும் என்ற நோக்கத்தோடு மைய அரசு முன்னின்று செயற்படுத்தும் திட்டங்களின் எண்ணிக்கை வெகுவாகக் குறைக்கப்பட்டுள்ளது. பகுதி வாரி யான திட்டமிடுதல், தனிப்பட்ட திட்டங்களையும், அவற்றிற்கான செயல் முறைகளையும் உருவாக்கிச் செயற்படுத்துதல் ஆகியவை மாநிலங்களுக்கே விடப்பட்டுள்ளன.[1]

தேசிய வளர்ச்சி மன்றக் கூட்டங்கள் பலவற்றில் பல மாநில முதல்வர்கள் ஒருமுகமாக மத்திய அரசு வழங்கும் திட்ட உதவியை மாற்றி அமைக்குமாறு கேட்கின்றனர். மைய அரசு சில திட்டங் களுக்கு முழுப்பொறுப்பேற்றுச் செயல்படுத்த முன் வரவேண்டும் என்றும் தற்போது மாநிலங்கள் திட்டச் செலவில் ஓரளவு மேற் கொள்வதைத் தவிர்க்க வேண்டும் என்றும் பல மாநிலங்களின் முதல்வர்கள் விழைகின்றனர்.

ஆனால், அத்தகைய திட்டங்களைச் செயல்படுத்தினால் மாநிலங் களின் பொறுப்புக் குறைந்துவிடும் என்றும், மேலும், மைய அரசே செலவினை மேற்கொள்ளும் திட்டங்களைத் தேர்ந்தெடுப் பதிலும் பல பிரச்சினைகள் தோன்றலாம் என்றும் மைய அரசு

[1] தமிழக அரசு—'மைய மாநில உறவு ஆய்வுக்குழு அறிக்கை' பக்கங்கள் 141-145.

கூறுகின்றது.[1] பல மாநிலங்களின் திட்டங்களுக்கு உதவும் முறையும் உதவி வழங்கும் முறையுமே நன்கு அமையவில்லை. மேலும், மைய அரசு வழங்கும் உதவி, திட்டங்களுக்கேற்ப மாறும் தன்மையைக் கொண்டுள்ளது. இதனால் மாநில அரசு திட்டம் அமைக்கக் கொண்டுள்ள ஊக்கமும் குறைகின்றது.

இணைப்பாட்சி நாடுகளில் மக்களுக்கு அருகில் இருப்பது மாநில அரசே. திட்டங்களைச் செயல்படுத்தும் இடமும் மாநிலங்களே யாகும். திட்டங்களை மாநில ஒற்றுமையின்றிச் செயலாக்க முடியாது. பொருளாதார வளர்ச்சிக்கு முக்கியமான தலைப்புகள் பல மாநிலப் பட்டியலில் காணப்படுகின்றன. எனவே, மைய அரசின் திட்டங்களை மாநிலங்களில் நிறைவேற்றும் போது மாநில அரசுக்கும் அவற்றில் தொடர்பிருக்குமாறு பார்த்துக் கொள்ள வேண்டும்[2].

மைய அரசு பொருளாதார வளர்ச்சி வீதத்தை உயர்த்தும் நோக்குடன் மாநிலங்களுக்கு உதவி மானியங்களை வழங்குகின்றது. 1969 செப்டம்பர் மாதக் கூட்டத்தில் தேசிய வளர்ச்சி மன்றம் மாநிலங்களுக்கு எந்த அடிப்படையில் உதவி மானியங்கள் திட்டப் பணிக்காக வழங்க வேண்டும் என்பதை ஆய்ந்தது. தேசிய வளர்ச்சி மன்றம் பரிந்துரைகளை ஏற்று மைய அரசு மாநிலங் களுக்குப் பின்வரும் அடிப்படையில் திட்ட உதவி மானியங்களை வழங்குகின்றது.

(அ) மக்கள் தொகை அடிப்படையில் 60 சதம்.

(ஆ) பத்து சதம் கீழ்க்கண்ட அடிப்படையில்.

1. மாநிலத் தலா வருமானம் தேசிய சராசரிக்குக் கீழே இருந்தால்
2. தலா வருமானத்தைப் பொறுத்த வரி முயற்சிகள்
3. மின்சார நீர்ப்பாசனப் பெருந் திட்டங்களுக்கான செலவுகள்
4. வெள்ளங்கள், வறண்ட பகுதிகள், மலைப் பகுதிகள் ஆகியவை கொண்ட மாநிலங்களின் தனிப் பிரச்சினைகள்.

தேசிய வளர்ச்சி மன்றம் வரையறுக்கப் பெற்றுள்ள உதவி மானியங்களைத் திட்ட ஆணைக்குழு வழங்குகிறது. திட்ட

[1] Jagoba — 'some constitutional aspect of planning in Administration and economic development in India' (Durham 1964).

[2] தமிழக அரசு, மைய மாநில உறவு ஆய்வுக் குழு அறிக்கை p. 145.

ஆணைக்குழு மாநிலங்களுக்குக் கடனாகவும் மானியங்களாகவும் கொடுக்கும். இவ்வுதவி பின்வரும் வளர்ச்சிப் பணிகளுக்காகப் பயன்படுத்தப்படல் வேண்டும்.

1. வேளாண்மை முன்னேற்றத் திட்டங்களும் மற்றச் சமூகப் பணிகளும்,
2. மைய அரசு மாநிலங்களில் ஏற்றுள்ள திட்டப் பணிக்கான உதவி,
3. தனிப்பட்ட திட்டப்பணிக்கான உதவி.

தற்போது நடைமுறையில் உதவி மானியங்கள் வழங்கப் பயன் படுத்தப்படும் அளவையில் பல குறைபாடுகள் உள்ளன. திட்ட ஆணைக்குழு வழங்கும் உதவி மானியங்கள் பொருளாதார வளர்ச்சியை உயர்த்த வேண்டிய எண்ணத்தோடு வழங்கப்படு வதாயின் பின் தங்கிய மாநிலங்களுக்கே அதிக நிதி உதவி தருதலைத் தவிர்த்தல் வேண்டும். நிதி ஆணைக்குழு வழங்கும் உதவி மானியங்களும் வரி வருவாய் பகிர்தலிலும் பின் தங்கிய மாநிலங் களே அதிக உதவி பெறுகின்றன. பின் தங்கிய மாநிலங்களுக்கே அதிக நிதி உதவி வழங்க வேண்டும் என்ற கருத்து முன்னேற்ற நோக்கங்களுக்கே எதிர்மாறாகக் காணப்படுகின்றது. பின் தங்கிய மாநிலங்களில் பொருளாதார வளர்ச்சிக்கு வேண்டிய சூழ் நிலை இன்னும் உருவாகவில்லை. ஆனால், திட்டங்களுக்கான அதிக உதவி பெறுவது பின் தங்கிய மாநிலங்களே. நிதி ஆணைக்குழு தனது முயற்சியில் மாநிலங்களுக்கிடையே உள்ள பொருளியல் ஏற்றத்தாழ்வுகளை குறைத்தல் வேண்டும். ஆனால், மத்திய திட்ட ஆணைக்குழு மாநிலங்களுக்கிடையே பொருளாதார வளர்ச்சியைப் பெருக்க வேண்டும். எந்தெந்த மாநிலங்களில் விரைவான பொருளாதார வளர்ச்சிக்குச் சாதகமாக உள்ள காரணிகள் உள்ளனவோ அங்கே திட்ட முயற்சியும் உயர்ந்தோங்க வேண்டும். நிர்வாகச் சீரமைப்பு ஆணைக்குழு (Administrative reforms-commission) நிதி நிர்வாகத்தைப்பற்றிக் குறிப்பிடும் பொழுது மத்திய அரசின் நிதி உதவி பற்றி விளக்கமாக எடுத்துரைத் துள்ளது.

மத்திய நிதி உதவி, திட்டத்தின் பரந்த நோக்கத்திற்கேற்ப மாநிலத்தேவைகளுக்குத் தீர்வு காணும்படி அமைய வேண்டும். மாநிலங்கள் திட்டத்திற்கான செலவை மேற்கொள்ள ஊக்கமளிக்க வேண்டும். ஆனால், இன்று பல துறைகளில் மாநிலங்கள் மத்திய அரசின் உதவியை நம்பியே திட்டமிடுவதால் மாநிலங்களுக்குத் திட்டம் அமைப்பதில் போதுமான சுதந்திரம் இல்லை. தமிழக அரசு 1961 லேயே மத்திய அரசு திட்ட உதவி முறையை அறவே

மாற்ற வேண்டும் என்று கோரியது. மாநிலங்களின் திட்டத் தேவைக்கேற்பக் கட்டுப்பாடற்ற திட்ட உதவி வழங்க வேண்டும் என்பதே தமிழக மாநில அரசின் வேண்டுகோள். மத்திய நிர்வாகக்குழு, திட்டக்குழுவைப்பற்றிச் சமர்ப்பித்த அறிக்கையில் திட்டக்குழு மாநிலங்களுக்கு வழங்கும் திட்ட நிதி உதவியைத் திட்டம் அமைப்பதற்கு முன்னரே அறிவிக்க வேண்டும் என்றும், மேலும், மத்திய அரசு தானே செயல் படுத்தும் திட்டங்களை தவிர்க்க வேண்டும் என்றும் பரிந்துரைத்தது.[1]

தேசிய வளர்ச்சி மன்றத்தின் பரிந்துரைப்படி வழங்கப்படும் உதவி மானியங்கள் தமிழக மாநிலத் திட்டத்தின் அளவைப் பாதித்துள்ளது தற்போது திட்ட ஆணைக்குழு உதவி மானியம் வழங்குவதில் பின்பற்றும் அடிப்படைக் கொள்கை தமிழகத்திற்குப் பாதகமாக அமைந்துள்ளது. தமிழக மாநிலத் தலா வருமானம் தேசிய சராசரி தலா வருமானத்தைவிட உயர்வாக இருப்பதால் தமிழகத்தின் நான்காவது திட்டத்தில் மத்திய அரசின் உதவி குறைக்கப்பட்டது. முதலில் நான்காவது திட்ட காலத்தில் மைய அரசு ரூ. 250 கோடி உதவுவதாய் இருந்தது. பின்னர் தேசிய வளர்ச்சி மன்றப் பரிந்துரைப்படி புதிய அடிப்படையில் உதவியளிப்பதால் தமிழக மாநிலம் மைய அரசிடமிருந்து பெறும் உதவி ரூ. 201 கோடியாகக் குறைக்கப்பட்டது. மாநிலங்கள் திட்டத்தைச் செயல்படுத்துவதில் பலவித இடர்கள் உள்ளன. அதில் முதன்மையானது நிதிப் பிரச்சினை பின்னர் மத்திய நிதி உதவி கிடைட்பின் எத்துறையில் அதிகம் செலவிடுவது போன்ற பலவித புதிய பிரச்சினைகள் தோன்றுகின்றன.

இராஜஸ்தான், மகாராஷ்டிரம் போன்ற மாநிலங்களில் ஊராட்சி நிலையிலும், வட்ட நிலையிலும் திட்டங்கள் செயலாக்கப் பட்டு வருகின்றன. இந்தியாவில் சுமார் 500 மாவட்டங்கள் உள்ளன. ஒவ்வொரு மாவட்டமும் திட்டத்தினை அமைத்தால் மாவட்ட ஆக்கச் சக்திகளைச் செவ்வனே பயன்படுத்தி அதிகமான வளர்ச்சி வீதத்தைப் பெறமுடியும்.

திட்டத்தை மாவட்டங்களை அடிப்படையாகக் கொண்டு அமைப்பதில் பலவித இடர்ப்பாடுகள் ஏற்படக்கூடும். மாவட்டத்தை அடிப்படையாகக் கொண்டு திட்டத்தைச் செயல் படுத்துவதில் தொழில் நுட்பப் பொருளாதார ஆய்வுகளை மேற் கொள்ளப் பொருளியல் வல்லுநர்கள் தேவைப்படும். தமிழகத்

[1] Govt. of India : Report of Administrative Reforms commission on Planning machinery 1968—p. 30

ஓராண்டுத் திட்டம் 1971-72 தமிழக மாநில அரசு

| தலைப்பு | | நான்காவது திட்டத்திற்கான செலவு 1969-70,73-74 | 1969-70 | 1970-71 திருத்திய மதிப்பீடு | 1971-72 திட்ட மதிப்பீடு |
|---|---|---|---|---|---|
| | | ரூ. இலட்சத்தில் | | | |
| 1. வேளாண்மை சார்ந்த துறைச் செலவு | ... | 9,106 | 1,776 | 1,646 | 1,773 |
| 2. கூட்டுறவுச் சமுதாய வளர்ச்சித் திட்டங்கள் | ... | 4,026 | 298 | 356 | 359 |
| 3. பாசனம் மின் சக்தி | ... | 20,885 | 4,190 | 3,504 | 3,228 |
| 4. தொழில் சுரங்கத்துறை | ... | 6,409 | 521 | 857 | 824 |
| 5. போக்குவரத்து | ... | 3,259 | 209 | 421 | 543 |
| 6. சமூகப்பணி | ... | 17,923 | 1,530 | 2,657 | 3,892 |
| 7. மற்றவை | ... | 759 | 36 | 46 | 52 |
| | | 62,367 | 8,560 | 9,487 | 10,671 |

திட்டக்குழு இத்தகைய திட்டத்தைச் செயல்படுத்த மாவட்டங்களுக்கு உதவும். இத்தகைய கிளைத் திட்டமே மக்களின் நலனுக்காக மக்களே மேற்கொள்ளும் திட்டம்.

தமிழக அரசு அமைக்கும் திட்டம் மேல் நிலையிலிருந்து திட்டமிடுவதற்கு எதிர்மாறாகக் கீழ்நிலையில் இருந்து திட்டமிடுவதாகும். வட்டார, மாநில, அனைத்திந்திய நிலையில் திட்டமிடுவதால் வளர்ச்சியுறாத பகுதிகளை வளர்ச்சியுற்ற பகுதிகளின் நிலைக்கேற்ப முன்னேற்றமடைய செய்துச் சீரான முன்னேற்றத்தை அடைய வழி வகுக்கின்றது. இத்தகைய திட்டமே (Decentralised plannig) கிளைத்திட்டம் என்று அழைக்கப்படுகின்றது.

கிளைத்திட்டங்கள் தீட்டுவதில் பெருஞ் சிறப்புகள் உள்ளன. நிதி முதலான வாயில்களைத்திரட்டுவதற்கும் மக்களிடையே திட்ட உணர்வைத் தோற்றுவிப்பதற்கும் நாட்டுப் புறங்களிலும் நகரங்களிலும் முடங்கிக் கிடக்கும் ஆக்கச் சக்திகளை வளர்ச்சி முறையில் ஈடுபடுத்தவும் இது உறு துணையாயிருக்கிறது. மக்களை மையமாக வைத்து இது வளர்ச்சி பெறுகிறது[1]. திரு. இராசமன்னார் குழு அறிக்கையில் மாநிலங்கள் திட்டம் பற்றிப் பின்வருமாறு பரிந்துரைக்கப்பட்டுள்ளது.

'திட்ட ஆணைக்குழுவின் பணி, மாநிலங்கள் உருவாக்கும் திட்டங்களுக்கான அறிவுரைகளை வழங்குவதாகும். மைய அரசில் உள்ள திட்ட ஆணைக்குழு அமைந்துள்ள அடிப்படையில் ஒவ்வொரு மாநிலமும் ஒரு திட்ட வாரியத்தை நிறுவிக் கொள்ளலாம். மாநிலங்கள் தொடங்கும் தொழில் திட்டங்களுக்கான வெளிநாட்டு உதவிகளைப் பெற்றுத்தருவது பற்றிய பரிந்துரைகளை மைய திட்ட ஆணைக்குழுவிற்கு எடுத்துச் சொல்லலாம்'[2].

தமிழக அரசு 1971ஆம் ஆண்டு ஜுன் திங்கள் மாநிலம் திட்டக்குழு ஒன்றினை அமைத்தது. மாநிலத்திட்டத்தைத்தீட்டும் பணி இதனுடையதாகும். இன்று, இந்தியத் திட்டம் பெருமளவு மேல் நிலையிலிருந்து தான் அமைக்கப்படுகின்றது. மாநிலப் பிரச்சினைகள், அடிப்படைத் தேவைகளுக்கேற்பத் திட்டம் அமைக்காமல் இருப்பதால்தான் இன்று மாநிலங்களுக்கிடையே பொருளாதார ஏற்றத் தாழ்வுகள் அதிகமாகத் தோன்றி உள்ளன.[3]

[1] தமிழக அரசு-மாவட்ட திட்ட ஆணைக்குழு குறிப்பு. பக்கம் 1.
[2] தமிழக அரசு, மைய மாநில உறவு ஆய்வுக்குழு அறிக்கை. p. 140.
[3] தமிழ்நாடு அரசாங்கம்-நான்காவது திட்டம் ஜுலை 1965. p. 11.

மூன்றும் திட்டத்திற்குப் பின் அமுலாக்கப்பட்ட மூன்று ஓராண்டுத் திட்டங்களின்போது தமிழகம் பல துறைகளில் விரிவான முன்னேற்றம் அடைந்தது. இந்தியாவிலேயே நெல் விளைச்சலில் வரலாறு காணாத வகையில் உற்பத்தியைப் பெருக்கியது இம்மாநிலம். இப் பசுமைப் புரட்சியால் தமிழகம் தன்னிறைவுக்கும் மிகுதியான உபரி அளவை எட்டியது.

**நான்காவது திட்டம் :**

இது 1969 ஏப்பிரல் 1 முதல் செயலாக்கப்பட்டு வருகின்றது. மாநிலங்களில் ஓராண்டுத் திட்டங்களாகப் பரிசீலிக்கப்பட்டுச் செயல்பட்டு வரும் நான்காவது திட்ட காலத்தில் தமிழகத்தின் திட்டச் செலவு கணிசமாக உயர்ந்துள்ளது. கடந்த மூன்றுண்டு களில் மாநில அரசு திட்டப் பணிக்காகச் செய்த செலவு பின்வருமாறு.

மூன்றும் திட்டகால மாநில அரசின் செலவு

| | | மத்திய அரசு உதவி பெறும் வேலைத் திட்டங்கள் | மத்திய அரசு ஊக்குவிக்கும் வேலைத் திட்டம் |
|---|---|---|---|
| | | ரூ. இலட்சத்தில் | |
| வேளாண்மை உற்பத்தி | ... | 4594 | 108 |
| கூட்டுறவுச் சமுதாய முன்னேற்றக் கிராம வளர்ச்சித் திட்டம் | ... | 2,832 | 78 |
| பாசனம் | ... | 3,280 | — |
| மின் விசை | ... | 12,128 | — |
| கைத்தறித் தொழில்கள் | ... | 2,427 | — |
| போக்குவரத்தும், சாலையும் | ... | 1,316 | 48 |
| கல்வி கலாச்சார நடவடிக்கை | ... | 3,591 | 24 |
| சுகாதாரம் | ... | 2,586 | 161 |
| நகர அமைப்பு உட்பட வீட்டு வசதி | ... | 524 | 689 |
| பின்தங்கிய வகுப்பினர் நலம் | ... | 534 | 241 |
| சமூக நலன் | ... | 17 | 6 |
| கைப்பணியாளர் பயிற்சி தொழிலாளர் நலன் | ... | 166 | 249 |
| பொதுமக்கள் ஒத்துழைப்பு | ... | 1 | 8 |
| பலவகை | ... | 56 | — |
| | | 34,052 | 1,612 |

சுமார் 350 கோடி செலவில் செயல்படுத்தப்பட்ட இத்திட்டக் காலத்தில் வேளாண்மை உற்பத்தியும், தொழில் உற்பத்தியும் உயர்ந்தது. உணவு தானிய உற்பத்தி 60 இலட்சம் டன்களுக்கு உயர்ந்தது. மின்சக்தி உற்பத்தி 1,100 மெகாவாட்டிற்கு மேல் பெருகியுள்ளது. மூன்றும் திட்ட காலத்தில் விவசாயிகள் உற்பத்தியைப் பெருக்க இரசாயன உர உற்பத்தியும் உயர்ந்தது. கல்வி, மருத்துவம், சுகாதாரம், வீட்டுவசதி, குடிநீர் வழங்கும் திட்டம் பின்னிலே வகுப்பினர் நலன் போன்ற பல சமுதாயப் பணிகளுக்கு அரசு அதிகமான செலவு மேற்கொண்டது.

1956–61ஆம் ஆண்டுகளில் செயலாக்கப்பட்ட இரண்டாவது திட்டத்தில் மாநில அரசு அதிவிரைவில் முன்னேற்றம் அடைந்துள்ளது. கனரக தொழில் வளர்ச்சிக்கு முக்கியத்துவம் கொடுக்கப்பட்ட இத்திட்ட காலத்தில் தமிழகத்தில் உணவு உற்பத்தி, 20 சதம் கூடியது. புதிய நீர்ப்பாசனத் திட்டங்களால் 3·2 இலட்சம் ஏக்கரா நிலங்களுக்கு நீர்ப்பாசன வசதி அளித்தது. மின்சார உற்பத்தி 571 மெகாவாட்டாக அதிகரிக்கப்பட்டு ஆயிரக்கணக்கான கிராமங்கள் முதன்முறையாக மின்வசதி பெற்றன. வேலையின்மையைப் போக்கவும், சிறு தொழில்களை வளர்க்கவும் அரசாங்கம் பல இடங்களில் தொழில் பேட்டைகளை அமைத்து உதவியது. இரண்டாவது திட்ட காலத்தில் சிறப்புக் கல்வி, தொழில்நுட்பக் கல்வி, ஆகியவற்றுக்கு அதிக முக்கியத்துவம் தரப்பட்டது. திட்டத்தால் சென்னையைச் சுற்றி நிறையத் தொழிற்சாலைகள் தோன்றின. இரண்டாவது திட்ட காலத்தில்தான் தமிழகம் தொழில் வளர்ச்சியடைந்தது என்றால் மிகையாகாது.

மூன்றும் திட்ட காலத்தில் பல்வேறு துறைகளில் தமிழகம் முன்னேற்றம் அடைந்துள்ளது.

பல மாநிலத் திட்டங்களில் நீர்ப்பாசனத்திற்கும் மின்சக்தி உற்பத்திக்கும் அதிக முக்கியத்துவம் அளிக்கப்பட்டுள்ளது. சில மாநிலங்களில் வேளாண்மைத்துறை, சமுதாய அபிவிருத்தித் திட்டங்கள் குடும்பக் கட்டுப்பாடு, கூட்டுறவுத்துறை போன்றவற்றிற்குத் திட்டத்தில் அதிக செலவு ஒதுக்கப்பட்டுள்ளது. திரு. K. வெங்கடராமன் ஆய்வுப்படி பல மாநிலங்களில் வேளாண்மை உற்பத்தி சமுதாய அபிவிருத்தித் திட்டங்கள், கூட்டுறவுத்துறை முதலியவற்றிற்கு மொத்தச் செலவில் 20% முதல் 25% வரை செலவிடப்பட்டுள்ளது. உத்தரப் பிரதேசத்தில் மேற்கூறிய துறைகளுக்கான செலவு 30% தமிழக அரசு மொத்தச்

செலவில் 20%ஐ இத்துறைக்கு செலவிட்டது. இராஜஸ்தான் மாநிலம் மொத்தத்தில் 32%சதவீதத்தை நீர்ப்பாசனத் திட்டங்களுக்கே செலவிட்டுள்ளது. தமிழகம் கடந்த இரு திட்டக் காலத்தில் 9%மட்டுமே நீர்ப்பாசனத் திட்டங்களுக்குச் செலவிட்டுள்ளது. இந்தச் சிறிய தொகை செலவிற்குக் காரணம் பெரிய தேக்கங்கள் தேவைப்படவில்லை. சிறு நீர்ப்பாசனத் திட்டங்களே போதுமானவை.

இந்திய மாநிலங்கள் மின்சக்தி உற்பத்திக்கு மொத்தச் செலவில் 22%சதவீதத்தையும் அதற்கு மேலும் செலவிட்டுள்ளன. தமிழகமும் பஞ்சாப்பும் இத்துறைக்காக 37 சதத்தையும், மேற்கு வங்கம், இராஜஸ்தான் போன்றவை மொத்தச் செலவில் 12%, 6சதம் என முறையே செலவிட்டன. தொழில் வளர்ச்சிக்கு மாநிலங்களின் திட்டச் செலவில் 6 சதம் ஒதுக்கீடு செய்யப்பட்டது, தமிழகம் 8 சதம், மேற்குவங்கம் 13 சதம் என்ற விகிதத்தில் செலவிட்டுள்ளனர்.

வளர்ச்சியுறுத நாடுகளில் போக்கு வரத்து முன்னேற்றம் பொருளாதார முன்னேற்றம் அடையப் பல வழிகளில் உதவியாக உள்ளது. உள்நாட்டு அங்காடியை விரிவடையச் செய்வதிலும், தொழிற்சாலைகளுக்குவேண்டிய மூலப் பொருள்களை அடைவதிலும் உதவியாய் உள்ளன. ஆனல், இதற்கு மாநிலங்களின் செலவு குறையவே குஜராத் 12சதம், அஸ்ஸாம் 10 சதம், ஆந்திரப் பிரதேசம் 3 சதத்தையும் சாலைகளுக்காகச் செலவிட்டன. மாநிலங்களின் செலவு மொத்தச் செலவில் 7% சமூகப் பணிக்கான மாநிலங்களின் செலவு உயர்ந்து கொண்டு செல்கின்றது. சராசரியாகக் கடந்த திட்டங்களில் மாநிலங்கள் 22 சதத்தை சமூகப் பணிகளுக்காகச் செலவிட்டுள்ளன. அஸ்ஸாம் 34 சதத்தையும், மேற்கு வங்கம் 32 சதத்தையும் மொத்தச் செலவில் சமுதாயப் பணிகளுக்குச் செலவிட்டுள்ளன.

நாட்டின் திட்ட இலக்குகளை அடையவும், தேசியத் திட்டத்தில் கண்டுள்ள பொருளாதாரச் சமுதாய கோட்பாடுகளைச் செயலாக்கவும் மாநிலங்கள் மத்திய அரசின் ஒற்றுமையோடு மாநிலங்களின் திட்டத்தைத் தீட்டுகின்றன. ஒவ்வொரு மாநிலமும் சீரான அபிவிருத்தியை அடையவும், இயற்கை வளங்களையும், மக்கள் திறனையும் முழுக்க உபயோகப் படுத்தவும் மாநிலத் திட்டங்களை அமைக்கின்றது. கலப்புப் பொருளாதார முறைக் கோட்பாட்டினைப் பின் பற்றும் இந்தியாவில் திட்டப்பணியில் மைய அரசு, மாநில அரசு தனியார்

துறை மூன்றும் ஈடுபட்டுள்ளன. திட்டமிட்ட முன்னேற்றத்திற்கு ஓர் எல்லை கிடையாது. இந்தியாவில் திட்டமிட்ட முன்னேற்றம் தொடங்கியது முதல் இன்றுவரை மைய மாநிலத் அரசுகள் தடையின்றிச் செயல்படுகின்றன. மாநில திட்டங்கள் மைய அரசை நம்பியே நிறைவேற்றப்பட்டுள்ளன.

| | மொத்தச் செலவு | மத்திய உதவி | சதம் |
|---|---|---|---|
| | | ரூ. இலட்சத்தில் | |
| I-வது திட்டம் (எஞ்சிய சென்னை மாநிலத்திற்காகச் சரிக்கப்பட்டது) | 80·38 | 29·85 | 37·01 |
| II-வது திட்டம் | 187·76 | 102·52 | 54·06 |
| III-வது திட்டம் | 291·00 | 190·00 | 65·03 |

முதல் திட்ட காலத்தில் மாநில அரசினால் சுமார் 75% மின் சக்தி, பாசனம், வேளாண்மை ஆகிய துறைகளுக்காகச் செலவிடப்பட்டது. சென்னை மாநில உணவு தானிய உற்பத்தி 38 இலட்சம் டன்களிலிருந்து 44 இலட்சம் டன்களாக உயர்ந்தது. மூலதனச் செலவில் 1·32 இலட்சம் ஏக்கராவுக்குப் பாசன வசதி பெருக்கும் நோக்கத்தோடு ஒன்பது புதிய பாசனத் திட்டங்களைச் சென்னை அரசு நிறைவேற்றியது.

# 8. மாநில-உள்ளாட்சி மன்ற உறவுகள்

பல்வேறு நாடுகளில் நிர்வாக அமைப்பிற்கும் பொருளாதார முன்னேற்றத்திற்கும் உறுதுணையாக உள்ளாட்சி மன்றங்கள் திகழ்கின்றன. உள்ளாட்சி மன்றங்கள் மனிதனுக்கு இருகைகள் போல மத்திய அரசிற்கு உதவி வருகின்றன. திரு. பிரைஸ் 'உள்ளாட்சி மன்றங்களே குடியாட்சியின் பள்ளிக்கூடம், என்று கூறினார். உள்ளாட்சி மன்றத் தலைவர்களே மாநில அரசின் ஆட்சியிலும், மைய அரசின் ஆட்சியிலும் தலைமையிடத்தைப் பெறுகின்றனர். இந்தியாவில் உள்ளாட்சி மன்றங்கள் நகர சபைகளாகவும், ஊராட்சிகளாகவும் அமைந்துள்ளன.

உள்ளாட்சி மன்றங்களின் மலர்ச்சிக்கான காரணங்கள்.

1. மக்கள் தொகைப் பெருக்கம்.

2. தொழிற்புரட்சி.

தொழில் புரட்சியினால் பல புதிய நகரங்கள் தோன்றியுள்ளன. கிராமிய மக்கள் பலர் நல்ல வேலைவாய்ப்பினைக் கருதி வேளாண்மையை விடுத்து நகர்ப்புறங்களில் குடியேறுகின்றனர். இவ்வாறான இடப்பெயர்ச்சியால் நகரங்கள் தோன்றுகின்றன. இந்நகரங்களில் தோன்றும் பொருளாதாரச் சமுதாயச் சிக்கல்களைத் தீர்க்கவே உள்ளாட்சி மன்றங்கள் உருவாகின்றன. மேலும், மக்கள் தொகை பெருக்கமடைவதால் சிறிய நகரங்கள் பெரிய நகரங்களாக மாறுகின்றன. இதனால் பல புதிய பிரச்சினைகள் தோன்றுகின்றன. சமுதாய நலப்பணிகளை மைய-மாநில அரசுகளைவிட உள்ளாட்சி மன்றங்கள் நல்ல முறையில் மக்களுக்கு ஆற்ற முடியும்.

இன்று இந்தியாவில் பல்வேறு பகுதிகளில் உள்ள தலையாய பிரச்சினை நகர்மயமாக்குதலால் ஏற்படும் சிக்கல்களாகும். சிறிய நகரங்கள் பெரிய நகரங்களாவதால் நன்மைகளிருப்பினும் இது

பல தீமைகளுக்கும் வழி கோலுகின்றது, எடுத்துக் காட்டாக இந்நகரங்களில் வீட்டுவசதிப் பிரச்சினை, குடிநீர்ப்பிரச்சினை ஆகியவை அதிகரித்துள்ளன. இவற்றுக்குத் தீர்வுகாண உள்ளாட்சி மன்றங்களுக்குப் போதிய நிதி வசதி அளித்தல் அவசியம்.

உள்ளாட்சி மன்றங்கள் பொருளாதார முன்னேற்றத்திற்கும் அடிப்படையாக உள்ளன. மாநிலத் திட்டங்களை அமைக்க உள்ளாட்சி மன்றங்களில் உள்ள கிராமங்களிலும், நகரங்களிலும் உள்ள தேவைகளை அறிந்தே மாநிலத் திட்டங்களைத் தீட்ட முடியும். மேலும், வேளாண்மைப் பொருள்களை விற்பனை செய்ய உதவியாக இருப்பது இத்தகைய கிராமங்களும், சிறிய நகரங்களுமேயாகும். பல துறைகளில் இவ்வுள்ளாட்சி மன்றங்கள் பொருளாதாரச் சமூக, அரசியல் முன்னேற்றத்திற்கு உதவியாக இருப்பினும் உள்ளாட்சி மன்றங்களின் நிதிநிலை மிகவும் சீர்கேடான நிலையில் உள்ளது.

இந்தியாவில் முதல் ஐந்தாண்டுத் திட்டத்தில் சமுதாய அபிவிருத்தித் திட்டம் அமுலாக்கப்பட்டது. திரு. பல்வந்தராய் குழு அறிக்கைப்படி நாட்டில் கிளைக் குடியாட்சி (Democratic-decentralisation) அமுலாக்கப்பட்டதால் கிராமப் பஞ்சாயத்துக்களும், ஊராட்சி ஒன்றியங்களும் நிர்வாகத் துறையில் முக்கியத்துவம் பெற்றன. தற்பொழுது அரசாங்க அமைப்புப் பின்வருமாறு பிரித்தமைக்கப்பட்டுள்ளது.

மத்திய அரசு



மாநில அரசு



மாவட்ட ஆட்சி



ஊராட்சி ஒன்றியம்

[80,000 மக்கள் தொகைக்குட்பட்டது]



கிராம ஊராட்சி மன்றங்கள்

**உள்ளாட்சி மன்றங்களின் பணிகள்:—**

ஊராட்சி மன்றங்களின் பணிகள், சாலை அமைத்தல், குடிநீர் வசதி, விளக்கு வசதி, சுகாதாரம், மற்றும் பல உள்ளூர் தேவை

களுக்குத் தீர்வு காணுதல் ஆகும். ஊராட்சி ஒன்றியத்தின் பணிகள் பின்வருவன :—

ஆரம்பக் கல்வி, ஆரம்பச் சுகாதார நிலையங்கள் மருத்துவ மனைகள், மருந்தகங்கள், கிராமங்களுக்கான சாலை வசதிகள், மற்ற முன்னேற்றப் பணிகள், மாவட்ட அளவில் முக்கிய பணிகள், மற்ற சாலை அமைக்கும் பணிகள், உயர் கல்வி சுகாதாரத் திட்டங்கள் முதலியவை.

1964 மார்ச்சு மாதம் முதல் இந்தியாவில் 2,00,000 ஊராட்சி மன்றங்கள், 5,33,000 கிராமங்களில் 283 மில்லியன் மக்களுக்காக இயங்கி வருகிறது.

தமிழகத்தில் 1958-ல் பஞ்சாயத்துச் சட்டம் இயற்றப் பட்டது. இன்று தமிழ் நாட்டில் பல ஊராட்சி ஒன்றியங்கள் உள்ளன. இதில் முதல் நிலை ஊராட்சி ஒன்றியங்களின் எண்ணிக்கை 375 இரண்டாம் நிலை ஊராட்சி ஒன்றியங்களின் எண்ணிக்கை 199ம் மற்றவை 175ம் ஆகும். தமிழகத்தில் உள்ள 17,300 கிராமங்களும் 271 இலட்சம் மக்களும் இவ்வூராட்சி மன்றங்களால் பயனடைகின்றனர்.

கடந்த ஆண்டில் இவ்வூராட்சி மன்றங்கள் பலவித அபிவிருத்தித் திட்டங்களைச் செயலாக்கியுள்ளன. வேளாண்மைத் துறையில் அதிக விளைச்சல் தரக்கூடிய ஐ. ஆர். 8 ஏ.டி. டி. 27, கருணை போன்ற நெல் வகைகளை விவசாயிகள் உபயோகப்படுத்தும் படி ஊக்கியுள்ளன. 2,560 எக்டார் நிலத்தில் முதன் முறையாக விளைச்சல் செய்ய இவ்வூராட்சி மன்றங்கள் உதவியுள்ளன.

1970 மார்ச்சு மாதத்துக்குள், தமிழகமெங்கும் 341 ஆரம்பச் சுகாதார நிலையங்களை ஏற்படுத்தியுள்ளன.[1]

முதியோர் கல்வியை அதிகமாக ஊக்குவித்திருக்கிறது. இவ் வூராட்சி மன்றங்கள் மூலம் 15,100 முதியோர்க்குக் கல்வி அறிவு அளிக்கப்பட்டுள்ளது. 1,370 கிலோமீட்டர் புதிய சாலைகள் அமைக்கப்பட்டுள்ளன.

கிராமப் புறங்களில் ஊராட்சி ஒன்றியங்கள் பல துறைகளில் வெற்றிகரமாக இயங்கி வருவதைப் போலவே, நகரங்களில் நகராட்சிகளும், மாநகரங்களில் மாநகராட்சிகளும் பல

[1] Govt. of India—Community development Puplication devision. 1964–p. 20

வகைகளில் மக்களுக்கு உதவி வருகின்றன. 24 லட்சம் மக்களைக் கொண்ட சென்னை மாநகராட்சி 1688-ல் அமைக்கப்பட்டது. 1970-ல் மற்ற நகர சபைகளின் எண்ணிக்கை 94 பெரும்பாலும் எல்லா நகர சபைகளும், முக்கியப் பணிகளாகிய குடிநீர் வசதியையும், பொதுச் சுகாதார வசதியையும் மக்களுக்கு வழங்கி யுள்ளன.

உள்ளாட்சி நிறுவனங்களின் நிதி முறையைப் பார்க்கும் போது முக்கியமான நிதி வாயில்கள் பின் வருவன:

1. உள்ளாட்சி வரிகளாகிய வீட்டு வரி, தொழில் வரி, (Professional tax) வண்டி வரி,
2. நிலவரி, கேளிக்கை வரி மீது உபரி வரி.
3. மாநில அரசு வரி விதித்து உள்ளாட்சி மன்றங்களுக்கு அளிக்கும் வரிகளாகிய கேளிக்கை வரி, முத்திரை மீதான உபரி வரி.
4. நிலவரி பகிர்தல்.

5. மாநில உதவி மானியங்கள் 1951-ல் அமைக்கப்பட்ட உள்ளாட்சி நிதி ஆய்வுக்குழு உள்ளாட்சி நிதிப் பிரச்சினைகளை ஆய்ந்து பின் வரும் 13 வருமான வருவாய்களைப் பரிந்துரைத்தது.

1. மக்கள் பொருள்கள் மீது விதிக்கப்படும் ஊர் எல்லை வரி (Terminal Tax)
2. நிலக் கட்டிட வரி
3. கனி வள உரிமை மீதான வரி
4. வர்த்தகர்கள் விற்பனைக்கோ, நுகர்விற்கோ, ஊர் உள்ளே வரும்போது விதிக்கப்படும் வரி.
5. மின்சக்தி விற்பனை நுகர்வு வரி,
6. விளம்பர வரி,
7. நீர் வழியாக, சாலை வழியாகச் செல்லும் பயணிகள், பொருள்கள்மீது வரி,
8. வண்டி வரி,
9. மிருக வரி, படகு வரி,
10. சுங்க வரி,
11. தொழில் வரி,

12. தலை வரி அல்லது ஆள் வரி,
13. கேளிக்கை வரி.

இவற்றைத் தவிர மாநிலங்கள் உள்ளாட்சி மன்றங்களுக்கு உதவி மானியங்களும், வழங்க வேண்டும் என்று பரிந்துரைத்தது.

1953–54-ல் வரி ஆய்வுக்குழு உள்ளாட்சி மன்றங்களின் வரி அதிகாரங்களைப்பற்றி நன்கு ஆராய்ந்து பின்வருவனவற்றை உள்ளாட்சி மன்றங்களுக்கே வழங்க அரசாங்கத்திற்குப் பரிந்துரைத்தது.

1. நிலம், கட்டிடம் மீது விதிக்கப்படும் வரி
2. விற்பனைக்கோ, நுகர்விற்கோ, பொருள்களை ஊரினுள் கொண்டு வரும்போது விதிக்கப்படும் வரி (Octroi tax).

உதவி மானியங்களை வழங்குவதில் மாநில அரசு அதிகமாக வழங்க முன்வர வேண்டும் என்று இந்த ஆய்வுக்குழு எண்ணியது. உதவி மானியங்கள் பின்வரும் அடிப்படையில் வழங்கப்பட வேண்டும்.

1. ஒவ்வொரு உள்ளாட்சி மன்றத்திற்கும் பொது நோக்கு உதவி மானியம் வழங்கப்பட வேண்டும். பெரிய நகராட்சிகளுக்கும், மாநகராட்சிகளுக்கும் இத்தகைய உதவி மானியங்கள் வழங்கப்படக் கூடாது.
2. உள்ளாட்சி மன்றங்களை, மக்கள் தொகை பரப்பளவு, நிதி வளம் போன்ற கூறுகளுக்கேற்ப வகைப்படுத்தி உதவி மானியங்களை வழங்குதல் வேண்டும்.
3. இந்த அடிப்படை உதவி மானியங்கள் உள்ளாட்சி மன்றங்களின் கட்டாயப் பணிகளை மேற்கொள்ள உதவுவதாய் இருத்தல் அவசியம்.
4. இந்த அடிப்படை உதவி மானியம் மூன்று அல்லது ஐந்தாண்டுகளோ அதற்கு மேலோ தொடர்ந்து தருதல் அவசியம்.
5. இந்த அடிப்படை உதவி மானியத்தைத் தவிர மற்ற ஆண்டுதோறும் சில பணிகளுக்காக குறிப்பிட்டு வழங்கப்படும் உதவி மானியங்களும் அளிக்கப்படுதல் அவசியம்.

தற்போது நடைமுறையில் உள்ளாட்சி மன்றங்களின் நிதிநிலை பாராட்டத்தக்கமுறையில் இல்லை. பல உள்ளாட்சி நிறுவனங்களின்

## பல மாநிலங்களில் நகர ஆட்சி மன்றங்களின் செலவிற்கேற்ப வருமானம் கிடையாது

| 1<br>மாநிலம் | | 2<br>விரும்பத்தக்க<br>செலவு அளவு | 3<br>தற்கால<br>வருமானம் | 4<br>பற்றுக்குறை | 2ல் 3வது<br>சதவீதம் |
|---|---|---|---|---|---|
| | | | ரூ. கோடியில் | | |
| ஆந்திரா | ... | 14·37 | 5·83 | 8·54 | 41 |
| அஸ்ஸாம் | ... | 1·82 | 0·74 | 1·08 | 41 |
| பீஹார் | ... | 8·21 | 3·43 | 4·78 | 42 |
| குஜராத் | ... | 14·74 | 10·70 | 4·04 | 73 |
| ஜம்மு & காஷ்மீர் | ... | 1.64 | 0·40 | 1·24 | 24 |
| கேரளா | ... | 4·64 | 1·45 | 3·19 | 31 |
| மத்தியப் பிரதேசம் | ... | 10·87 | 5 40 | 5·47 | 50 |
| தமிழ் நாடு | ... | 18·58 | 11·85 | 6·73 | 64 |
| மகாராஷ்டிரம் | ... | 36·80 | 29·10 | 7·70 | 79 |
| மைசூர் | ... | 13·53 | 6·99 | 6·54 | 52 |
| ஒரிஸ்ஸா | ... | 2·44 | 0·70 | 1·74 | 29 |
| பஞ்சாப் | ... | 9·95 | 6·94 | 3·01 | 70 |
| இராஸ்தான் | ... | 8·71 | 2·46 | 6·25 | 28 |
| உத்தரப் பிரதேசம் | ... | 29·15 | 14·61 | 14·54 | 50 |
| மேற்கு வங்காளம் | ... | 25·98 | 11·23 | 14·74 | 43 |
| இந்தியாவெங்கும் டெல்லி உள்பட | ... | 211·28 | 120·20 | 91·68 | 57 |

மூலம் ; K. Venkataraman, State Finances in India, p. 213.

தலா வருவாய் ஒரு ரூபாய்க்குக் குறைவாகவும் இருக்கக் கூடும்.

உள்ளாட்சி மன்றங்களின் பணிகள் வளரும் தன்மையைக் கொண்டன. மக்கள் தொகைப் பெருக, புதிய பிரச்சினைகள் தோன்றும், புதிய பிரச்சினைகளுக்குத் தீர்வுகாண அதிக வருமானம் தேவை. நகர உள்ளாட்சி மன்றங்களிலும், மற்ற உள்ளாட்சி மன்றங்களிலும், பல புதிய பிரச்சினைகள் தோன்றுகின்றன. ஆனல், மாநில அரசு வழங்கும் உதவி மானியங்களோ, உயர்வது இல்லை. மேலும், உள்ளாட்சி வரிகள் நெகிழ்ச்சித் தன்மை உடையன அல்ல.

உள்ளாட்சி மன்றங்களுக்கு மாநில அரசு வழங்கும் தொகை தேவைக்கேற்ப இல்லை. மாநிலங்கள் வழங்கும் உதவி மானியங்கள்பல, சில குறிப்பிட்ட திட்டங்களுக்காகவே வழங்குவதால் உள்ளாட்சி மன்றங்களுக்கு அதிகம் பயன் படுவதில்லை. சில மாநிலங்களில் மாநில உள்ளாட்சி மன்றங் களுக்கு வழங்கும் உதவி மானியங்கள் :

| மாநிலம் | ஊராட்சி ஒன்றியம் பெற்ற உதவி மானியம் | மாநிலச் செலவு | மொத்தச் செலவில் உதவி மானியங்கள் தொகை சதவீதத்தில் |
|---|---|---|---|
| | ரூ. கோடியில் | | |
| ஆந்திரா | 26·73 | 113·91 | 23% |
| தமிழ்நாடு | 29·42 | 120·77 | 24% |
| மஹாராஷ்டிரம் | 41·15 | 156·88 | 26% |

மூலம் : K. Venkataraman : S.F.I. p. 202.

1963-ல் அமைக்கப்பட்ட ஊராட்சி ஒன்றிய ஆய்வுக்குழு ஊராட்சி மன்றங்களின் நிதிநிலையை மாற்றியமைக்கப் பல புதிய முறைகளைப் பற்றிப் பரிந்துரைத்தது. முன்னேற்றத் திட்டங்களை அமுலாக்க ஊராட்சி மன்றங்களுக்கு அதிக வரி விதிக்கும் அதிகாரங்கள் வழங்கவேண்டும். நிலவரி, வீட்டு வரி மேல் ஒரு

[1] K. Venkataraman, State Finances of India, p. 205. Asia, 1968.

சிறப்பு வரி விதிக்கலாம். ஊரில் உள்ள பொது நிலம், மரங்கள், கிணறுகள், ஊராட்சி மன்றங்களுக்குச் சொந்தமாகும். ஓர் அடிப்படை உதவி மானியமாகத் தலா ஒரு ரூபாய் இவ்வூராட்சி மன்றங்களுக்கு அளித்தல் அவசியம். இக்குழு பரிந்துரையினால் புலனாகிய ஓர் உண்மை யாதெனில் ஊராட்சி ஒன்றியங்களின் நிதி நிலை மோசமானதாக உள்ளது என்பதும் அதற்கு உடனடியாக மாநில அரசு நடவடிக்கை எடுக்க வேண்டும் என்பதுமாகும்.

இன்று மாநில அரசு தனது பணியைச் செவ்வனே செயலாக்க மத்திய அரசின் நிதி உதவியை நம்பியிருப்பது போலவே உள்ளாட்சி மன்றங்களும் மாநில அரசின் நிதி உதவியை நம்பியிருக்கின்றன. இந்த நிலையைப் போக்க இரு வழிகள் உண்டு.

1. நடைமுறையில் மாநில அரசு உள்ளாட்சி மன்றங்களுக்கு நிதி பகிர்ந்தளிக்கும் முறையை மாற்றியமைக்க வேண்டும்.

2. அல்லது உள்ளாட்சி மன்றங்கள் புதிய வரி வாயில்களைக் கொண்டு அதிக வருவாய் பெருக்க முயற்சி செய்தல் வேண்டும்.

1965-ல் அமைக்கப்பட்ட மைய உள்ளாட்சி மன்றக்குழு அறிக்கையில் உள்ளாட்சி மன்றங்களின் நிதி நிலைமையை மாற்றச் சில வழிகளைப் பற்றிப் பரிந்துரைத்தது.

1. தற்போதுள்ள வரிவாயில்களைச் சிறந்த முறையில் பயன்படுத்துதல்.

2. சில மாநில வரிகளின் முழு வருவாயினையோ ஒரு பங்கினையோ உள்ளாட்சி மன்றங்களுக்கு வழங்குதல் வேண்டும்.

3. உதவி மானியங்கள்.

4. புதிய வரிவாயில்களை உபயோகப்படுத்துதல். மோட்டார் வண்டி வரி வசூலில் 25% உள்ளாட்சிமன்றங்களுக்கு அளித்தல் வேண்டும். இவற்றைத் தவிர ஆண்டுதோறும் மாநில அரசு தலா உதவி மானியமாக ரூ. 0·25 முதல் ரூ. 1.50 வரை உள்ளாட்சி மன்றங்களின் நிதி நிலைக்கேற்ப அளித்தல் வேண்டும்.

## தமிழகத்தில் ஊராட்சி மன்றங்கள் பெற்ற உதவி மாயனிங்கள்

| எண் | திட்டத்தின் பெயர் | 1967-68 | 1968-69 | 1969-70 | 1970-71 |
|---|---|---|---|---|---|
| | | | ரூ· இலட்சத்தில் | | |
| 1. | வேளாண்மைத் துறை உதவி மானியம் ... | 111·35 | 109·31 | 96·29 | 112·50 |
| 2. | கிராமப் பணிகளுக்கான உதவி மானியம் ... | 271·05 | 247·28 | 264·74 | 308·30 |
| 3. | ஆரம்பக் கல்வி, மதிய உணவு திட்டத்திற்காக உதவி மானியம் ... | 2,162·95 | 2,069·01 | 2,327·24 | 2,546·25 |
| 4. | சமூக கல்வி மாதர் குழந்தை நலத்திற்காக ... | 26·47 | 18·80 | 35·88 | 32·86 |
| 5. | ஊக்கமளிக்கும் உதவி மானியம் ... | 341·65 | 419·19 | 459·00 | 541·00 |
| 6. | பராமரிப்புக்கு ... | 220·79 | 235·31 | 202 43 | 203·50 |
| 7. | ஊராட்சி மன்றங்களுக்கு அளிக்கப்பட்ட வருவாய் ... | 1,523·75 | 1,793·20 | 1,841·00 | 1,973·00 |
| 8. | சிறப்பு பணிகளுக்கு ... | 71·03 | 63·91 | 66·01 | 1 74·33 |
| 9. | கிராமியக் கைத்தொழில், நுண்கலை, தொழில் மானியங்கள் ... | 28·48 | 11·40 | 16 00 | 15 00 |
| 10. | ஆரம்ப சுகாதார நிலையங்கள் ... | 74·51 | 91·15 | 97·67 | 110·13 |
| 11. | பூர்வீசக் குடி முன்னேற்றத்திற்காக ... | 17·72 | 8·30 | 10·00 | 12·20 |
| 12. | வேளாண்மை விரிவுபடுத்தும் திட்ட பயிற்சிக்காக | 16·82 | 17·32 | 26·55 | 20·43 |
| 13. | பணியாளர் செலவு ... | 418·47 | 460·66 | 470·40 | 476·62 |
| | | 5,285·04 | 5,544·84 | 5,913·21 | 6,526·12 |
| மாநிலம் அளித்த கடன் | | | | | |
| | கிராம முன்னேற்றத்திற்காக மாநில அரசு வழங்கிய கடன், முன்பணம் ... | 188·48 | 173·69 | 434·71 | 165·92 |

மூலம்: Tamilnadu-An Economic abstract 1971, p. 301.

தமிழக நகர சபைகள் வருமானம் 1962–63

| | | ரூ. இலட்சத்தில் |
|---|---|---|
| சொத்து வரி | ... | 119·17 |
| தொழில் வரி | ... | 22·10 |
| கேளிக்கை வரி | ... | 81·80 |
| மற்ற வருவாய் | ... | 61·84 |
| | ... | 284·91 |
| கழிக்க வேண்டியவை | ... | 0·52 |
| நிகர வருமானம் | ... | 284·39 |

மூலம் ; Tamilnadu-An Economic apprasial 1970, p. 59.

# முடிவுரை

வளர்ச்சியுருத இணைப்பாட்சி நாடாகிய இந்தியாவில் மாநிலங்களிடையே ஒரே சீரான முன்னேற்றம் அடைதல் கடினம். சில மாநிலங்களில், தமிழகம் உள்பட விரைவான முன்னேற்றத்திஞல் வருமானமும் உயர்ந்துள்ளது. ஆனால், மாநிலச் செலவு வருமானத்தைவிடக் கூடுதலாக உயர்ந்துள்ளதால் பலவித நிதிப் பிரச்சினைகள் தோன்றியுள்ளன. திட்ட ஆணைக்குழுவும், நிதி ஆணைக்குழுவும் நிதித் துறையிலே செயல்படுவதால் மாநிலங்களுக்கு நன்மை பயக்கும் விதத்தில் செயல்படுவதில்லை. திட்டத்திற்காக வழங்கப்படும் மானியங்களும், கடன்களும் திட்ட ஆணைக்குழுவின் பரிந்துரையைப் பொறுத்துள்ளது. வரிகளைப் பகிர்தல் மானிய உதவி வழங்குதல் நிதி ஆணைக்குழுவின் முக்கிய பணிகளாகக் கருதப்படுகின்றன. இதனுல் விரைவான வளர்ச்சிக்கு ஆதாயமாக உள்ள மாநிலங்களுக்கு அதிக நிதி உதவியளிக்க இவ்விரண்டு குழுக்களும் முன் வருவதில்லை. பெரும்பாலும் பின் தங்கிய மாநிலங்களுக்கே அதிக நிதி உதவி அளிக்கின்றன. தமிழகம் இந்தியப் பொருளாதார வரைப்படத்திலே ஒரு முன்னேற்றமடைந்த மாநிலமாகவே தோன்றுகிறது. ஆனால், வளர்ச்சி வீதத்தைப் பெருக்க அதிக நிதி தேவைப்படுகிறது. திட்ட ஆணைக்குழு விரைவான வளர்ச்சிக்கு ஆதாயமாக உள்ள மாநிலங்களுக்கு அதிக நிதி உதவி வழங்கவேண்டும். நிதி ஆணைக்குழு மாநிலங்களிடையே சீரான சமூகநல முன்னேற்றத்தை அடைய உதவவேண்டும்.

தமிழகத்தில் பல நிதிப் பிரச்சினைகளுள் தலையாய பிரச்சினையாக விளங்குவது மாநிலப் பொதுக்கடன் பிரச்சினையாகும். மாநிலங்கள் ஆண்டுதோறும் மத்திய அரசிடம் கடன் பெறவும், ரிசர்வ் வங்கியிடம் அதிகப் பற்று கடன் பெறவும் காரணங்கள் பல. திட்டப் பணிக்காக மத்திய அரசு வழங்கும் உதவிமானியங்கள் உகந்த நேரத்தில் வழங்காமல் இருப்பதால் திட்டங்களைச் செயலாக்க மாநிலங்கள் கடன் பெறுகின்றன. மைய அரசு

மாநில அரசாங்கங்களை ஆலோசிக்காமல் தமது ஊழியரது ஊதியத்தை உயர்த்துவதால் மாநில அரசாங்கங்களும் தமது ஊழியரது ஊதியத்தை உயர்த்தக் கடன் பெற்றுவது நிறைவேற்றுகிறது.

1967 பொதுத் தேர்தலுக்கு முன்னர் ஒரே கட்சி மாநிலங்கள் பலவற்றில்ஆட்சி அமைத்திருந்ததால் நிதிப்பிரச்சினைகளை தவிர்க்க முடிந்தது. ஆனால், 1967 பொதுத் தேர்தலுக்குப் பின்னர் பல புதிய கட்சிகள் புரட்சிகரமான கொள்கைகளோடு ஆட்சிபீடம் ஏறியது ; ஆனால் அக்கொள்கைகளை செயலாக்க போதிய வருவாய் தேவை என்பதை உணர்ந்தன. உண்மையில் மாநில வரி வாயில் களையும் மைய வரி வாயில்களையும் ஒப்பிட்டு கணக்கிடும்போது, நெகிழ்ச்சி மிக்க அதிக வருவாய் ஈட்டக்கூடிய வரி வாயில்கள் மைய அரசிடமே குவிந்துள்ளன. இந்த நிலை மாறவேண்டும். இந்திய இணைப்பாட்சி முறை (Federal) வளர்ச்சிக்கும் மைய-மாநில உறவுகளைப் பயனடையும் வகையில் மாற்றி அமைக்க அரசியல் சட்ட அதிகாரப் பகிர்வு அட்டவணையில் மாற்றங்கள் ஏற்படுத்துதல் அவசியம். தமிழகத்திலே ஒளிமயமான எதிர்காலம் அமைக்கவும், விரைவான முன்னேற்றமும் சமூகநீதியும் எய்த மேலும் அதிக வருமானம் அவசியம். மேலும் கடன்பிரச்சினை களுக்குத் தீர்வுகாண ஆஸ்திரேலியாவில் உள்ள கடன் மன்றம் போலவே இந்தியாவிலும் ஒன்றினைத் துவக்க வேண்டும், மாநில நிதிப் பிரச்சினையை ஆய்ந்து பரிந்துரை வழங்கும் நிதி ஆணைக் குழுவினை நிலையான குழுவாக மாற்றவேண்டும். திட்டப்பணியில் தேசியத் திட்டம் தீட்டுவதே மைய-மாநில அரசாங்கங்களின் பொறுப்பாகும். வளர்ச்சியுறாத நாடுகளில் முன்னேற்றத்துக்காகத் திட்டமிடுதல் தொடர்ந்து நடைபெறும் நிகழ்ச்சி இத்திட்டங்கள் வெற்றியடைய மாநிலங்களின் இயற்கை வளங்களையும் மக்கட் சக்தியையும் முழுவதுமாகப் பயன்படுத்துதல் அவசியம். இதனைக் கருதியே தமிழக முதல்வர் மாநிலத் திட்டக்குழுவினை அமைத் துள்ளார். எல்லா மாநிலங்களும் தமிழக மாநிலத்தை போல் மாநிலத் திட்டங்களைத் தீட்டி மத்திய அரசின் ஒற்றுமையோடு செயல்படுத்த முயல வேண்டும்.

---